உ

ஓம் சிவாய சிவ, ஓம்.

திருமூலர் அருளிய திருமந்திரம்

மூலம் - சுருணமயும்.

பத்தாம் திருமுறை

பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீடு எண் 17

உ
சிவ சிவ
திருச்செந்திலாண்டவன் துணை

திருமந்திரமாலை
எனப் பெயர் பெற்ற

# திருமந்திரம்

பத்தாம் திருமுறை

*

கீலக ஆண்டு திருமூலர் திருநாள்
4—11—1968

*

ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் :: ஸ்ரீவைகுண்டம்

பன்னிருதிருமுறைப் பதிப்புநிதி வெளியீடு : (17)

உ

சிவ சிவ

திருமூலநாயனர் அருளிய

## திருமந்திரமாலை

எனப்பெயர் பெற்ற

# திருமந்திரம்

பத்தாம் திருமுறை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

8-4-1950-ல் நிறுவிய

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பன்னிரு திருமுறைப்
பதிப்பு நிதியிலிருந்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின்

திருவுளப்பாங்கின் வண்ணம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர்,

வித்துவான் ஸ்ரீமத் முத்துக்குமார சுவாமித் தம்பிரான் அவர்களால்

வெளியிடப்பெற்றது.

பதிப்பாசிரியர் :

T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,

நிரந்தரத் தலைவர்,

ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் — ஸ்ரீவைகுண்டம்.

( கீலக ஆண்டு ஐப்பசி அசுவதி )

ஸ்ரீவைகுண்டம்]     4—11—1968     [விலை ரூ. 2-50

## பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி வெளியீடுகள்

| | நூற்பெயர் | ஆண்டு | பிரதிகள் | விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | திருமந்திரம் | 1956 | 1000 | 2–50 |
| 2. | அகத்தியர் தேவாரத் திரட்டு | 1956 | 2000 | 0 37 |
| 3. | திருநாவுக்கரசர் தேவாரம் தலமுறை | 1957 | 2000 | 2-25 |
| 4. | திருவாசகம் | 1957 | 2000 | 0-60 |
| 5. | சுந்தரர் தேவாரம் தலமுறை | 1958 | 3000 | 1-30 |
| 6. | திருக்கோவையார் பேராசிரியருரையும் பழையவுரையும் | 1960 | 2000 | 2–90 |
| 7. | திருமந்திரம் (2-ம் பதிப்பு) | 1960 | 3000 | 2–25 |
| 8. | திருஞானசம்பந்தர் தேவாரம் தலமுறை | 1961 | 3000 | 2-75 |
| 9. | திருநாவுக்கரசர் தேவாரம் தலமுறை (2-ம் பதிப்பு) | 1961 | 3000 | 2–00 |
| 10. | திருவாசகம் (2-ம் பதிப்பு) | 1962 | 10000 | 0–56 |
| 11. | பதினோராந் திருமுறை | 1963 | 3000 | 1–50 |
| 12. | திருத்தொண்டர் புராணம் | 1964 | 3000 | 3–00 |
| 13. | திருவிசைப்பா திருப்பல்லாண்டு(தெளிவுரை) | 1964 | 3000 | 1–50 |
| 14. | சுந்தரர் தேவாரம் தலமுறை (2-ம் பதிப்பு) | 1965 | 3000 | 1–30 |
| 15. | அகத்தியர் தேவாரத்திரட்டு | 1965 | 3000 | 0–36 |
| 16. | மூவர் தேவாரம் (தலமுறை) (காலிக்கோ கட்டடம்) | 1968 | 2000 | 8–75 |
| 17. | திருமந்திரம் (3-ம் பதிப்பு) | 1968 | 3000 | 2–50 |

குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம். 11–68

உ

சிவ சிவ

# பதிப்புரை

" மூல னுரைசெய்த மூவாயி ரந்தமிழ்
ஞால மறியவே நந்தி யருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே "

இது திருமந்திரம் - பாயிரம் - 99 ஆவது பாடல்; ' திருமந்திரத் தொகைச் சிறப்பு ' என்ற தலைப்பிலுள்ளது. இப்பாடலால் " மூலன் " என்பது ஆசிரியர் பெயர் என்பதும், திருமந்திரம் 3000 பாடல்களையுடையது என்றும், நாடோறும் திருமந்திரத்தை ஓதின் சிவனடிப் பேறடையலாம் என்றும் அறியப்பெறும். செய்யுள் 86-ல் இந்நூற்பெயர் " **மந்திரமாலை** " என்று காணப்பெறுகின்றது.

" சிந்தை செய்து ஆகமம் செப்பலுற் றேனே " (செ. 73) என்றமையால் இந்நூலை ஒரு தமிழ் ஆகமம் என்று கூறுவர். "தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம் **சுந்தர** ஆகமச்சொல் மொழிந்தானே " என்ற பாடல் (101) இந்நூல் 9 தந்திரங்களாகப் பகுக்கப் பெற்றதை அறிவிக்கும். இச்செய்யுட் பகுதியால் இவரது இயற்பெயர் **சுந்தரர்** என்றும், " நந்தியருளாலே நாதனும் பேர் பெற்றோம் " (செ. 68) என்றமையால் **சுந்தரர்** என்ற பெய

ரோடு **நாதன்** என்ற பெயர் சேர்க்கப்பெற்றுச் **சுந்தர நாதன்** என்று வழங்கப்பெற்ருர் எனவும் ஆய்வாளர் கூறுவர். நந்தி திருவருள் பெற்ற நான்மறை யோகி களுள் ஒருவராகிய இவர் திருவாவடுதுறைக்கு வந்து, **மூலன்** உடலிற் புகுந்த பின்னரே திருமூலர் எனப் பெற்ருர். இந்நூல் ஞானசம்பந்தர் காலத்துக்கு முன் னேயே செய்யப் பெற்றது.

இவர் திருத்தொண்டத் தொகையில் "**நம்பிரான்** *திருமூலன்*" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் புகழப் பெற்றவர் **ஆவர்**. இத்திருமந்திரத்தின் 9 தந்திரங்களும் 9 ஆகமங்களின் சாரம் என்பர். இந்நூல் 12 திருமுறை களுள் 10-ம் திருமுறையாகத் திகழ்வது.

"திருமந்திரமே சிவக்திக்கு வித்தாம்
திருமந்திரமே சிவமாம் — அருமந்த
புந்திக்கு ளேங்கினேந்து போற்றுமடி யார்தமக்குச்
சந்திக்குந் தற்பரமே தான்"

என்ற இத்தனிப்பாடல் திருமந்திரத்தின் பெருமையைக் கூறுகிறது. முத்திக்கு வித்தாம் இத்திருமந்திரம் திருப் பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** நிறுவியுள்ள **பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி** வெளியீடாக 13–9–56, 31-8–60 ஆகிய இருமுறை வெளியிடப் பெற்றது. மீண்டும் மூன்ருவது முறையாக ஷெ பன்னிரு திரு முறைப் பதிப்பு நிதி (17 ஆவது) வெளியீடாகக் **கீலக ஆண்டு ஐப்பசி அசுவதி** (4—11—1968உ) திருமூலர் திருநட்சத்திர நாளில் வெளிவருகிறது.

இப்பதிப்பு முன்னைய பதிப்புக்களைப் போலவே அச்சிடலாயிற்று. அவற்றுட் கண்டவண்ணம் **துடிசைக் கிழார் அ. சிதம்பரனார்** அவர்கள் எழுதிய திருமந்திர வரலாறும், தணிகைமணி இராவ்பகதூர் **வ. சு. செங்கல்வராய பிள்ளை** M. A., அவர்கள் எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புக்களும், இதன்கண் இடம் பெற்றுள்ளன.

இந்நூல் அச்சிடப் பெறுங்கால் ஒப்புநோக்குதல் அச்சுப்பிரதிகளைத் திருத்துதல் முதலிய பணிகளில் ஈடுபட்டவர் ஸ்ரீவைகுண்டம், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கல்லூரித் தமிழ்த்துறைத்தலைவர் பேராசிரியர் **திரு. பொ. முத்தரசு** M. A., B. T., அவர்கள் ஆவர். அவர்கட்குச் செந்திலாண்டவன் திருவருள் மல்குக.

எங்கள் தலைவர் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள்** அவர்களால் ஸ்ரீவைகுண்டத்தில் நிறுவப்பெற்ற பலதருமங்களையும் நன்கு மேற்பார்வை செய்து நடத்துபவரும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் குடும்பத்தில் வந்தவரும், ஸ்ரீவை. குமரகுருபரன் சங்கத்து நிரந்தரத் தலைவரும், ஸ்ரீவை. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம் மானேஜிங் டிரஸ்டி ஆகியவரும், ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவில் திகழும் பல கல்வி நிலையங்கள் சிறப்புறநடைபெற உதவுபவரும் ஆகிய திரு. T.M. **குமரகுருபரன் பிள்ளை** B. A., B. L., அவர்கள் திருமுறைகளின் தேவைகளை நன்குணர்ந்து திருமந்திரம் வெளிவரச்செய்தமைக்குச் செந்திலாண்டவன் திருவருள் துணை செய்க.

இப்பணியில் அடியேனையும் ஈடுபடுத்தியருளியமைக்கு எங்கள் தலைவர் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து

அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கு மன மொழி மெய்களால் ஆகிய வந்தனை வழிபாடுகளை நன்றி யறிதலோடு சமர்ப்பணம் செய்து கொள்கிறேன்.

"திருமூலர் மாலையெனும் தெப்பத்தைப் பற்றிக்
கருவேலை யைக்கடப்போம் காண்"

—(*சித்தாந்த தரிசனம்*)

இங்ஙனம்

**திருப்பனந்தாள்**
**4—11—68**

**வித்துவான்**
**முத்துக்குமார சுவாமித் தம்பிரான்**
**ஜுனியர், ஸ்ரீ காசிமடம்.**

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை

உ

சிவமயம்

# திருமந்திர வரலாறு

திருமுறைகள் பன்னிரண்டில் **பத்தாவது திருமுறையாகத்** திகழ்வது **"தமிழ் மூவாயிரம்"** என்ற **திருமந்திரம்** ஆகும்.

## திருமுறைகளின் வரலாறு

திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளாகிய மூவர் தேவாரங்களும், கி. பி. 10-ம் நூற்றுண்டுத் தொடக்கத்தில், சிதம்பரத்தில் கோவிலின்கண் இருந்த ஓர் அறையில் சேமிக்கப்பட்டு இருந்தன.

கி. பி. 965-ல் **உறையூர்** அரண்மனே மண்மாரியால் அழிந்தபின், கி. பி. 966-ல் **திருவாரூரை** அரச இருக்கையாக்கொண்டு ஆட்சி செலுத்திய இராசராசன் அபயகுல சேகரன் என்ற பட்டம் பெற்ற *இரண்டாம் ஆதித்தன் (கி. பி. 966-970) காலத்தில், கி. பி. 969-ல் திருநாரையூர் **நம்பியாண்டார் நம்பிகள்** (கி. பி. 956-1012) மூவர் தேவாரப் பாடல்கள் அடங்கிய சுவடிகளேக் கண்டு எடுத்து, "தூயமனு ஏழுகோடி என்பது உன்னி" ஏழு திருமுறைகளாக வகுத்தார்.

---

**இரண்டாம் ஆதித்தனுடைய வேறு பட்டப் பெயர்களாவன: (1) கரிகாலன் III (2) இராசராசன் (3) அபய குலசேகரன் (4) பார்த்திபேந்திரன் (5) வந்தியதேவன் (6) வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பர கேசரிவர்மன் (7) திவி (8) திவ்ய ராயர் (9) ஆதித்திய கரிகாலன் என்பனவாகும்.*

*இவனுடைய தகப்பன் இரண்டாம் பராந்தகன் உறையூர் அரச இருக்கையாக் கொண்டவன். இரண்டாம் ஆதித்தனுக்கு அப்புறம் பட்டத்துக்கு வந்த மதுராந்தக உத்தமச் சோழனும் (கி. பி. 970-984) திருவாரூரில் இருந்து அரசாளவில்லே. அவனுக்கு அப்*

இரண்டாம் ஆதித்தனுக்குப் பின் பட்டம் எய்திய, திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்த சோழருடைய மகன் மதுராந்தக **உத்தமச்சோழ அரசர்** (கி பி.970-984) காலத்தில் அடியார்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, சோழ அரசனது ஆணைபெற்று, ஏழு திருமுறைகளுடன் திருவாசகம், திருக்கோவையார் என்னும் அருள் நூல்களை **எட்டாம் திருமுறை**யாகவும், திருமாளிகைத்தேவர், கண்டராதித்தர் * (கருவூர்த்தேவர் பாடல்களைத்தவிர) முதலியோருடைய பாடல்களையும், சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டையும் சேர்த்து **ஒன்பதாம் திருமுறை**யாகவும், தமிழ் மூவாயிரம் என்ற திருமூலருடைய திருமந்திரத்தைப் **பத்தாம் திருமுறை**யாகவும் வகுத்தார்கள்.

மதுராந்தக உத்தமச் சோழருக்குப்பின் பட்டம் எய்திய, அருண்மொழி என்ற முதலாம் இராசராசன் (கி. பி. 984-1013) என்பவன் தன்னுடைய காலத்தில்,

---

*புறம் பட்டத்துக்கு வந்த முதலாம் இராசராசன் என்ற அருண்மொழித் தேவனும் (கி. பி. 984-1013)* **தஞ்சையை** *அரச இருக்கையாக்கித்* **தஞ்சையில்** *அரசாண்டான். ஆகையால் திருமுறை கண்ட புராணத்தில் கூறப்பட்ட* **திருவாரூரில் அரசாண்ட,** *இராசராசன் அபயகுலசேகரன் என்பவன் இரண்டாம் ஆதித்தனே ஆவான்.*

[1] *கரிகாலன் என்ற பட்டம் வகித்த சோழர்கள் ஐவராவர்: (1) முதலாம் கரிகாலன் (கி. மு. 120 — கி. மு. 90); (2) இரண்டாம் கரிகாலன் (கி. மு. 50—கி. பி. 37); (3) மூன்றும் கரிகாலன் (கி. பி. 966 — 970); (4) நான்காம் கரிகாலன் (கி. பி. 1062 — 1070); (5) ஐந்தாம் கரிகாலன் (கி. பி. 1070 — 1120).*

* *கருவூர்த் தேவர் மதுராந்தக உத்தமச்சோழர் காலத்தில் திருவிசைப்பாப் பாடவில்லை. அருண்மொழி என்ற முதலாம் இராசராசன் (கி. பி. 984—1013) காலத்தில் தஞ்சைப் பெரிய கோவில் கட்டியபின்தான் தஞ்சை இராசராசேச்சுரத்தைப் பற்றித் திருவிசைப்பாப் பாடி அருளினார். ஆதலின், இவர் பாடல்கள் ஒன்பதாம் திருமுறையில் பின்னல் சேர்க்கப்பட்டவையே ஆகும்.*

திருநாரையூர் நம்பி கழல் வணங்கி, இறைமொழிந்த திருமுகப் பாசுரத்தையும், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர்கோன் என்ற இரண்டாம் மகேந்திரவர்மன் (கி. பி.650-655), பட்டினத்தார், நக்கீரர், முதலாம் சேரமான்பெருமாள் (கி.பி.667-712) முதலியோருடைய பாடல்களையும், கருவூர்த் தேவர்பாடிய பாடல்களையும் திருமுறைகளில் சேர்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, நம்பிகளும் அப்படியே சம்மதித்து, "**பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால் அந்த முறை நான்கினொடு முறை பதினொன்றாக்கினார்**" என்றபடி, கருவூர்த் தேவர் பாடல்களை ஒன்பதாம் திருமுறையில் சேர்த்து இறைமொழிந்த திருமுகப் பாசுரமுதலாக உள்ள அருட் பாடல்களைப் **பதினோராந் திருமுறை யாகவும்** வகுத்தார்.

இப்பதினொரு திருமுறைகளையும் முதலாம் இராசராசன் *செப்பேடு செய்து திருவாரூர்த் தியாகேசர் சந்நிதியில் ஏற்றிவைத்தான்.

இந்த மாதிரிப் பதினொரு திருமுறைகளையுங் வகுத்த பின்தான் நம்பிகள் இபமுகத்தான் அருளால் **திருவந்தாதி** முதலிய பிரபந்தங்களைப் பாடினார். இதனை,

"**ஆக்கியபின்** திருத்தொண்டத் தொகையடைவை அருளாலே நோக்கியபின் நாயன்மார் நுடங்கடைவும் தொழிற்பேறும் பாக்கியத்தால் இபமுகத்தோன் அருள் செய்த பகுதியினால் வாக்கியல்சேர் **அந்தாதி நம்பிஅடைவே வகுத்தார்**" என்ற திருமுறைகண்ட புராணச் செய்யுளால் அறியலாம்.

---

**திருஞான சம்பந்தம் பிள்ளை என்கிற இராமசாமிப் பிள்ளை என்பார் மூவர் பாடல்களைத் தலமுறையாக அச்சிடும்போது திருவாரூரில் இந்தச் **செப்பேடுகளை** ஒப்பிட்டுப் பார்த்து அச்சிட்டதாக அவர் அடங்கன் முறையின் முகவுரையில் கூறியுள்ளார்.*

பின்நம்பிகளும், அரசர் பெருமானும், ஏனையோரும் திருவெருக்கத்தம் புலியூரை அடைந்து திருநீலகண்ட யாழ்ப் பாணர் மரபின் வழிவந்த ஒரு பெண்மணியைக் கொண்டு திருமுறைகளுக்குப் பண் அடைவு வகுத்தார்கள்.

நம்பிகள் வகுத்த பதினொரு திருமுறைகளிலும் நம்பிகளுடைய பாடல்கள் சேர்க்கப்படவில்லை, என்னெனின், பதினொரு திருமுறைகளையும் வகுத்தபின் தான் நம்பிகள் தம்முடைய பிரபந்தங்களைப் பாடியது ஆதலின் என்க.

திருநாரையூர் நம்பிகள் இரண்டாம் ஆதித்தன், மதுராந்தக உத்தமச்சோழன், அருண்மொழி என்ற முதலாம் இராசராசன் ஆகிய மூவர் காலத்திலும் வாழ்ந்தவர் ஆவர் முதலாம் இராசராசன் கடைசிக் காலத்தில், அதாவது கி. பி. 1012-ல், இவர் வைகாசித் திங்களில் புனர் பூச நாளில் முத்தி யெய்தினர்.

முதலாம் இராசராசனுக்கு அப்புறம் அவர் மகன்***முதலாம் இராசேந்திரன்** (கி. பி. 1013—1042) பட்டத்துக்கு வந்தான். இவனுக்குத்தான் உத்தமச்சோழன், கங்கை கொண்டான், ஈழங் கொண்டான், கடாரங் கொண்டான் முதலிய பட்டங்கள் உண்டு. **அபயன்** என்பது சோழ

*முதலாம் இராசேந்திரனுடைய பட்டப் பெயர்களாவன: (1) கங்கை கொண்டான் (2) உத்தமச்சோழன் (3) மதுராந்தகன் (4) விக்கிரமச்சோழன் (5) முடிகொண்டான் (6) பண்டிதச்சோழன் (7) இராசேந்திர சிங்கன் (8) அநபாயன் (9) குலோத்துங்கன் (10) ஈழங்கொண்டான் (11) கடாரங்கொண்டான் முதலியன.

**உத்தமச்சோழன்** என்ற பட்டப்பெயரை உடையவன் இவன் ஒருவனே. 1-2-3 குலோத்துங்கர்களுக்கும் இப்பட்டம் கிடையாது. சேக்கிழாருக்கு ''**உத்தமசோழ பல்லவராயன்**'' என்ற பட்டத்தைக் கொடுத்தவன் இவனே ஆகும். என்னெனின், அப்பட்டம் இல்லாதவன் எவனும் அமைச்சருக்கு அப்பட்டம் கொடுக்கமுடியாது.

அரசர்களுக்கு உரிய ஒரு பொதுப்பெயர். இவன்காலத்தில் தான் சேக்கிழார் பெருமான் பன்னிரண்டாம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தைப்பாடி அரங்கேற்றியது. சேக்கிழார் காலம் (கி.பி 992-1042) ஆகும்.

சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணம் பாடி அரங்கேற்றியபின், சோழ அரசன் முதலாம் இராசேந்திரன் சேக்கிழாரை வணங்கி, முன்னே வகுத்துள்ள திருமுறைகள் பதினொன்றுடன் **திருத்தொண்டர் புராணத்**தைப் பன்னிரண்டாவதாக வகுக்க வேண்டும் என்றும், நம்பியாண்டார் நம்பிகள் பாடிய பாடல்களையும் திருமுறைகளில் சேர்க்கவேண்டும் என்றும், கேட்டுக்கொள்ளச் சேக்கிழார் பெருமான் இதுவும் திருவருள் என உணர்ந்து, நம்பியாண்டார் நம்பிகளுடைய பாடல்களைப் பதினொராம் திருமுறையில் சேர்த்துவிட்டுத் திருத்தொண்டர் புராணத்தைப் **பன்னிரண்டாம் திருமுறை**யாக வகுத்து அமைத்தார்.

முதலாம் இராசராசன் பதினொரு திருமுறைகளையும் செப்பேடு செய்து, தியாகேசர் சந்நிதியில் ஏற்றியது போலவே, முதலாம் இராசேந்திரனும் பன்னிரண்டு திருமுறைகளையும் செப்பேடு செய்து தில்லையில் கூத்தப் பெருமான் சந்நிதியில் ஏற்றிவைத்தான்.

---

*உமாபதி சிவாசாரியார் கூறுகிறபடி* **இமசேது** *பரியந்தம் ஆட்சி செலுத்தியவன் இவனேதான் என்றும், இவனைத்தவிர வேறு சோழர்கள் ஆட்சி செய்யவில்லை என்றும் சோழர் சரித்திரத்தால் அறியக்கிடக்கின்றது. சேக்கிழார் மந்திரியாக இருந்தது இவன் காலத்தில் தான்,* (Vide **கரந்தைத் தமிழ்ச்** சங்கம் **வெள்ளி விழாமலர்** *இலக்கண விளக்கப்* **-சோமசுந்தர தேசிகர்** *செய்த* **''சைவ சிகாமணிகள் இருவர்''** .

*சேக்கிழார் காலம் முதலாம் குலோத்துங்கன் காலம் என்றும், இரண்டாம் குலோத்துங்கன் காலம் என்றும் கூறுபவரும் உண்டு. அவை ஏனைய சரித்திரக் காலவரையறைக்கு ஒத்து வருவன அல்ல.*

திருமுறைகளுக்கு எல்லாம் காலத்தால் முற்பட்டது பத்தாம் திருமுறையாகிய "தமிழ் மூவாயிரம்" ஆகும். அப்படி இருக்க, அதனைப் பத்தாம் திருமுறையாக அமைக்கத் திருவருள் நம்பியாண்டார் நம்பிகளை இயக்கு வானேன்? என்றால், அது. கி. பி. 13-ம் நூற்றாண்டில் **மெய்கண்ட சிவாசாரியரால்** செய்யப்பட்ட சிவஞான போதநூலை நோக்க வெளியாம்.

சிவஞான போதப் பன்னிரண்டு சூத்திரங்களும் பன்னிரண்டு அமைப்பைப் பொருந்தி இருக்கின்றன. பிர மாண இயலில் கூறப்பட்ட மூன்று சூத்திரங்களும் முதல் மூன்று திருமுறைகளையும், இலக்கண வியலில் கூறப் பட்ட மூன்று சூத்திரங்களும் 4-5-6 திருமுறைகளையும், சாதன இயலில் கூறப்பட்ட மூன்று சூத்திரங்களும் 7-8-9-வது திருமுறைகளையும், பயன் இயலில் கூறப் பட்ட மூன்று சூத்திரங்களும் 10-11-12-வது திருமுறை களையும் பொருந்த அமைந்துள்ளமை உணரத்தக்கது.

சிவஞான போதம் பத்தாம் சூத்திரமாகிய

"அவனே தானே யாகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடும் வல்வினை இன்றே"

என்ற சூத்திரமானது,

"ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை"

என்று சேக்கிழார் திருமூல நாயனார் புராணத்தில் கூறிய தற்கிணங்க அமைந்துள்ளது.

தமிழ் மூவாயிரத்தின் பொருள் அமைதியை நோக்கி நம்பியாண்டார் நம்பிகள் பத்தாம் திருமுறையாக அமைத்துள்ளார் என்று போதருகின்றது.

## திருமந்திரம் என்னும் பெயர்க் காரணம்

"மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்" என்று தமிழ் மூவாயிரச் சிறப்புப் பாயிரச் செய்யுளாலும், "முன்னிய அப்பொருண்மாலை "தமிழ் மூவாயிரம்" சாத்தி" என்ற சேக்கிழார் பெருமான் வாக்காலும் "**தமிழ் மூவாயிரம்**" என்பதே ஆசிரியர் நூலுக்கு இட்ட பெயர் எனத் தெரிகிறது.

மூலனுடைய உடலிற் **புகுந்தபின்** செய்யப்பட்டது **தமிழ் மூவாயிரம்** ஒன்றே. மூலனுடைய உடலிற் புகுவதற்குமுன் 'உபதேசம் முப்பது', 'மந்திரம் முந்நூறு' என்ற இரண்டு தமிழ் நூல்களையும் செய்துள்ளார் ஆசிரியர். அப்படி இருக்கத் தமிழ் மூவாயிரத்துக்குத் "திருமந்திரம்" எனப் பெயர் வருவானேன்? என்றால்,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி, **நிறைமொழி** மாந்தராகிய திருமூல நாயனாரால், சிவபெருமானது திருவருட் குறிப்பென்னும் **ஆணையால், மறைப்பொருள்** கூற்றுக்களை உடைய செய்யுட்களால் தமிழ் மூவாயிரம் ஆக்கப்பட்டிருப்பதால் **மந்திரம்** எனப்பட்டது.

## திருமூல நாயனாருடைய இயற்பெயர்

சேக்கிழார் பெருமான் திருமூல நாயனாருடைய புராணத்தில் "நந்திதிருவருள் பெற்றவர்" 'நான்மறையோகிகளொருவர்', 'அணிமாதி சித்தி பெற்றுடையார்', 'தவமுனிவர்' என்று பெயர் குறியாமல் கூறிக்கொண்டு வந்தவர், சாத்தனூர் ஆமேய்ப்பார் குடித்தோன்றிய **மூலன்** என்னும் பெயருடைய இடையன் வினைமாள வீடி, நிலத்திடை வீழ, ஆக்களின் துயரை நீக்குவான் கருதி **மூலனுடைய உடலில்** தவமுனிவர் தம்முயிரைப் பாய்த்

துத் திருமூலராய் எழலும்'' என்று கூறி முடித்துள்ளார். ஆதலால், திருமூலர் என்ற பெயர் மூலனுடைய உடலில் புகுந்து எழுந்த பின் ஏற்பட்டது ஆகும். ஆனால் அவருடைய இயற்பெயர் என்ன? என்று ஆராய்ச்சி செய்ததில் அவருடைய இயற்பெயர் **சுந்தரநாதர்** என்பது தெளிவாகிறது. இதனை எற்றால் அறிதுமெனின், தமிழ் மூவாயிரம் சிறப்புப் பாயிரச் செய்யுளில்,

" தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
**சுந்தரன்** ஆகமச் சொன்மொழிந் தானே "

என்று கூறப்பட்டிருப்பதாலும், திருமூலனுடைய உடலிற் புகுமுன், சுந்தரநாதர் தம் இயற்பெயருடன் விளங்குங் காலத்தில் செய்த தமிழ் நூலாகிய " **மந்திரம் முந்நூறு** " என்ற நூலின் சிறப்புப் பாயிரச் செய்யுளில்,

" மந்திரங் கொண்டு வழிபடுவோர்க்குச்
**சுந்தர நாதன்** சொல்லிய மந்திரம்"

என்று கூறப்பட்டிருப்பதாலும் அறியலாம்.

ஆகவே, **சுந்தரம்** என்பது அவர் இயற்பெயர், தாய் தந்தையர் இட்டபெயர் என்று அறிந்தாம். '**நாதன்**' என்ற பட்டத்தை அவர் எப்போது பெற்றார்? என்றால், "நந்தி அருளாலே நாதனும் பேர்பெற்றோம்" என்று அவரே கூறியிருக்கிறபடியால், நந்தி திருவருள் பெற்றவர்களுக்கு எல்லாம் நாதன் என்ற பட்டம் உண்டு என்பதையும் அறிந்தோம். நாதன் என்பது ஆகுபெயர்.(தத்திதாந்த நாமம்)என்றுகூறுவர் இலக்கண நூலார். ஆகவே, **சுந்தரநாதர்** என்பது அவருடைய இயற்பெயர் ஆகும்.

**திருமூல நாயனாருடைய நாடு**

" குறுமுனிபால் உற்றதொரு கேண்மையினால் உடன் சில நாள் உறைவதற்கு " சுந்தரநாதர் வட கயிலையினின்றும், பொதியை நோக்கிப் போந்தார் என்கிறார்

சேக்கிழார். திருமூலராக எழுந்தபின் அவர் பொதி யைக்குச் செல்லவில்லை என்பது அவருடைய புராணத் தால் விளங்குகிறது. அப்படி இருக்க, குறுமுனிபாற் கேண்மை அவருக்கு எப்போது ஏற்பட்டது? என்றால், வடகயிலைக் குருகுலத்துக்குப் படிக்கப் போனதன் முன் ஏற்பட்டிருக்க வேண்டும். அஃதாவது, அவர் சிறுவய தாயிருக்கும்போது ஏற்பட்டிருக்க வேண்டும். அதற்கு அவர் பாண்டிய நாட்டினராகத்தான் இருக்கவேண்டும்.

'சுந்தரம்' என்ற பெயரே அவர் தமிழ் நாட்டினர், பாண்டிய நாட்டினர் என்பதைத் தெரிவிக்கிறது.

"நான்மறை யோகிகளொருவர்", "சைவநெறி மெய்யுணர்ந்தோர்" என்று சேக்கிழார் கூறுகிறபடி யால், அறம் பொருள், இன்பம் என்ற நான்மறைகள் பயிலும் நாடு தமிழ் நாடாகிய பாண்டிய நாடேயாகும். சைவநெறி மெய்யுணர சைவத்திறத்தை அடைய வேண் டும். **சைவத்திறத்தை** அடைய,

"புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்,
புகன் மிருதி வழிஉழன்றும், புகலும்ஆச் சிரம
அறத்துறைகள்அவைஅடைந்தும்,அருந்தவங்கள் [புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும், ஆரணங்கள் படித்தும்,
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் **சைவத் திறத்தடைவர்** இதிற்சரியை கிரியை யோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்"

என்ற சித்தியார்ப் பாட்டின் குறிப்புப்படி, உலக நூல் களை எல்லாம் ஓதி, அவைகளில் தேர்ச்சி அடைந்திருக்க வேண்டும். அப்படித் தேர்ச்சிபெறக் குறுமுனிவர் பொதியின்கண் அமைத்த பொதியமலைத் தமிழ்ச்சங்கமே தகுதி வாய்ந்தது.

நம் சுந்தரநாதர் இளவயதில், பொதியமலைத் தமிழ்ச் சங்கத்தில் சேர்ந்து, உலகநூல்களைக் கற்று, அவைகளில் முதல்வராகத்தேறின படியால் குறுமுனிவருடைய நட்பு அவருக்குக் கிடைத்தது. குறுமுனிவரே சுந்தரநாதரை வடகயிலைக் குருகுலத்துக்கு அறிவு நூல்களைக்கற்க ஆசியுடன் அனுப்பியுள்ளார் என்பது தெரிகிறது.

ஆகவே, சுந்தரநாதருடைய நாடு **பாண்டிநாடு** என்பதும், அவர் ***பொதியமலைத் தமிழ்ச் சங்கத்தில்** உலக நூல்களைக் கற்றுத் தேர்ந்து, குறுமுனிவருடைய நட்பைப்பெற்று, வடகயிலைக் குருகுலத்தில் சேர்ந்து, அறிவு நூல்களைப் படித்து அவைகளிலும் தேர்ந்து, நந்தியெம் பெருமான் திருவருளும் பெற்றவர் என்பதும் அறிந்தாம்.

**கயிலைக் குருகுலத்தில் சுந்தரநாதரோடு படித்தவர்கள்**

" நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடில்
நந்திகள் நால்வர், சிவயோக மாமுனி,
மன்று தொழுத பதஞ்சலி, வியாக்ரமர்,
என்றிவ ரென்னோ டெண்மரு மாமே "

என்ற தமிழ் மூவாயிரப் பாசுரப்படி, சுந்தரநாதருடன் குருகுலவாசம் செய்துகொண்டு படித்தவர்கள்: (1) சனகர் (2) சனந்தனர் (3) சனாதனர் (4) சனற்குமாரர் (5) சிவயோக மாமுனி (6) மன்று தொழுத பதஞ்சலி

---

* *பொதியமலைத் தமிழ்ச் சங்கத்தைப் பற்றிக் கம்பநாடர்,* **'தென்தமிழ் நாட்டகன் பொதியில் திருமுனிவன் தமிழ்ச் சங்கம்,** *சேர்கிற் பீரேல்' என்று கூறியிருப்பது இதனை வலியுறுத்தும். இராமாயண காலத்தில் பாண்டியரின் அரசஇருக்கையாகிய கபாடபுரத்திலும், பொதியமலையிலும் தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்றதைப்பற்றி வான்மீகமும் கூறுகின்றது,* (Vide **தமிழ்ச் சங்கங்களின் வரலாறு** *பக்கம் 29—31).*

(7)வியாக்கிரமர் என்ற ஏழு பேர் ஆவர். பதஞ்சலிஎன்ற பெயருடையவர்கள் மூவர். ஆதலால், அவர்களினின்றும் வேறுபிரித்து அறியும் பொருட்டு "மன்றுதொழுத" என்ற அடைகொடுத்துக் கூறியுள்ளமை நோக்கத் தக்கது.

வட கயிலைக் குரு குலத்தில் இவர்கள் எல்லோரும் அறிவு நூல்களை எந்த மொழியில் படித்தார்கள்? என்னும் வினவிற்கு விடையாக,

' குடிமன்னு சாத்தனூர்க்கோக்குலம் மேய்ப்போன் [குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல னுகின்ற அங்கணனே'

என்று தமிழ்நாட்டு வியாசராகிய நம்பியாண்டார் நம்பிகள் கூறியுள்ளார். வியாசர் ஆரிய வேதங்களின் சிக்கை அறுத்தது போலவே, நம்பிகளும் வடமொழி தென்மொழி *வேதங்களின் ஐயப்பாட்டினை நீக்கியுள்ளார் எனத் தெரிகிறது.

**சுந்தரநாதர் திருக்கூத்துக் காட்சி கண்டது**

வடகயிலைக் குருகுலம் முடிந்ததும் சுந்தரநாதர் என்பவர் பதஞ்சலி, வியாக்கிரமர் என்ற இருவருடன் கயிலை

---

**உலகத்தினிடத்து இப்போது பல வேதங்கள் வழங்கக் காண்கின்றோம்,*

*பௌத்தர்களுடைய வேதங்களாகிய மூன்று **பிடகங்களும்** **கி. மு. 6-ம் நூற்றுண்டில்** விளங்கிய புத்தர் காலத்தில் எழுதப் பட்டவையே. அவை: (1) சுத்தபிடகம் (2) வினயபிடகம் (3) அபிதன்ம பிடகம். என்பன சைன மதத்தாருடைய **எண்மறைகளும்** ஏறக்குறைய கி. மு. 6-ம் நூற்றுண்டிலேயே எழுதப்பட்டன வாகும். பாரசீகர்களுடைய வேதம் '**செண்டு அவஸ்த**' என்பது ஒன்றே ஆகும். கிறிஸ்தவர்களுடைய '**பைபிள்**' என்னும் ஒரே வேதம் கி. பி. முதல் நூற்றுண்டினதாகும். முகமதியர்களுடைய '**குரான்**' என்ற ஒரே வேதமும், கி. பி. 622-ல் இருந்து ஏற்பட்டதாகும்.*

யினின்றும் புறப்பட்டுத் தில்லைக்கு வந்து, ஆசிரமங்கள் அமைத்துக்கொண்டு கூத்தப்பெருமானின் நடனக்காட்சியைக்காண்பான் தவம் இயற்றினர். ஒருநாள் அவர்கள் மூவரும் அக்காட்சியைக் கண்டனர். திருமூலர் ஆகிய சுந்தரநாதர் தாம் கண்டதைத் தமிழ் மூவாயிரத்தில்,

" தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே "—74

என்று குறிப்பிட்டுள்ளார். இன்னும் தாம் கண்ட கூத்துக்காட்சியின் அனுபவத்தை,

" புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும்அருட்கண்ணீர்சோர்நெஞ்சுஉருக்கும்,
ஒளிக்குள்ஆனந்தத்தமுதுறும்உள்ளத்தே"2778

என்று கூறியுள்ளதும் அறியலாம்.

தனிக்கூத்துக் கண்டபின் சுந்தரநாதர் திரும்பவும்கயிலை சென்று தவத்தினில் ஈடுபட்டார். *பதஞ்சலி, வியாக்கிரமரோ என்னில், இருவரும் தில்லையிலேயே ஆசிரமங்

ஆரியர்களுடைய வேதம் முதலில் 'இருக்கு' என்பது ஒன்றே ஆகும். பின் அவர்கள் **இந்துஸ்தானத்தை** ஏற்படுத்திய பின் 'இருக்கு-யசுர்-சாமம்' என, அவ்வொரு வேதத்தையே மூன்றாகப் பிரித்தார்கள். "**வேதம் திரையீ**" என்பதும், "மும்மறையுள் நடு மறையுள் முனிவிலெழு காண்டத்தில்" என்ற பாட்டும் இதனை வலியுறுத்தும். **அதர்வண வேதம்** என்பது நாலாவது என்று கூறுவார்கள். ஆனால், அது மூன்று வேதங்களிலும் அடங்கியதே ஆகும.

நான்மறை வழக்கு தமிழ்நாட்டில் ஆரியர்கள் வருமுன்னரே உண்டென்பதும், அவை அறம் - பொருள் - இன்பம் - வீடு என்னும் நாற்பொருளுக்கும் நான்காக அமைந்தன என்பதும், அவை தமிழ் மொழியிலேயே ஆக்கப்பட்டு வழக்கில் இருந்தன என்பதும் சரித்திரங்களாலும் இலக்கியங்களாலும் அறியக் கிடக்கின்றன.

*பதஞ்சலிகள் மன்று தொழுத பதஞ்சலியைத் தவிர வேறு இருவர் உண்டு. Dr. Keith என்பவர் வடமொழியில் மகாபாஷியம் இயற்றியவர் கி. மு. 150-லும், யோகசூத்திரம் செய்த

கள் அமைத்துக் கொண்டு தங்கிவிட்டார்கள்என்பதனைப் புலியூர்ப் புராணமும், கோயிற் புராணமும்கூறு நிற்கும்.

## திருமூலருடைய காலம்

திருமந்திர ஆசிரியர் சுந்தரநாதர் என்ற திருமூல நாயனுருடைய காலம் இன்னதெனை ஒவ்வொருவரும் அறிந்திருக்க வேண்டியது முக்கியம். காலத்தைப்பற்றி ஆராய்வது வீண் என்று சிலர் கருதுகிறுர்கள். கால ஆராய்ச்சி, இருட்டறையில் உள்ள பொருள்களை அறியக் கைவிளக்கு உதவுவது போல, இவ்வுலகில் ஆன்றோர் சரித்திரங்களைச் செவ்வனே அறிந்து கொள்ள உதவி செய்யும். ஆதலின், திருமூலரின் கால ஆராய்ச்சி மிக முக்கியமானதுமாகும். அதனை ஒரு சிறிது ஆராய்வாம்.

சுந்தரநாதர் என்ற திருமூலர் பதஞ்சலி, வியாக்கிரமர் காலத்தவர் என முன்னமே கூறினும். வியாக்கிரமருக்கு வசிட்டருடைய தங்கையை மணம் செய்வித்திருந்ததும், அவருக்கு உபமன்னியு பிறந்ததும், உபமன்னியுக்காகத் தில்லையில் நடராசர் திருப்பாற்கடலை வரவழைத்ததும் உமாபதி சிவாசாரியார் செய்த கோயிற் புராணத்தாலும், புலியூர்ப் புராணத்தாலும் அறிகிறேம். வசிட்டரானவர் தசரதர் இராமர் முதலியோருக்குக் குலகுரு ஆவர். ஆதலின், இவர்கள் எல்லோரும் சமகாலத்தவர் ஆவர். அந்தக்காலம்தான் இராமாயண காலம். இராமாயண காலம் கி. மு. 6000 என்பது ஆராய்ச்சியாளர் கண்ட முடிவு. ஆதலின், திருமூலர் காலமும் கி. மு. 6000 என்று கொள்ளுதல் பொருந்தும்.

---

*பதஞ்சலி கி. பி. 7-ம் நூற்றுண்டிலும் வாழ்ந்தவர்கள் என்று பல சரித்திர ஆதாரங்களுடன் கூறியிருக்கிறுர்.*

*மன்று தொழுத பதஞ்சலியோ என்றல் இராமாயண காலத்தில் சுந்தரநாதர்-வியாக்கிரமருடன் வாழ்ந்தவர் ஆவர்.*

இன்னென்று, தமிழ் மூவாயிரத்தில் தமிழ் மொழிக்கு 16-உயிர்களும் 35-மெய்களும் ஆக 51-எழுத்துக்கள் என்று திருமூலர் கூறுகின்றார்; இதனை,

" ஓதும் எழுத்தோடு உயிர்க்கலை மூவைந்து
ஆதி எழுத்தவைஐம்பதோடொன்றென்பர் "-963

" விந்துவி லும்சுழி நாதம் எழுந்திட
பந்தத் தலைவி பதினறு கலையதாக்
கந்தர வாகரம் காலுடம் பாயினுள்
அந்தமும் இன்றியே ஐம்பத்தொன்ருயதே "—946

என்னும் பாடல்களால் அறியலாம்.

ஆகவே, நம் சுந்தரநாதர் தமிழ் மொழிக்கு 51எழுத்துக்கள் உள்ள காலத்தில் இருந்து படித்தவராக வேண்டும். அஃது எப்போது ? அதுதான் இடைச்சங்க ஆரம்ப காலம் ஆகும்.

இடைச்சங்கம் கி. மு. 6805 முதல் கி.மு. 3105வரை 3700 ஆண்டுகள் பொருநை (தாம்பிரபர்ணி) ஆற்றின் முகத்துவாரத்தில் இருந்து அழிந்துபோன பாண்டிய அரச இருக்கையாகிய **கபாடபுரத்தில்** நடைபெற்று வந்தது.*

இடைச்சங்கம் கி. மு. 6705-ல் வெண்டேர்ச் செழியனல் ஆரம்பிக்கப்பட்டு வட்டெழுத்துக்களால் ஆய நூல்களைக் கொண்டே கி. மு. 6000 வரையில், 805 ஆண்டுகள் நடைபெற்றது என்பது சரித்திரம்.

---

*தமிழ்ச் சங்கங்களின் வரலாறு பக்கம் 70 முதல் 89 வரை பார்க்க.

[1] தொல்காப்பியர் மூவருளர்: அவர் (1) ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியர் (2) புரோகித அகத்தியர் 2-ம் மாணவர் தொல்காப்பியர் (3) விதர்ப்பநாட்டு உலோபாமுத்திரை அகத்தியர் மாணவர் திரண தூமாக்கினி என்ற தொல்காப்பியர் என்போர் (Vide அகத்தியர் வரலாறு பக்கம் 62-63-64-65)

கி. மு. 6000-ல் ஐந்திரம் நிறைந்த [1]தொல்காப்பியர் தமிழ் மொழியில் வட்டெழுத்துக்காலத்தில் இருந்த 51 எழுத்துக்களும் அதிகப்படியானவை எனக்கண்டு, 16-உயிர் எழுத்துக்களை, 12-உயிர் எழுத்துக்களாகவும், 35 மெய்யெழுத்துக்களை, 18-மெய் எழுத்துக்களாகவும் சுருக்கி, அவைகளுக்குத்தக, '**தொல்காப்பியம்**' என்னும் இலக்கண நூலை யாத்து மூன்ரும் நிலந்தரு திருவிற்பாண்டியனென்ற அனந்தகுண பாண்டியன் அவைக்களத்தில் அதங்கோட்டாசான் முன்னிலையில் அரங்கேற்றினர். அதுமுதல் தமிழ்மொழிக்குச் **சதுர எழுத்துக்காலம்** ஆரம்பம் ஆகும். தற்காலம் நடைபெறுவதும் அதுவேயாகும்.[1]

ஆதலின், சுந்தரநாதர் காலம் கி.மு. 6000க்கு முந்திய **வட்டெழுத்துக் காலமே** தான் என்பது வெள்ளிடைமலை.

கி. மு. 6000-ல் தான் குருகுலம் முடிந்து, நடன தரிசனம் காணத் தில்லைக்கு இவரும், பதஞ்சலி, வியாக்கிரமரும் வந்தது. தரிசனம் கண்டபின் இவர் வடகயிலை சென்று தவம் இருந்தார் என அவர் வாக்காலேயே அறியக்கிடக்கின்றது.

பின், கி. மு. 3100-ல் அஃதாவது *பாரதச்சண்டை முடிந்து, கலியுகம் பிறந்தபின் தொடக்கத்திலேயே சுந்தரநாதர் குறுமுனியைக் காண விரும்பிப் பொதிய மலையை நோக்கிப் புறப்பட்டார் என்று புராணசாரமும், புராணமும் கூறுகின்றன.

---

[1] எழுத்தெனப்படுவ,

*அகரமுதல், னகர இறுவாய் முப்பஃது என்ப*
*சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே. -தொல்காப்பியம்*

* *பாரதச் சண்டை நடந்தது கி. மு. 3105, கலியுகம் பிறந்தது கி. மு. 3102.*

**பொதியை நோக்கி வந்ததும், திருமந்திரம் யாத்ததும்**

வடகயிலையினின்றும் புறப்பட்டுப் பல சிவத் தலங்களைத் தரிசித்துக்கொண்டு பொதியை நோக்கி வந்து கொண்டிருக்கையில் வழியில் திருவாவடுதுறையில் மாசிலாமணி ஈசரை சுந்தரநாதர் தரிசித்தபோது, அங்கேயே அவர் தங்கி ஆகமத்தை வெளிப்படுத்த வேண்டும் என்று திருவருள் உணர்த்த உணர்ந்தும், அவர், பொதியை நோக்கிச்செல்ல எத்தனிக்க, இறைவன் அவரைத்தடுத்து அங்கேயே இருத்தி, ஆகம நூலாகிய திருமந்திரத்தை வெளியாக்கச் செய்தார். எப்படி என்றால், திருவாவடுதுறையைக் கடந்து சுந்தர நாதர் காவிரியை நோக்கிச் செல்ல, அங்கே எதிர்க்கரையில் சாத்தனூர் நிரை மேய்க்கும் இடையன் மூலன் என்பவன் வினைமாள, வீடி இறந்துபட, ஆக்கள் எல்லாம் அவனைச் சுற்றிச் சுற்றிக் கதறும்படி செய்தது திருவருள். அவ்வாக்களின் துயரினைக் கண்டதும், அவைகளின் துயரை நீக்குவான் கருதி, சுந்தரநாதர் தமது உடலுக்கு அரண்செய்து, காவிரிப்புறவில் ஒரு மரப்பொந்தில் வைத்துவிட்டு மூலனுடைய உடலில் தம்முயிரைப் பவன வழியாகப் பாய்த்தினர். பாய்த்தலும் மூலனாக எழவே, ஆக்கள் எல்லாம் துயர் நீங்கின. அன்று அவர் ஆக்களுடன் சாத்தனூர் சென்று தங்கி மறுநாள் தம்முடலைத்தேட அது சிவனருளால் மறைந்து விட்டது. அவர் திருவருள் இஃது என உணர்ந்து திருவாவடுதுறை சென்று, திருக்கோயிலின் வெளிப்பிரகாரத்தில் வடமேற்கு மூலையில் இருந்த ஓர் அரசமரத்தின் கீழ்த் தங்கி, மூவாயிரம் ஆண்டு தவம் செய்துகொண்டு, ஆண்டுக்கொரு பாட்டாக மூவாயிரம் பாடல்களைப்பாடி, “ **தமிழ் மூவாயிரம்** ” என்ற பெயரைச்சூட்டி, தன் மாணாக்கர்கள் எழுவருக்கும் அந்நூலைப் போதித்து வந்தார். இதனை,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" —81
"தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தரன் ஆகமச் சொன்மொழிந் தானே" 101

என்னும் பாசுர அடிகளால் அறியலாம்.

இவர் கி. பி. 3100-ல் தான் பொதியமலையை நோக்கி வந்தார் என்பதற்கு ஆதாரம் என்னவெனின் நம் சுந்தர நாதர் கயிலாயத்தினின்றும் புறப்பட்டுப்பசுபதிநேபாளம் அவிமுக்தம் (காசி), கேதாரம் முதலிய சிவத்தலங்களைத் தரிசித்துக்கொண்டு பூரி என்ற ஜகநாதம் வந்து சேர்ந் தார்.[1] அது, மகாநதிக் கரையில் உள்ள ஒரு தலம். மகா நதிக்கரையில் உள்ள ஒரு காட்டில் துவரைக் கோமான் கண்ணன் ஒரு வேடனால் கொல்லப்பட்டு, அவனுடைய சரீரம் அவ்வேடனால் கொளுத்தப்படவே, நடுவில் பெரு மழை பெய்து, ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து, வெந்தும் வேகாமலும் இருந்த கண்ணன் உடலானது வெள்ளத்தால் அடித்துக்கொண்டு போக, பூரியில் உள் ளார் அதனைக்கண்டு எடுத்துக் குறைக்காலும், குறைக் கையுமாக இருந்த அவ்வுடலை வைத்துக்கோயில் எடுத்து வணங்கி வருவதைக் கண்டார்.[2] அந்தச் செய்தியைத் தமிழ் மூவாயிரத்தில்,

---

[1] *சுந்தரநாதர் பூரி என்னும் ஜகநாத தலத்தைத் தரிசித்ததைப் பற்றிப் பெரிய புராணத்தில் இல்லை: என்றாலும் பசுபதி நேபாளம், கேதாரம் முதலிய வழிநெடுக உள்ள தலங்களைத் தரிசித்துக் கொண்டு சென்றவர் பூரிக்கும் சென்றார் என்பது, அங்குக் கோயில் கொண்டிருக்கும் கண்ணனைப் பற்றி அவர் தமிழ் மூவாயிரத்தில் பாடியிருப்பதே சான்று ஆகும்.*

[2] *கண்ணனைப் பற்றிய இச்சரித்திரம் ஜகநாத புராணத்தில் காண்க. கலியுகம் பிறந்தது கி. மு. 3102-ல் என்பது கல்வெட்டு ஆதாரங்களால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது (Vide 'தமிழ்ச்' சங்க வரலாறு பக்கம் 76 – 77)*

" இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லும்
கருக்கரு வாய்நின்ற கண்ணனு மாமே "— 53

என்று பாடியுள்ளதை நோக்க வெளியாம்.

### திருவாவடுதுறையில் மூவாயிரம் ஆண்டுகள் இருந்ததுவும், பின் கயிலைசென்று முத்திபெற்றதும்

சுந்தரநாதர் இரண்டாம் தடவை கி. மு. 3100-ல் தென்னாடு வந்து திருவாவடுதுறையில் தங்கித் திருமூல ராகத் திகழ்ந்து மூவாயிரம் ஆண்டுகள் தவம் இருந்து, ஆண்டுக்கு ஒரு பாட்டாக மூவாயிரம் பாசுரங்களைப் பாடி, " தமிழ் மூவாயிரம் " என்று அப்பாசுரங்கள் அடங்கிய[1] நூலுக்குப்பெயர் சூட்டி, தம்முடைய மாண வர்கள் ஏழு பேருக்கும் போதித்து அவர்களைக் கொண்டு தென்தமிழ் நாட்டில் பல மடங்களைத் தாபித்துச் சைவ சித்தாந்த நுண்பொருள்களை உலகில் பரப்பி வந்தார்.

திருமூலர் பெயரால் இன்னும் பல இடங்களில் பல மடங்கள் தாபிக்கப்பட்டதாகக் கோகழி அடிகள் செய்த தத்துவ ரத்னகரம் பேசுகிறது.[2]

இவ்வாறு புகழ்பெற, உலகம்உய்ய வாழ்ந்து, கி.மு. 100-ல் சென்னிமதி அணிந்தவர்தம் திருவருளால் திருக்

---

[1] *திருமூலருடைய மாணவர்; "மந்திரம் பெற்ற வழிமுறை [1]மாலாங்கன், [2]இந்திரன், [3]சோமன், [4]பிரமன், [5]உருத்திரன், [6]கந்துருக் காலாங்கி, [7]கஞ்சமலையனோடு இந்த எழுவரும் என்வழி யாமே". (தமிழ் மூவாயிரம் — 69)*

[2] *"கயிலையில் இமயந்தன்னில் கங்கையில் கூவம் தன்னில், பயிலுமா முண்டமான மடத்துடன் பருப்பதத்தில், இயலுகாளத்தி தன்னில் எயின்மதிற் காஞ்சி தில்லை, முயலு தண்டுறையே தென்றற் கிரியிடை முற்றவுண்டாம், இவையிவை மூலநாதன் இருந்திடும் இடத்தின் தானம்" என கோகழி அடிகள் செய்த* **தத்துவ ரத்னகரம்** *கூறும்.*

கயிலைக்குத் திரும்பவும் சென்று, அங்கே என்றும் பிறவா நெறியாகிய திருவடி முத்தியை அடைந்தார் என்று அவர் சரித்திரம் பேசுகின்றது.

## திருமந்திரம்

இதுகாறும் திருமூலர் என்ற சுந்தர நாதரின் முன் பின் வரலாற்றை ஒருவாறு கூறிமுடித்தாம். இனித் திருமந்திரம் என்னும் நூலைப்பற்றிச் சிறிது கூறி இவ் வரலாற்று ஆராய்ச்சியை முடிப்பாம்.

தமிழ் மூவாயிரம் என்ற திருமந்திர நூல் ஒன்பது தந்திரங்களால் அமைந்தது. ஒன்பது தந்திரங்களும் ஒன்பது ஆகமங்களாகிய காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், காலோத்தரம், சுப்பிரபேதம், மகுடம் வியாமளம், என்ற நூல்களின் சாரம் ஆகும்.

சதாசிவ நாயனாரால் வெளியிடப்பட்ட ஆகமங்கள் இருபத்தெட்டு ஆனபோதிலும்,

" சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
**நவஆ கமம்எங்கள் நந்தி பெற்றனே "—62**

என்ற பாசுரப்படி நந்தியெம்பெருமானுக்குக் கிடைத் தவை மேற்கூறிய ஒன்பது ஆகமங்களேயாகும். ஆத லின், இந்த ஒன்பது ஆகமங்களையே நந்தியெம்பெரு மான் குருகுலத்தில் போதித்து வந்தார். அக்குருகுலத்தில் படித்த திருமூலரும் அந்த ஒன்பது ஆகமங்களின் சாரத் தையே ஒன்பது **தந்திரங்களாக** வகுத்துக் கூறினர்.

திருமூலர் பாடியது மூவாயிரம் பாடல்களே ஆகும். " தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்" என்று அவரே கூறுவதால் அறியலாம். ஆனல், தற்காலம் பதிப்பிக்கப்

பட்ட சில பிரதிகளில் 3081-பாடல்கள் உள்ளனவே என்றால், அதிகப்படியாய் உள்ளவை எல்லாம் இடையில் பிற புலவர்களால் நுழைக்கப்பட்டவையும், ஒரே பாட்டை இரண்டு மூன்று இடங்களில் திருப்பி அச்சடிக் கப்பட்டவையும் ஆகும். திருமூலர் பாடிய பாட்டுக் களில் சிலவற்றை எடுத்துவிட்டு, சிலர் புதுப் பாட்டுக் களைப் பாடிச் சேர்த்துள்ளார்கள். இஃது எதனால் தெரி கிறது என்றால், உரையாசிரியர்களாலும், பிற்பட்ட நூலாசிரியர்களாலும் எடுத்து ஆளப்பட்ட திருமந்திரப் பாடல்கள் இப்போது சில பிரதிகளில் இல்லாமலிருப் பதுவே சான்றாகும்.

பதினான்கு அறிவு நூல்கள் (சாத்திரங்கள்) என்று தற்காலம் நம்மிடம் இருக்கும் நூல்கள் ஏற்படுவதற்கு முன்னே, தமிழ் நாட்டில் அறிவு நூலாக (சாத்திரமாக)த் திகழ்ந்தது திருமந்திரமே யாகும். பதினான்கு அறிவு நூல் களில் முதல் இரண்டு நூல்களான திருவுந்தியாரும், திருக் களிற்றுப்படியாரும் திருமந்திரத்தின் வழித்தானவை என்று கூறினால் மிகையாகாது. என்னெனின், அவ்வி ரண்டு நூல்களிலும் உள்ள கருத்துக்களும், வாக்கியங் களும் திருமந்திரத்தையொட்டியேஅமைந்து கிடக்கின்றன.

உதாரணமாக, 'அத்திப்பழமும் அரைக்கீரை நல் வித்தும்'- (160) என்ற திருமந்திரப் பாட்டின் கருத்தும் வாக்கியமும், "முத்தி முதலுக்கே...... " (42) என்ற திருவுந்தியார்ப் பாட்டிலும், "வாமத்தோர் தாமும்... " (327) என்ற திருமந்திரப் பாட்டின் கருத்தும் வாக்கிய மும், "காயத்துண் மெய்ஞ்ஞான...... "- (43) என்ற திருவுந்தியார்ப் பாட்டிலும் காணலாம். இப்படியே பல பாடல்களைக் காட்டலாம்; விரிவஞ்சி விடுத்தாம்.

ஆதலின், திருவுந்தியார் - திருக்களிற்றுப் படியார் ஆசிரியர்கள் திருமூலர் ஞானபரம்பரையில் வந்த ஆசிரியர் ஒருவரால் உபதேசம் பெற்றவர்கள் என்பது அறியக் கிடக்கின்றது. திருச்சிராப்பள்ளியில் உள்ள **மௌன மடம்** மூலன் மரபில் வந்தவர் ஒருவரால் ஏற்பட்டதே ஆகும். தாயுமானவர் உபதேசம் பெற்றதும் அந்த மடத்திலேதான். தாயுமானவருக்குப் பின் அவர் மாணவர் அருளையர் முதலியோரால் ஏற்படுத்தப்பட்ட **தீட்டை மடமும்** மூலன் மரபைச் சேர்ந்ததுவே ஆகும்.

பதினான்கு அறிவு நூல்களில் (சித்தாந்த சாத்திரங் களில்) தலைசிறந்து விளங்கும் சிவஞான போதக்கருத் துக்கள் திருமந்திரத்தில் உண்டா என்றால் காட்டுதும்:

சிவஞான போதம் முதல் மூன்று சூத்திரங்களில் கூறிய கருத்துக்களைத் திருமந்திரத்தில்,

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதிஅணு கில்பசு பாசம் நிலாவே"—115

என்ற பாட்டிலும்,

4—5—6-ஆம் சூத்திரங்களின் கருத்துக்களை,

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை யறியு மறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே"-2355

என்ற திருமந்திரப் பாட்டிலும்,

7—8—9-ஆம் சூத்திரங்களின் கருத்துக்களை,

"பெட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை
யொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்

தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே"1781

என்ற திருமந்திரப் பாட்டிலும்,

10—11—12-ம் சூத்திரங்களின் கருத்துக்களை,

"என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னையிட்டென்னைஉசாவுகின்றேனே"-2366

என்ற திருமந்திரப் பாட்டிலும், அடக்கியுள்ளமை காண்க.

பதினான்கு அறிவு நூல்களிலும் திருமந்திரக் கருத்துக்களும் வாக்கியங்களும் ஆங்காங்கே மிளிர்வதைத் தனித் தனியாகக் காட்டப்புகின் விரியும் என்று அஞ்சி விடுத்தாம்.

இத்தகைய அரிய பெரிய நூலை நல்ல முறையில் அச்சிட்டுத் தமிழ் உலகிற்கு வழங்கும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** புகழ் இறைவன் திருவருளால் நீடு நிலவுவதாக.

*10/98, வேங்கடசாமி ரோடு,*
*ஆர். எஸ். புரம், கோவை*
*20—3—1951.*

இங்ஙனம்,
**துடிசைகிழார் அ. சிதம்பரனார்**

திருச்சிற்றம்பலம்

# திருமந்திர ஆராய்ச்சி

"**நம்பிரான்** திருமூலன் அடியார்க்கும் அடியேன்"
— **திருத்தொண்டத்தொகை.**

உறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே"* - 86
**மந்திரமாலை**

**சை**வத் திருமுறைகள் பன்னிரண்டும் முருகவேளின் பன்னிரு கண்கள் போலவும், பன்னிரு திருக்கைகள் போலவும் தம்மை நாடிப் போற்றும் உயிர்களுக்கு ஆக்கந்தரவல்லன. இப்பன்னிரண்டு திருமுறைகளுள் பத்தாவதாக நிலைபெறுவது **திருமூல நாயனார்** திருவாய் மலர்ந்த "**திருமந்திரம்**" என்னும் உயரிய மந்திரநூல்.

## ஆசிரியர் வரலாறு

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகிய இத்திருமூலரைப் பற்றிய முதற்குறிப்பை நம்பி ஆரூரர் அருளிய திருத்தொண்டத் தொகையில் "**நம்பிரான் திரு மூலன்** அடியார்க்கும் அடியேன்" என்னும் பகுதியிற் காண்கின்றோம். திருத்தொண்டத்தொகையிற் "பிரான்"[1] என்னும் அருமைச் சொல்லால் இருவரையே ஆரூரர் போற்றினர். ஒருவரை "எம்பிரான்" எனப்போற்றி செய்தார். அவ்வொருவர் "**சம்பந்தர்**". மற்றொருவரை

*இதுபோல் வரும் எண்கள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடாகிய இந்தத் திருமந்திர நூலின்கண் உள்ள வரிசை எண்களைத் தழுவி நிற்பன.

[1] திருப்புகலூர் - 2—115—7. பிரான்-தலைவன்; 'தன்னை நானும் **பிரான்** என்றறிந்தேனே' — அப்பர் 5—91—8.

" **நம்பிரான்** " என நயந்தேத்தினர். அவ்வொருவர் "**திருமூலர்**". "கோவணம் பேணுமேனும் **பிரான்** என்பவரால் எம்பெருமானையே" என்னும் சம்பந்தர் திருவாக்கினின்றும் 'பிரான்' என்னும் சொல்லின் சிறப்புப் பெறப்படும். இத்தகைய சிறப்புப் பெயரைச் சம்பந்தருக்கும் திருமூலருக்குமே சூட்டினர் ஆரூரர் என்றால் ஆரூரருக்குத் திருமூலர்பால் இருந்த மதிப்பு எப்பெற்றியது என்பது நன்கு தெரிகின்றது. ஆரூரர் தவராச யோகியாகிய திருமூலரை " **நம் பிரான்** " என வியந்து போற்றாது வேறு எவ்வாறுதான் போற்றக்கூடும்!

ஆரூரருக்குப் பின்னர் வந்த நம்பியாண்டார் நம்பியும் ஆரூரைப் பின்பற்றித் திருமூலரைப் 'பிரான்' என்றே தாமும் போற்றுகின்றனர்; தாம் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில் தம் உச்சியில் திருவடி சூட்டிய பிரான் திருமூலர் என்று அவரைப் போற்றி செய்து, அவரது வரலாற்றையும் சுருக்கிக் கூறியுள்ளார். சாத்தனூரிற் பசுக்களை மேய்த்திருந்தவனுடைய உடலிற் புகுந்து அவ்வுடலில் இருந்தபடியே சிவபிரானைத் "தமிழின்படி மன்னு வேதத்தின் சொற்படியே" பரவின **பிரான்** திருமூலர் என்று பின்வரும் பாடலில் விளக்குகின்றார் :

" குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல
மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன்
தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி
யேபர விட்டெனுச்சி
**அடிமன்ன வைத்த பிரான்
மூல னாகின்ற அங்கணனே.** "

நம்பியாண்டார் நம்பி இங்ஙனம் சுருக்கமாகக் கூறிய வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் தாம் அருளிய பெரிய புராணத்தில் விளக்கமாக எடுத்தோதியுள்ளார். பெரியபுராணத்தின்படி திருமூலர் வரலாறு சுருக்கமாகப் பின்வருமாறு:

கயிலைமால் வரையைக் காத்தருளும் நாயகர் நந்தி தேவரின் திருவருள் பெற்ற யோகிகளுள் ஒருவர் திருமூலர். அவர் அணிமாதி சித்தி பெற்றவர்; பொதிய மலையிலிருந்த தம் நண்பர் குறுமுனிவரொடு சில நாள் உடனுறைய விரும்பிப் புறப்பட்டுக் கேதாரம், பசுபதி நேபாளம், காசி, பருப்பதம், காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருவதிகை, தில்லை முதலிய தலங்களைத் தரிசித்துத் திருவாவடுதுறைக்கு வந்து சிவதரிசனஞ்செய்து புறப்பட்டுச் சாத்தனூர் என்னும் ஊருக்கு அருகில் வரும்பொழுது அங்குப் பசுக்கள் மேய்ந்து கொண்டிருக்கும் இடத்தில் அவைகளை மேய்க்கும் இடையன் இறந்து கிடப்பதையும், அவனைச் சுற்றிப் பசுக்கள் கண்ணீர் விட்டுப் புலம்பி நிற்பதையுங் கண்டார். இந்த ஆயன் உயிர்பெற்று எழுந்தாலொழிய இப்பசுக்களின் துயரம் நீங்காதென உணர்ந்த இக்கருணையாளர் தமது உடலை ஒருபுறம் சேமித்து வைத்துத் தம் உயிரை இறந்து கிடந்த மூலன் என்னும் பெயரிய அந்த இடையன் உடலில் அடைவித்து மூலனாய் உயிர்பெற்றெழுந்தனர். ஆயன் எழுந்ததைக் கண்ட பசுக்கள், அவனை நாத் தழும்ப நக்கி, மோந்து, அணைந்து கனைப்பொடு நயந்து, களிப்பினால் வாலெடுத்துத் துள்ளித் துயரம் நீங்கின; மாலைப்பொழுது வந்ததும் பசுக்கள் தத்தம் இல்லங்களுள் தாமே நுழைய மூலனும் இவர் வெளியே நின்றார். இவர்

காலந் தாழ்த்து நிற்பதைக்கண்ட இவர்மனைவி இவருக்கு ஏதோ ஈனம் அடுத்ததுபோலும் எனக்கவன்று வந்து இவரை அழைக்க, 'எனக்கு உன்னுடன் யாதொரு தொடர்பும் இல்லை' என்று இவர் சொல்லிப் பொது மடம் ஒன்றிற் புகுந்தார். பிற்றை நாள் நல்லார் பலர் வந்து இவரை அழைத்தும் பயனில்லாது போக 'இவருக்கு ஞான உணர்வு வந்துவிட்டது. இவர் இனி வர மாட்டார்' எனக்கூறி மூலன் மனையாளை அவர்கள் அழைத்துச் சென்றனர். அவர்கள் நீங்கியதும் திருமூலர் தமது பழைய உடலைத் தேடினர். அது காணப்பட வில்லை. 'ஆகமப் பொருளைத் தமிழில் வகுக்கவேண்டி இறைவன் உடலை மறைப்பித்தார் எனத் தமது ஞான உணர்வால் இவர்தேர்ந்து திருவாவடுதுறையைஅடைந்து அவர் ஓர் அரசமரத்தின் கீழ்ச் சிவயோகத்தில் அமர்ந்து, ஆண்டுக்கு ஒரு பாடலாகச் சைவாகமங்களில் உணர்த் தப்பட்ட ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நிலைகளை விளக்கும் மூவாயிரம் பாடல்களைத் தெள்ளுதீந் தமிழில் உலகோர் உய்யும்படி பாடி, மூவாயிரம் ஆண்டு இப்புவியில் மகிழ்ந்திருந்து கயிலையிற் சிவன்தாள் அடைந் தார். அவர் அங்ஙனம் பாடிய பாடல்களுக்குத் 'திருமந் திரமாலை', 'திருமந்திரம்' எனப் பெயர்கள் வழங்கலாயின.

**திருமூலர் காலம்:** நம்பி ஆரூரரால் போற்றப்பட் டமையால் ஒன்பதாம் நூற்றுண்டுக்கு முன்னர் இவர் இருந்தார் என்பது தெளிவு. 'தமிழ் மூவாயிரஞ் சாத்தி மன்னிய மூவாயிரத்தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்து' எனச்சேக்கிழார் பெருமான் கூறுவதால் கி.மு.2100க்கு முன்னரும் சித்தப் பரசித்தராகிய இவர் இருந்திருத்தல் வேண்டும். பல்லாண்டு இவர் உயிர் வாழ்ந்தனர் என்பது

'தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே'—74
'இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி'-80

என்னும் இவர் திருவாக்காலும், 'சந்ததமும் இளமையோ டிருக்கலாம்' எனத் தாயுமானவர் கூறியிருத்தலாலும் ஐயமின்றிக் கொள்ளக்கிடக்கின்றது.

இவர் அருளிய திருமந்திரமாலை என்னும் நூல் திருவாவடுதுறைத் திருக்கோயிலுட் பலிபீடத்தருகிற் புதைந்து கிடந்ததாகவும், ஆங்குத் தரிசனத்துக்கு வந்த திருஞானசம்பந்த சுவாமிகள் பலிபீடத்தருகே வணங்கி எழுந்த பொழுது இங்குத் தமிழ் மணம் கமழுகின்றது; தோண்டிப் பாருங்கள் எனக்கூற, அங்ஙனமே தோண்டின பொழுது இத்திருமந்திர நூல் கிடைத்ததென்று. ஆன்றோர் கூறுவர். இவ்வரலாறு உண்மையாயின் திருமூலர் காலம் ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னரும் போகும்.

**திருமூலர் வரலாறு: அகச் சான்றுகள்:**

திருமந்திர நூலினின்றே திருமூலரைப் பற்றிய பல அரிய குறிப்புக்கள் கிடைக்கின்றன; அவைதாம் :

**1.** சிவபிரானே இவரது வழிபடு கடவுள் :
'நந்தி என்றால் தொழப்படும் எம்இறை'—9

**2.** நந்தியின் அருளால் '**நாதன்**' என்னும் பட்டத்தைப் பெற்றார்; அதுகொண்டு இவர் பெயர் '**திருமூல** **நாதர்**' எனவும் வழங்கும்.

'நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்-68
'நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்......
என்றோ டெண்மருமாமே'—67

3. மூலன் என்னும் ஆயன் உடலிற் புகுந்ததும் நந்தியின் திருவருட் குறிப்பே :

'நந்தி அருளாலே மூலனை நாடி'—68, 92

4. நந்தி தேவரிடம் அருள்பெற்ற எண்மருள் இவர் ஒருவர்; மற்றைய எழுவர் நந்திகள் நால்வர். சிவ யோக மாமுனி, பதஞ்சலி, வியாக்ரமர்—67

5. திருமூலரிடம் மந்திரோபதேசம் பெற்றவர் மாலாங்கன், கந்துரு, கஞ்சமலையன் முதலிய ஏழுபேர் :

'மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்—கஞ்ச
மலையனொ,டிந்தஎழுவரும்என்வழியாமே'-69, 1443

6. அரனடியை நாடோறும் சிந்தை செய்து ஆகமம் இவர் செப்பினர் :

'.............அரனடி நாள்தோறும்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற்றேனே'—73

7. திருவாவடுதுறையில் அரச மர நிழலில் இருந்து, சிவநாமங்களை ஓதிக்கொண்டும் ஞானபூசை செய்து கொண்டும் எண்ணிலி காலம் இருந்தனர்.

'ஆவடுதண்டுறை...சிவபோதியின் நீழலில்...நாதனை
அர்ச்சித்து....எண்ணிலிகோடிஇருந்தேன்'-78,79,80,82

8. தமது புகழைத் தமிழிற் புலப்படுத்துமாறே இறைவர் தன்னைப் படைத்தனர் ;

'என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே'—81

9. வான்வழியாக வந்தனர் ;

'வான்வழி யூடு வந்தேனே'—83

10. அவயோகஞ் சாராத சிவயோகி இவர் :
'அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே' — 122

11. இறைவனது திருவடித் தீட்சையும் சட்சு தீட்சையும் (கண்ணோக்கமும்) பெற்றவர் இவர் :

'திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்து' — 1597

'இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி' — 1596

'......எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத்தான் அருட்கண் விழிப்பித்து'-114

12. இராப்பகலற்ற இடத்தே களித்திருந்த பரம யோகி இவர்.

'இருந்தேன் இராப்பக லற்ற இடத்தே'-80

13. தேவியின் அருட்பிரசாதம் பெற்றவர் இவர். திருவாவடுதுறை ஒப்பிலா முலையம்மையைத் தியானித்திருந்தவர் :

'நேரிழையாவாள்...என் பிறப்பறுத் தாண்டவள்'–78

'ஆவடுதண்டுறை-சீருடை யாள்பதம் சேர்ந்திருந்
தேனே' - 78

14. வேதாகம சாரத்தைத் தமிழிற் செப்ப வந்தவர் இவர்:

'வேதத்தைச் செப்ப வந்தேனே' — 77

'ஆகமம் செப்ப லுற்றேனே' — 73

15. திருமூலர் பெருங் கருணையாளர் என்பது:

'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'—85
என்னும் அருமை வாக்கிற் புலப்படுகின்றன.

## நூல் நுதலும் பொருள்கள்

திருமந்திரம் வேதப்பொருளும் சிவாகம சாரமும் வடித்துள்ள அருமை நூல். 'வேதத்தைவிட்ட அறம் இல்லை, வேதத்தின் ஓதத் தகும் அறம் எல்லாம் உள'(51) என்று வேதத்தைச் சிறப்பித்தும், 'அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்...எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே, (58) என ஆகமத்தின் பெருமையைக் கூறியும், திருமூலர் தமது கருத்துக்களை வெளியிட்டுள்ளார். சிறப்புப்பாயிரமாம் பாடல் ஒன்றில்:

'தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே'—101

என ஆகமத்தை மூவாயிரம் பாடல்களால் ஒன்பது தந்திரமாகத் திருமூலர் மொழிந்துள்ளார் எனக் கூறப்பட்டுளது.

**பாயிரத்தில்** - கடவுள் வாழ்த்து, வேதாகமச் சிறப்பு, திருமூலர் வரலாறு முதலியனவும்,

**முதல் தந்திரத்தில்**-உபதேசம், யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, கொல்லாமை, கல்வி, கள்ளுண்ணாமை முதலியனவும்,

**இரண்டாம் தந்திரத்தில்**-அட்ட வீரட்டம். இலிங்க புராணம், பஞ்ச கிருத்தியம், கர்ப்பக் கிரியை. சிவநிந்தை, குருநிந்தை முதலியனவும்,

**மூன்றும் தந்திரத்தில்**-அட்டாங்க யோகம், அட்டமாசித்தி முதலியனவும்,

**நாலாந் தந்திரத்தில்**-திரு அம்பலச்சக்கரம், நவகுண்டம், வயிரவி மந்திரம் முதலியனவும்,

**ஐந்தாந் தந்திரத்தில்** - சரியை, கிரியை, யோக ட ஞானம் சத்திநிபாதம் முதலியனவும்,

**ஆறுந் தந்திரத்தில்** - குரு தரிசனம், திருநீறு, துறவு, தவ வேடம், ஞான வேடம் முதலியனவும்,

**ஏழாந் தந்திரத்தில்** - ஆறுதாரம், சிவபூசை, குரு பூசை, சமாதிக் கிரியை, பசு இலக்கணம் முதலியனவும்,

**எட்டாந்தந்திரத்தில்** - அவத்தைகள், வாய்மை, அவா அறுத்தல், பத்தி, முத்தி முதலியனவும்,

**ஒன்பதாந் தந்திரத்தில்** - பஞ்சாட்சரம், சிவ தரி சனம், சூனிய சம்பாஷணை, தோத்திரம் முதலியனவும் கூறப்பட்டுள்ளன.

சூனிய சம்பாஷணை என்பது எளிதில் பொருள் விளங்காதனவாய்க் குரு மூலமாகப் பொருள் காண வேண்டியனவாயுள்ள பாடல்களைக் கொண்டது. படிக்க வேடிக்கையாயிருக்கும்; உதாரணமாகக் கீழ்க் காட்டி யுள்ள பாடலைக் காண்க :

வழுதலை விடத்திடப் பாகல் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினர் தோட்டக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே—**2869**

["வழுதலை வித்து - யோகப்பயிற்சி; பாகல்-வைராக் கியம்: புழுதியைத் தோண்டினேன் - தத்துவ ஆராய்ச்சி செய்தேன்; பூசணி பூத்தது-சிவம் வெளிப்பட்டது; தோட்டக் குடிகள்-இந்திரியாதி விடயங்கள்; பழுத் தது - கிடைத்தது; வாழைக்கனி - ஆன்ம லாபம்" இது சைவப் பெரியார் துடிசைக்கிழார் எழுதியுள்ள உரைக் குறிப்பு.]

பிறநூல்களிற் போலவே திருமந்திரத்திலும் இடைச் செருகலான சில பாடல்கள் உள்ளன, சிலபாடல்கள் இருமுறை, மும்முறை வந்துள்ளன; எடுத்துக் காட்டாக -448-3011; 490-2012-3024; எண்ணுள்ள பாடல்களைப் பார்க்கவும். இவைகள் நன்கு ஆயப்பட்டு இப்பதிப்பிலும் சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பிலும் காட்டப்பட்டுள; சைவப் பெரியார் துடிசைகிழாரது பதிப்பில் திருத்தப்பட்டுள.

## மனப்பாடஞ் செய்யத் தகுந்தன

மனப்பாடஞ் செய்யத் தகுந்த பல பாடல்களும் பாடற் பகுதிகளும் இந்நூலில் உள்ளன; அவற்றுட் சிறந்தன சில எடுத்துக் காட்டுவாம் :

### 1. பாடல்கள்

1. யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே—252

2. அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே—270

3. பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடும்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே—532

4 எண்ணு யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணுர் அமுதனைக் கண்டறி வாரில்லை
உண்ணுடி உள்ளே ஒளிபெற நோக்கிஞற்
கண்ணுடி போலக் கலந்துநின் ருனே—603

5 உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே—725

6 அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே—916

7 குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடும் குருடும் குழிவிழு மாறே—1680

8 மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே—2290

9 ஆசூச மில்லை அருநிய மத்தருக்
காசூச மில்லை அரனை அர்ச்சிப்பவர்க்
காசூச மில்லையாம் அங்கி வளர்ப்போருக்
காசூச மில்லை அருமறை ஞானிக்கே—2552

10 சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே—2716

## 2. பாடற் பகுதிகள்

1 சிவனொடொக் குந்தெய்வம் தேடினும் இல்லை—5
2 நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்—85
3 பதியினைப் போற்பசு பாசம் அநாதி-115
4 ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கிப்-133
5 பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டு...
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே-145
6 வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்-229
7 நல்லாரைக் காலன் நணுககில் லானே-238
8 வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்-240
9 ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்—250
10 அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியினை எய்தவொண் ணாதே-272
11 பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்-298
12 ஈச னடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்—534
13 பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே-545
14 உடம்பார் அழியில் உயிரார் அழிவர்........
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே-724
15 அஞ்சுள ஆனை அடவியுள் வாழ்வன
அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன-977
16 சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது-1459
17 சைவம் சிவனுடன் சம்பந்த மாவது-1512
18 குருவே சிவமெனக் கூறினன் நந்தி-1581
19 ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை — 1624

20 வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து
நீ யொன்று செய்யல் — 1683

21 மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்—1726

22 அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள்
தோன்ரு—1808

23 அருளிற் றலைநில்லார் ஐம்பாசம் நீங்கார்—1814

24 செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை
—2103, 2303

25 வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை — 2103

26 ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்—2104

27 இறக்கின்ற காலத்தும் ஈசனை உள்கும்—2108

28 ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன—504, 2175

29 வெல்லும் அளவில் விடுமின் வெகுளியை 2808

## பிற உண்மைகள்

i நூலிற் பல இடங்களிற் பல பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன; எடுத்துக்காட்டாக நாலாந் தந்திரத்தைப் பார்க்கவும்.

ii சைவசித்தாந்த உண்மைகள் பல ஆங்காங்கு விளக்கப்பட்டுள. எவ்வண்ணம் ஏத்தினும் அவ்வண்ணத்தில் ஈசன் அருள்புரிவான் என்னும் அரிய உண்மை-

'எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்திறல்
அப்பரி சீசன் அருள்பெற லாமே—36

எனத் தெளிவுற விளக்கப்பட்டுள்ளது. ஐந்தெழுத்தின் பெருமை இருவினையொப்பு, மலபரிபாகம் முதலிய உண்மைகள் எடுத்தோதப்பட்டுள—966, 977, 1527.

iii தல தரிசனத்தின் இன்றியமையாமையும் அங்ஙனம் வணங்கினோர் நெஞ்சத்துள் இறைவன் கோயில் கொள்வதும் —

‘ நாடு நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மானென்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக்
கொள்வனே — 1445

என்னும் பாடலில் விளக்கப்பட்டுளது, இச்செய்யுள்.

‘ தேடிக் கண்டு கொண்டேன் ... தேவனை
என்னுளே தேடிக் கண்டு கொண்டேன் ’

என்னும் அப்பர் பெருமான் தேவாரப்பாடலை நினைவூட்டுகின்றது.

## திருமந்திர நூலின் பழமையும் பெருமையும்

திருமந்திரம் மிகப் பழைய நூலாதலின் திருமூலருக்குப் பின்வந்தோர் பலரும் இந்நூலின் சொல்லையும் பொருளையும் ஆண்டுள்ளார்கள் [ஒப்புமைப் பகுதியைப் பார்க்க — பக்கம் 48].

i பெரியார் — **துடிசைகிழார்** ‘ தமிழ் மூவாயிரத்தினின்றும் திருவள்ளுவர் எடுத்தாண்ட பகுதிகள் ’ என்று சில பகுதிகளை எடுத்துத் தமது திருமந்திர நூற்பதிப்பிற் காட்டியுள்ளார்.

ii சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பில் உள்ள திருமூலர் வரலாற்றுக் குறிப்பில் திரு. **ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள்** ‘ திருவாசகத்துக்கும் திருமந்திரத்துக்கும் பலவகையான சொல், சொற்றொடர், கருத்து ஒற்றுமைகள் காணப்படுதலால் இவ்விரண்டு நூல்கட்கும் ஒரு தொடர்பிருத்தல் வேண்டும் ’’ — என எழுதியுள்ளார்.

iii அப்பர் பெருமானும் திருமந்திரச் சொற்றொடர்களையும் கருத்துக்களையும் ஆண்டுள்ளார் — [ஒப்புமைப் பகுதியைப் பார்க்க — பக்கம் 48].

iv சித்தாந்தம் மலர் 19-இதழ் 12-ல் திரு பூ. ஆலாலசுந்தரச் செட்டியாரவர்கள் 'திருமந்திரத்திலுள்ள சில பாடல்களும், நாலடியாரிலுள்ள சில பாக்களும் சொல்லினும் பொருளினும் ஒத்துள்ளன எனக் கூறித் 'திருமந்திரமும் நாலடியாரும்' என்ற ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.

v 'திருமூல நாதருக்கும் அருணகிரி நாதருக்கும் ஒத்த இயல்புகள் பலவுள. அவர் தம் நூலகத்தும் ஒற்றுமை வாய்ந்த இடங்கள் பலவுள - எனக்காட்டி யானும் ஒரு சிறு நூல்* எழுதியுள்ளேன்.

vi அவிரோத உந்தியார் உரை, கொலை மறுத்தல் உரை, சிவப்பிரகாசம் மதுரைச் சிவப்பிரகாசர் உரை, சிவப்பிரகாசம் சிந்தனை உரை, சிவதருமோத்தர உரை, நெஞ்சுவிடுதூது உரை, சிவஞான பாடியம், வைராக்கிய தீப உரை ஆகிய இவ்வுரை நூல்கள் எட்டிலும் உரையாசிரியர்கள் திருமந்திரச் செய்யுள்களைத் தாம் கூறும் கருத்துக்களுக்கு மேற்கோள்களாக ஆண்டுள்ளார்கள் — (சமாஜ மூன்றும் பதிப்பு – பக்கம் 19-26).

vii தாயுமானவர் 'அறிஞர் உரை' என்னும் பகுதியில்-
திரையற்ற நீர்போல் தெளியஎனத் தேர்ந்த
உரைபற்றி யற்றங் கொடுங்குநா ளெந்நாளோ-

என்னுங் கண்ணியில் :—

திரையற்ற நீர்போலச் சிந்தைதெளி வார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே—2995

---

* அந்நூல் 'திருமூல நாதரும் அருணகிரி நாதரும்' என்பதாகும்.

எனவரும் திருமந்திரச் செய்யுளையும்,

எந்நாட் கண்ணி—குரு மரபின் வணக்கம்

என்னும் பகுதியில்—

சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்கதிரு மூலனருள் மேவுநா ளெந்நாளோ—

எனத் திருமூலர் பெருமையையும் மிக அருமையாகப் பாராட்டியுள்ளார்.

viii அருளையர் அருள் வாக்கிய அகவலில்—

மூலன் மரபின் முளைத்த மௌனிதன்
பாலன்யா னெனவும் பரிவொடும் பகர்ந்தோன்—

எனத் தாயுமானவரைத் துதித்த இடத்துத் திருமூலரைக் குறித்துள்ளார்.

ix திருக்குறள், நான்மறை, தேவாரம், முனி மொழி, திருக்கோவையார், திருவாசகம் இவையெலாம் உயரிய, ஒத்த, இணையிலாப் பொருள் ஒன்றையே குறிப் பன என்பதற்கு—

'தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் – கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்'

என்னும் ஔவையார் அருளிய நல்வழிச் செய்யுளே தக்க சான்றும்.

திருக்குறள் முப்பால் செப்பி என்னும் தேன்பிலிற் றும் தன்மையதாய் விளங்குகின்றது; திருமந்திரம் நாற் பாலும் நவின்று என்னும் தேன்பிலுற்றும் பெற்றிய தாய்ப் பொலிகின்றது. இந்நூலின் அருமை, பெருமை தெரிந்தே சித்தாந்த தீபிகை, செந்தமிழ் முதலிய பத்திரி

கைகளில் இந்நூலிலுள்ள செய்யுள்கள் சிலஉரை எழுதப் பெற்றன; சில ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற்றன; அண்மையில்-மாம்பாக்கம்-குருகுலஆசிரியர் திரு **இளவழகனார்** அவர்களைக்கொண்டு, திருமந்திரப்பாடற் பொருள் விளக்கச்சொற்பொழிவுகளும் சென்னையில் நடந்தேறின. இத்தகைய அருமை பெருமை வாய்ந்த இந்நூல் திருப்பனந்தாள் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமிநாத சுவாமிகள்** அவர்களின் ஏழாம் ஆண்டு நினைவு வெளியீடாகக் காசி மடத்துத் தலைவர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களின் அன்பின் முதிர்வால் வெளிவருகின்றது.

பன்னிரு திருமுறையும் என்னிரு கண்மணியாம்
என்ன எழுந்திடுமோர் இச்சை பிறங்குதலால்
என்னது செல்வமெலாம் சைவம் இலங்குறவே
நன்னர் அளித்திடுவேன் நானெனுந் தன்மையராய் -

இந்நாள் விளங்குகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் சைவநெறிதழைத்தோங்கவேண்டி இயற்றும் அறப்பணிகள் எண்ணிலவாய் எழுகின்றன.

**நந்தி** அருளாலே நாதனும் பேர்பெற்ற திருமூல நாதரின் பெருமையை "**அருணந்தி**" அல்லது வேறு யாவர் அறிவர்? நந்தி அருளாலே "**அருணந்தி**" வாழ்க பல்லாண்டு; அவர் தாபிக்கும் அறம் பலவும் வாழி, வாழி, வாழி.

**202, லிங்கசெட்டித் தெரு,**
**சென்னை.**
**22—3—1951**

இங்ஙனம்:
**வ.சு.செங்கல்வராயபிள்ளை, M.A.**

சிவமயம்

# ஒப்புமைப் பகுதி

[ திரு. தணிகைமணி இராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A. ]

| செய்யுள் எண் | திருமந்திர நூல் மூலம் அல்லது கருத்து | நூல் | நூற்பகுதி | ஒப்புமை நூல் மூலம் அல்லது கருத்து |
|---|---|---|---|---|
| 1 | ஐந்து வென்றனன் | தே—சம்<br>தே—அப் | 1—113—10<br>5—98—7 | வென்றவன் புலனைந்தும்<br>வென்றானைப் புலனைந்தும் |
| ,, | ஒன்றவன் தானே, இரண்டவன் இன்னருள், நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான், ஐந்து வென்றனன் ஆறுவிரித்தனன்... | திருப்புகழ் | 389 | தொல்லை முதல் தானென்று, மெல்லியிரு பேதங்கள், சொல்லு குண மூவர்தம் எனவாகித், துய்ய சதுர் வேதங்கள், வெய்யபுலனே ரைந்து, தொய்யு பொருளாறங்கம் எனமேவும் ...... ஆனந்த பௌவம் |
| 7 | தன்னையொப்பா யொன்றும்இல்லாத் தலைமகன் | திருக்குறள்<br>தே—சம்<br>தே—அப் | 7<br>26—2—8<br>6—1—2 | தனக்குவமை யில்லாதான்<br>தன்னேர் பிறரில்லானை<br>மற்றாருந் தன்னொப்பா ரில்லாதானை |

தே: தேவாரம்; இதன் எண்கள் சமாஜப் பதிப்பின் எண்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 81 | கண்ணகத்தே நின்று காதலித் தேனே | திருவாச | திருப் பள்ளி—9 | கண்ணகத்தே நின்று களிதரு தேனே |
| 81 | என்னை நன்முக இறைவன் படைத் தனன், தன்னை நன்முகத் தமிழ்ச் செய்யுமாறே | கந்—அநு | 17 | யாமோதிய கல்வியும் எம் அறிவும் தாமேபெற வேலவர் தந்ததனுல் (வேலவர் தாம்பெறவே தந்ததனுல்) |
| 95 | ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை | தே—சம்<br>தே—அப் | 3—112—1<br>4—112—10 | இவர் தன்மை அறிவார் ஆர் ?<br>நின்னைக் காணும் படித்தன்று நின் பெருமை |
| | | .. | 6—11—8 | ஆரொருவர் அவர் தன்மை அறிவார் ? |
| 121 | உடம்பொடு செத்திட்டிருப்பர் சிவ யோகி யார்களே | கந்—அலங் | 19 | நின்னை யுணர்ந்துணர்ந்து எல்லாம் ஒடுங்கிய நிர்க்குணம் பூண்டு, என்னை மறந்திருந்தேன் இறந்தே விட்ட திவ் வுடம்பே. |
| 128 | அளித்தான் உலகெங்கும் தானுன உண்மை | திருமுருகு | 293 | உலகத் தொரு ீயாகத் தோன்ற விழுமிய பெறலரும் பரிசில் நல்குமதி |
| 126 | முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணி யாய் ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்கு | கந்—அநு | 47 | ஆருறையும் நீத்ததன் மேல்நிலையைப் பேரு அடியேன் பெறுமாறுளதோ |
| .. | ஆனந்தத் துள்ளொளிபுக்கு......... சிவங் கண்டு | கந்—அலங் | 55 | ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவங் கண்டு |

| | | | | |
|---|---|---|---|---|
| 129 | தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம்முளே | கந்—அலங் | 55 | முருகன் உருவங் கண்டு தூங்கார் |
| | | திருப்புகழ் | 757 | உணர் வொடு தூங்குவார்க்கே விளங்கும் அநுபூதி |
| 140 | தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்ததே | கந்—அலங் | 95 | சத்தியம்...சான்றோரும் அற்ற தனி வெளிக்கே வந்து சந்திப்பதே |
| 167 | காக்கை கவரிலென் கண்டார் பழிக் கிலென், பாற்றுளி பெய் யிலென் பல்லோர் பழிச்சிலென் தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங், கூத்தன் புறப்பட்டுப் போன இக்கூட்டையே | நாலடி | யாக்கை நிலை யாமை-6 | நார்த்தொடுத் தீர்க்கிலென் நன் ருய்ந் தடக்கிலென், பார்க்குழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென், தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும், கூத்தன் புறப்பட்டக் கால் |
| 171 | ஈட்டிய தேன்பூ...கூட்டி வைத்தி டும்...ஒட்டித் துரநதிட்டது வலி யார் கொள...கைவிட்ட வாறே | நாலடி | செல்வநிலை யாமை-10 | கொடாஅது வைத்திட்டி ஞரிழப்பர் ...உய்த்திட்டும் தேனீக் கரி |
| 172 | கூற்றன் வருங்கால் குதிக்கலுமாமே | ,, | ,, 6 | கூற்றங் குதித்துய்ந்தார் ஈங்கில்லை |
| 188 | ஐவரும் அச் செய்யைக் காவல் விட் டாரே | கந்-அலங் | 84 | ஐவருங் கைவிட்டு மெய்விடும போது |
| 234 | அந் தண்மை பூண்ட....அந்தணர் | திருக்குறள் | 30 | அந்தணர்...செந்தண்மை பூண்டொ ழுகலான் |
| 297 | வழித்துணையாய் மருந்தா யிருந்தார் | தே—சுந் | 7-70-9 | வானநாடனே வழித்துணை மருந்தே! |

| | | | | |
|---|---|---|---|---|
| 331 | இராப்பகல் அற்ற இடத்தே இருந்து ...பராக்கற | கந்-அலங் | 74 | ஐவர் பராக்கறல் வேண்டும்...என்ருல் இராப்பகலற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே |
| 409 | அப்பரி செண்பத்து நான்கு நூரு யிரம்...உயிராய் நிற்கும் | தே-சம் | 1-132-4 | உரைசேரும் எண்பத்து நான்கு நூரு யிரமாம் யோனி பேதம் |
| 603 | எண்ணுயிரத்தாண்டு யோகம் இருக்கினும் கண்ணுரமுதனைக் கண்டறி வாரில்லை உண்ணுடி உள்ளே ஒளி பெற நோக்கிஞல் கண்ணுடிபோலக் கலந்து நின்ருனே | கந்-அலங் | 85 | காட்டிற் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின் வீட்டிற்புகுதல் மிக எளிதே .. மூச்சை யுள்ளே ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமற் சாதிக்கும் யோகிகளே |
| 632 | போதுகந்தேறும் புரி சடையான் | திருக்குறள்<br>தே-சம் | 3<br>1-2-5 | மலர்மிசை ஏகிஞன்<br>மலர்மிசை யெழுதரு பொருள் |
| 1178 | அரனுக்குத் தாயும்மகளும் நல்தாரமு மாமே | திருவாச<br>திருக்கோ வையார் | பொற்சுண் ணம்-13<br>112 | எம்பெருமான் இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்<br>அவனத்தனும் மகனும்மில்லையான் |
| 1350 | சுவையொளி யூருேசை | திருக்குறள் | 27 | சுவை ஒளியூருேசை |
| 1459 | சிவனுக்குள்ளே சிவமணம்பூத்தது | திருப்புகழ் | 239 | சீவன் சிவச் சொருபம் |
| 1527 | இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி குருவென வந்து | கந்-கலி வெண்பா | 21-24 | சத்திநிபாதம் தருதற் கிருவினையும் ஒத்து வருங்காலம்......குருபரனென்ருேர் திருப்பேர் கொண்டு |
| 1529 | மாலை விளக்கும் மதியமும் | தே-அப் | 5-90-1 | மாசில் வீணையும் மாலை மதியமும் |

| | | | | |
|---|---|---|---|---|
| 1538 | குற்றந் தெளியாதார் குணங் கொண்டு கோதாட்டார் | திருவாச | அம்மானை 20 | குற்றங்கள்நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி |
| 1598 | உரையற் றுணர்வற் றுயிர்பரமற்று ...கரையற்ற சத்தாதி | கந்-அலங் | 61 | உரையற் றுணர்வற் றுடலற்று யிரற்று ... கரையற் ... றிருக்குமக் காட்சியதே |
| 1644 | சித்தம் சிவமாக | திருவா | அச்சோ—1 | சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி |
| 1722 | என்னுடல்கோயில் கொண்டானே | திருவா | பிடித்த—10 | புன்புலால் யாக்கை... பொன்னெடுங் கோயிலாப் புகுந்து |
| 1751 | ஆரும் அறியார் அகாரம் அவனென்று | திருக்குறள் | 1 | அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு |
| 1753 | அகர முதலா யனைத்துமாய் நிற்கும் | ,, | ,, | ,, |
| 1848 | ஊனினை நீக்கி யுணர்பவர் | தே—அப் | 4—2ந—3 | ஊனையேகழிக்க வேண்டில் உணர்மின்கள் வுள்ளத்துள்ளே |
| 1876 | உலகம் படைத்தான் | ,, | 6-3—3 | முந்தி உலகம் படைத்தான் |
| 1934 | ஒருபுற் பனிபோல் அரியதுளி விந்து ..வளரும் காயத்திலே | திருப்புகழ் | 862 | அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு ஆகமாகி |
| 1953 | மாதரை மாய வருங்கூற்றம் என்றுன்ன | ,, | 734 | காலன் பெண் தனக்குள கோலாகலம் இன்றெடுத்து இளையோராவிகள் மன்பிறப்பது போல் நீள் வடிவுடை மாதர் |
| 2053 | நேயத்தே நிற்கும் | திருவா | சிவபுரா-13 | நேயத்தே நின்ற நிமலன் |

| | | | | |
|---|---|---|---|---|
| 2090 | பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் பெறுதற்கரிய பிரானடி பேணுர் | கந்—அலங் | 67 | பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் நின் சிற்றடியைக் குறுகிப் பணிந்து பெறக் கற்றிலேன் |
| 2262 | இருவினை ஒத்திட இன்னருட் சத்தி மருவிட | கந்—கலி வெண்பா | 21-24 | திருமந்திரம் 1527 —என்பதன் நேர் பார்க்க |
| 2271 | ஆறுறுக் கப்பால் அரனினிதாமே | கந்—அநு | 47 | ,, 126—என்பதன் நேர் பார்க்க |
| 2303 | வெல்லும் அளவில் விடுமின் வெகுளியை | கந்—அலங் | 16 | விடுங்கோள் வெகுளியை |
| 2357 | அறிவு வடிவென் றருள் செய்தான் நந்தி | திருப்புகழ் | 1019 | அறிவும் அறியாமையுங் கடந்த அறிவ திருமேனி யென்றுணர்ந்து |
| 2362 | அறிவறியாமை கடந்தறி வாளுல் | ,, | ,, | ,, |
| 2580 | அறிவறியாமை இரண்டும் அகற்றி | ,, | ,, | ,, |
| 2865 | தித்திக்கும் தீங்கரும்பாய் அமுதாகி நின் றண்ணிக்கின்ருனே | திருவா | திருவே சறவு—10 | தேனும் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் |
| | ,, ,, | தே-அப் | 5—61—5 | கருப்புச் சாற்றிலும் அண்ணிக்கும் காண்மினே |
| 2888 | அண்டங்கள் ஏழுங் கடந்தன்று | ,, | 6—97—1 | அண்டங் கடந்த சுவடுமுண்டோ? |
| 2428 | எந்தையும் என்னை யறிய கிலானு கில் எந்தையை யானும் அறியகிலேனே | ,, | 5—91—8 | என்னை எதும் அறிந்திலன் எம்பிரான் தன்னை நானும் முன் ஏதும் அறிந்திலேன் |

| | | | | |
|---|---|---|---|---|
| 2436 | காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து ஏமம் பிடித்திருந்தேன் | திருக்குறள் | 360 | காமம் வெகுளி மயக்கம் இவை மூன்ற னுமங் கெடக்கெடுநோய் |
| 2550 | தேயத்துளேயென்றும் தேடித்திரிப வர் காயத்துள் நின்ற கருத்தறி யாரே | தே—அப் | 4–9–12 | தேடிக்கண்டு கொண்டேன் ...... என்னுளே தேடிக் கண்டு கொண் டேன் |
| 2586 | எவ்வா யுயிரும் இறையாட்ட ஆட லால் | ,, | 6-95-8 | ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே |
| 2593 | கரியுண் விளவின் கனிபோல் | சீவக சிந்தாமணி | 1122 | வெஞ்சின வேழமுண்ட விளங்கனி போன்று |
| | | திருப்புகழ் | 657 | வேழமுண்ட விளாங்கனியது போல |
| 2616 | அடுவன பூதங்கள் ஐந்தும் | தே—அப் | 4–76–10 | அடுவன அஞ்சு பூதம் |
| 2639 | பாலினுள் நெய்யாம் பழத்துள் இரதமும் | ,, | 6–15–1 | பாலின் நெய்யாம் பழத்தின் இரத மாம் |
| 2881 | பாலொடுதேனும் பழத்துள் இரத மும் | ,, | ,, | ,, |
| 2646 | ஆதிப்பிரான் தந்த வாளங்கை கொண்டபின் .... என்னை விலக்க வல்லாரில்லை | கந்—அலங் | 25,64–69 | ஞானச்சுடர் வடிவாள் கண்டாயடா அந்தகா—கட்டிப் புறப்படடா சத்தி வாள் என்றன் கையதுவே |

| | | | | |
|---|---|---|---|---|
| 2968 | நமன்வரில் ஞானவாள் கொண்டே எறிவன் | கந்—அலங் | 25, 64, 69 | ஞானவாளொன்று சாதித்தருள் கந்தச் சுவாமி எனைத்தேற்றிய பின்னர்க் காலன்...என்னை என் செய்யலாம் சத்திவா ளொன்றினல் சிந்தத் துணிப்பன்...த்ரிசூலத்தையே |
| 2744 | விம்மும் வெருவும் விழும் எழும் மெய் சோரும் | தே—சம் | 2—18—1 | வெருவா விழுமால் |
| 2850 | வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்.....நாதனை நாடுவேன் நானே | தே—அப் | 4—112—8 | வானந் துளங்கிலென்...தண் கடலும் மீனம்படிலென்......ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே |
| 2970 | நினைப்பும் மறப்பு மிலாதவர் | கந்—அலங் | 55 | நினைப்பும் மறப்பும் அரூர் |
| 2976 | விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின் கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே | ,, | 6 | பரமானந்தம் தித்தித் தறிந்த அன்றே கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே |

## ஒருவாசகம்

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் – கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர். —ஔவையார்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை



# குமரகுருபர சுவாமிகள்

உ

திருச்செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# திருமந்திரம்*

விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

## பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

1 ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் [1]ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே. 1

2 போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனுங்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே. 2

3 ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்
நக்கனென் றேத்திடு நாதனை நாடொறும்
பக்கநின் றார்அறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. 3

* இது திருமந்திரமாலை எனவும், தமிழ் மூவாயிரம் எனவும், வழங்கப்பெறும். பாடபேதம்- [1]ஏழுபார்ச் சென்றவன்.

4 அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் [1]தென்றனைப் போதவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேஇருள் நீங்கிநின் றேனே. 4

5 சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
[2]தவனச் சடைமுடித் தாமரை யானே. 5

6 அவனை ஒழிய அமரரும் இல்லை
அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை
அவனன்றி ஊர்புகு மாறறி யேனே. 6

7 முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னையப் பாஎனில் அப்பனு மாய்உளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. 7

8 தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறி வார்இல்லை
சேயினும் நல்லன் அணியன்நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே. 8

9 பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே. 9

10 தானே இருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களுந்

பா-ம்—[1]தெம்மெய்யைப். [2]தவளச் சடை.

தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே தடவரை தண்கட லாமே. 10

11 அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன் றில்லை
முயலும் முயலில் முடிவுமற் றாங்கே
பெயலும் மழைமுகிற் பேர்நந்தி தானே. 11

12 கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார் எனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களும்
அண்ணல் இவன்என் றறியகி லார்களே. 12

13 மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்ன நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னை மேல்அளந் தாரில்லை
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. 13

14 கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணன்எம் மாயன்
கடந்துநின் றான்அவர்க் கப்புறம் ஈசன்
கடந்துநின் றான்எங்கும் கண்டுநின் றானே. 14

15 ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான்அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே. 15

16 கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாணுதல் பாகனை
யாது குலாவி அமரருந் தேவருங்
கோது குலாவிக் குணம்பயில் வாரே. 16

* இது 1165-ம் பாடலாகவும் வந்துள்ளது.

17 காயம் இரண்டுங் கலந்து கொதிக்கினும்
ஆயங் கத்தூரி யதுமிகும் அவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினும்
ஈசன் உறவுக் கெதிரில்லை தானே. 17

18 அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
அதுபதி யாதரித் தாக்கம தாக்கின்
இதுபதி கொள்ளென்ற எம்பெரு மானே, 18

19 இதுபதி ஏலங் கமழ்பொழில் ஏழும்
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே. 19

20 முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த
அடிகள் உறையும் [1]அறநெறி நாடில்
இடியும் முழக்கமும் ஈசர் உருவங்
கடிமலர்க் குன்ற மலையது தானே. 20

21 வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎங்
கோனைப் புகழுமின் கூடலு மாமே. 21

22 மனத்தில் எழுகின்ற மாயநன் னாடன்
நினைத்த தறிவ னெனில்தான் நினைக்கிலர்
எனக்கிறை அன்பிலன் என்பர் இறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே. 22

23 வல்லவன் வன்னிக் கிறையிடை வாரண
நில்லென நிற்பித்த நீதியுள் ஈசனை

---

பா-ம்— [1]அரனெறி.

இல்லென வேண்டா இறையவர் தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் றானே. 23

24 போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமின் என்றுஞ் சிவனடிக் கேசெல்வ
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. 24

25 பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி [1]மாயா விருத்தமும் ஆமே. 25

26 தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்துநின் றான்பரி பாரக முற்றுங்
கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
உடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. 26

27 சந்தி எனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமில் ஈசன் அருள்நமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படும்அவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே. 27

28 இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானும்
உணங்கிநின் றான்அம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. 28

29 காணநில் லாயடி யேற்குற வாருளர்
நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி அமர்ந்துநின் றானே. 29

பா-ம்— [1] மாய விருகமும்.

30 வானின் றழைக்கும் மழைபோல் இறைவனுந்
தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவார்
ஆனின் றழைக்கு மதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது [1]ஞானங் கருதியே. 30

31 மண்ணகத் தான்ஒக்கும் வானகத் தான்ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத் தான்ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. 31

32 தேவர் பிரான்நம் பிரான்திசை பத்தையும்
மேவு பிரான்விரி நீருல கேழையுந்
தாவு பிரான்தன்மை தானறி வாரில்லை
பாவு பிரான்அருட் பாடலு மாமே. 32

33 பதிபல வாயது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்று மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. 33

34 சாந்து கமழுங் [2]கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன ஆயிர நாமமும்
போந்தும் இருந்தும் புகழுகின் றேனே. 34

35 ஆற்றுகி லாவழி யாகும் இறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடில்
மேற்றிசைக் குங்கிழக் குத்திசை எட்டொடு
மாற்றுவன் அப்படி யாட்டவு மாமே. 35

36 அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை

பா-ம்— [1]ஞாலங் கரியே. [2]கவுரியின்.

எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்திலுல்
அப்பரி சீசன் அருள்பெற லாமே. 36

37 நானும்நின் றேத்துவன் நாடொறும் நந்தியைத்
தானும்நின் ருன்தழல் தாஜெக்கு மேனியன்
வானில்நின் ருர்மதி போல்உடல் உள்ளுவந்
தூனில்நின் ருங்கே உயிர்க்கின்ற வாறே. 37

38 பிதற்ருெழி யேன்பெரி யான்அரி யானைப்
பிதற்ருெழி யேன்பிற வாஉரு வானைப்
பிதற்ருெழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்ருெழி யேன்பெரு[1] மைத்தவன் [2]யானே. 38

39 வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மான்என் றிறைஞ்சியும்
ஆத்தஞ்செய் தீசன் அருள்பெற லாமே. 39

40 குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்
நிறைந்தடை செம்பொனின் நேரொளி ஒக்கும்
[3]மறைஞ்சடஞ் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடஞ் செய்வான் புகுந்துநின் றுனே. 40

41 சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல் லார்க்குக்
கனஞ்செய்த வாணுதல் பாகனும் அங்கே
இனஞ்செய்த மான்போல் இணங்கிநின் றுனே. 41

42 போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னுன்முடி செய்தது வேநல்கு
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே. 42

பா-ம்— [1] மைத்தவந் தானே. [2] நானே. [3] மறஞ்சடஞ்.

43 அரனடி சொல்லி அரற்றி அழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளும்
உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே. 43

44 போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி
போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே. 44

45 விதிவழி அல்லதிவ் வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னாமே. 45

46 அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேஎன்று
[1]வந்திவ் வண்ணன்எம் மனம்புகுந் தானே. 46

47 மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்
நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர்
பனையுள் இருந்த பருந்தது போல
நினையாத வர்க்கில்லை நின்இன்பந் தானே. 47

48 அடியார் பரவும் அமரர் பிரானை
முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்
படியார் அருளும் பரம்பரன் எந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றேனே. 48

49 பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்

பா-ம்— [1] புந்தி.

திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே. 49

50 சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்
ருடுவன் ஆடி அமரர்பி ரான்என்று
நாடுவன் [1]யானின் றறிவது தானே. 50

---

## 2. வேதச் சிறப்பு

51 **வேதத்தை** விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் ருர்களே. 1

52 வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே 2

53 இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய்நின்ற கண்ணனு மாமே. 3

54 திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்ருக வேதாந்தம் ஓதுமே. 4

55 ஆறங்க மாய்வரு மாமறை ஓதியைக்
கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை

---

பா-ம்— [1] நானின்.

வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. 5

56 பாட்டும் ஒலியும் பரக்குங் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியின் மாட்டாதார்
வேட்டு விருப்பார் விரதமில் லாதவர்
ஈட்டும் இடஞ்சென் றிகலலுற் றாரே. 6

---

### 3. ஆகமச் சிறப்பு

57 அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
[1]அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே. 1

58 அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் [2]யானே. 2

59 பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறி வாரென்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் [3]அறஞ்சொன்ன வாறே. 3

60 அண்ணல் அருளால் அருளுந்திவ் யாகமம்
விண்ணில் அமரர் தமக்கும் விளங்கரி
தெண்ணில் எழுபது கோடிநூ றாயிரம்
எண்ணிலும் நீர்மேல் எழுத்தது ஆகுமே. 4

பா-ம்— [1]எஞ்சலில் விஞ்ஞகர் இருபத்தெண்மரும். [2]நானே, [3]அரன்சொன்னவாறே.

61 பரனாய்ப் பராபரங் காட்டி உலகிற்
றரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்
தரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே. 5

62 சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றானே. 6

63 பெற்றநல் ஆகமங் காரணங் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே. 7

64 அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணிலி கோடி தொகுத்திடு மாயினும்
அண்ணல் அறைந்த அறிவறி யாவிடின்
எண்ணிலி கோடியும் நீர்மேல் எழுத்தே. 8

65 மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
ஆரிய முந்தமி ழும்உட னேசொல்லிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. 9

66 அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே. 10

## 4 குரு பாரம்பரியம்

67 நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி [1]வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே. 1

68 நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே [2]மூலனை நாடினோம்
நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட [3]யானிருந் தேனே. 2

69 மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த எழுவரும் என்வழி யாமே. 3

70 நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்
நால்வரும் நானா விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் [4]யான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரா னார்களே. 4

71 மொழிந்தது [5]மூவர்க்கும் நால்வர்க்கும் *ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்புஞ்
செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே. 5

72 எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்தண் நியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. 6

---

பா-ம்— [1]வியாக்கிரன். [2]நாதனை. [3]நானிருந். [4]நான்பெற்ற [5]மூலர்க்கும் நால்வரும்.

*இது 553-ம் பாடலாகவும் வந்துள்ளது.

## 5. திருமூலர் வரலாறு

73 நந்தி இணையடி [1]யான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை அரனடி நாடொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. 1

74 செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே. 2

75 இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. 3

76 சதாசிவந் தத்துவம் முத்தமிழ் வேதம்
[2]மிதாசனி யாதிருந் தேனின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மன நீங்கி
உதாசனி யாதுடனே [3]உணர்ந் தோமால். 4

77 மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. 5

78 நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. 6

---

பா—ம்— [1]நான்தலை. [2]நிதாசனி. [3]உணர்ந்தேமால்.

79 சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. 7

80 இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. 8

81 பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே. 9

82 ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
[1]யானும் இருந்தேன்நற் போதியின் கீழே. 10

83 செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர்நரர் தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. 11

84 சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே. 12

85 [2]**யான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்**
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்

---

பா—ம்— [1]*நானும்.* [2]*நான் பெற்ற.*

ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. 13

86 பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் **மந்திர மாலை**
உறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே. 14

87 அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தான்
எங்குமி காமைவைத் தானுல கேழையுந்
தங்கிமி காமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கிமி காமைவைத் தான்பொருள் தானுமே. 15

88 அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண் டிலேன்என் றச்சுதன் சொல்ல
முடிகண்டேன் என்றயன் பொய்மொழிந் தானே 16

89 பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத்
தற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பத மும்அளித் தான்எங்கள் நந்தியே. 17

90 ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
யாயத்தை யச்சிவன் தன்னை யகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே. 18

91 விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பில் கயிலை வழியில்வந் தேனே. 19

92 நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி அருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி அருளாலே நானிருந் தேனே. 20

93 இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனுஞ் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே. 21

94 பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
முயற்றுவன் ஓங்கொளி வண்ணன்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனு மாமே. 22

---

## 6. அவையடக்கம்

95 ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே. 1

96 பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே. 2

97 மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலு மாமே. 3

98 தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரும்
[1]ஒத்துடன் வேறா யிருந்து துதிசெயும்
பத்திமை யால்இப் பயனறி யாரே. 4

## 7. திருமந்திரத் தொகைச் சிறப்பு

99 மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே. 1

100 வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவா யிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவா யிரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே. 2

## 8. குருமட வரலாறு

101 வந்த மடமேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் [2]மடவரை
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரஞ்
[3]சுந்த்ர ஆகமச் சொல்மொழிந் தானே. 1

102 கலந்தருள் காலாங்கர் தம்பால கோரர்
நலந்தரு மாளிகைத் தேவர்நா தாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே. 2

பா—ம்— [1]இத்துடன். [2]வடவரை. [3]சுந்தரன்.

## 9. [1]மும்மூர்த்திகளின் முறைமை

103 அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் [2]நாலும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற் காமே. 1

104 ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே. 2

105 ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகிற் பெருந்தெய்வ மானது
ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் [3]தூர றிந் தார்களே. 3

106 சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றாகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே. 4

107 பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்
அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை
நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்
வயனம் பெறுவீர்அவ் வானவ ராலே. 5

108 ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநீ
ஞாலத்து நம்மடி நல்கிடென் றனே.° 6

---

பா—ம்— [1]திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை. [2]நாளும். [3]தூதறிந். *இது 990-ம் பாடலாகவும் வந்துள்ளது. °இது 540-ம் பாடலாகவும் வந்துள்ளது.

109 வானவர் என்றும் மனிதர்இவர் என்றுந்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே. 7

110 சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் [1]தவரைப் பிதற்றுகின் றாரே. 8

111 பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப்புற மாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே. 9

112 தானொரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே. 10

**பாயிரம் முற்றிற்று**

---

பா—ம்— [1]தவனைப்.

# முதல் தந்திரம்*

## 1. உபதேசம்

113 விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் [1]தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. 1

114 களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே. 2

115 பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு [2]பாசநில் லாவே. 3

116 வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னுந்
தோயம தாய்எழுஞ் சூரிய னாமே. 4

117 சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. 5

118 மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான

---

பா—ம்— [1]தலைகாவல் மேல்வைத்து. [2]பாசம் நிலாவே.

*இது காரணாகமத்தின் சாரம் என்பர்.

புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தானுள் நயந்தான் அறிந்தே. 6

119 அறிவைம் புலனுட [1]னேநான் றதாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போலக்
குறியறி விப்பான் குருபர னாமே. 7

120 **ஆமேவு பால்நீர் [2]பிரிக்கின்ற அன்னம்போல்**
தாமே தனிமன்றில் தன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே. 8

121 வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிக்ச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றாய் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே. 9

122 சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
**அவயோகஞ் சாரா தவன்பதி போக**
**நவயோக நந்தி நமக்களித் தானே.** 10

123 அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே. 11

124 வெளியில் [3]வெளிபோய் விரவிய வாறும்
அளியில் [4]அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் [5]ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
தெளியும் அவரே சிவ[6]சித்தர் தாமே. 12

---

*பா-ம்— [1] னேயான தாகி. [2] பிறிக்கின்ற. [3] வெளியாய். [4] அளியாய். [5] ஒளியாய். [6] சித்த ராமே.*

125 சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே. 13

126 முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரி சாக அமர்ந்திருந் தாரே. 14

127 இருந்தார் சிவமாகி எங்குந் தாமாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே. 15

128 சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதுஞ் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர்கண் டாரச் சுருதிக்கண் தூக்கமே. 16

129 தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்உள்ளே
தூங்கிக் கண்டார்நிலை சொல்வதெவ் வாறே. 17

130 எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வன் ஆதி யரன்தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம் 18

131 மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே. 19

132 பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றார்அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே. 20

133 பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே. 21

134 புரைஅற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரைஅற்ற [1]சிந்தைநல் ஆரியன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே. 22

135 சத்த முதல்ஐந்துந் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரும்
அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே. 23

136 அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே. 24

137 அடங்குபே ரண்டத் தணுஅண்டஞ் சென்றங்
கிடங்கொண்ட தில்லை இதுவன்றி வேறுண்டோ
கடந்தொறும் நின்ற [2]உயிர்கரை காணில்
இடம்பெற நின்றான் திருவடி தானே. 25

138 திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கில்

பா-ம் — [1] சித்தையுள் சிவனவன் செப்பும், [2] உயிர்கரி காணும்.

திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே. 26

139 தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. 27

140 தானே புலன்ஐந்துந் தன்வச மாயிடும்
தானே புலன்ஐந்துந் தன்வசம் போயிடும்
தானே புலன்ஐந்துந் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்தே. 28

141 சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையால்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. 29

142 போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினர்
நாதன் நடத்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந்தார் விண்ணே. 30

---

## 2. யாக்கை நிலையாமை

143 மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே. 1

144 பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்

கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே. 2

145 ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. 3

146 காலும் இரண்டு முகட்டலக் கொன்றுள
பாலுள் பருங்கழி முப்பத் திரண்டுள
மேலுள கூரை பிரியும் பிரிந்தால்முன்
போலுயிர் மீளப் புகஅறி யாதே. 4

147 சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற
ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
[1]காக்கைக் குப்பலி காட்டிய வாறே. 5

148 அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. 6

149 மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான்
மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே. 7

150 வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி
நேசந் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
ஆசந்தி மேல்வைத் தமைய அழுதிட்டுப்
பாசந்தீச் சுட்டுப் பலியட்டி னார்களே. 8

---

பாடம் — [1]காக்கைப் பலியிட்டுக் கைகொட்டு மாறே.

151 கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுண்ணும் ஐவரும் போயினர்
மையிட்ட கண்ணளும் மாடும் இருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. 9

152 பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைத்தன
துன்புறு காலந் துரிசுவர மேன்மேல்
அன்புடை யார்கள் அழுதகன் றார்களே. 10

153 நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. 11

154 முப்பதும் முப்பதும் முப்பத் தறுவருஞ்
செப்ப மதிளுடைக் [1]கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் [2]கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் [3]தார்களே. 12

155 மதுவூர் குழலியும் மாடும் மனையும்
இதுவூர் ஒழிய [4]இதணம தேறிப்
பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி
மதுவூர வாங்கியே வைத்தகன் றார்களே. 13

156 வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்
அச்சக லாதென நாடும் அரும்பொருள்
பிச்சது வாய்ப்பின் தொடர்வுறு மற்றவர்
எச்சக லாநின் றிளைக்கின்ற வாறே. 14

157 ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்
ஊர்த்துறைக் காலே ஒழிவர் ஒழிந்தபின்

பா-ம்— [1]கோட்டையுள். [2]கோட்டை. [3]தாரே. [4]விமானம்.

வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. 15

158 வளத்திடை முற்றத்தோர் மாநிலம் முற்றுங்
குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தால்அவை ஓடென்று வைப்பர்
**உடலுடைந் தால்இறைப் போதும் வையாரே.** 16

159 ஐந்து தலைப்பறி யாறு சடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலும் ஒன்பது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே. 17

160 அத்திப் பழமும் அறைக்கீரை நல்வித்துங்
[1]கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
அத்திப் [2]பழத்தை அறைக்கீரை வித்துண்ணக்
[3]கத்தி எடுத்தவர் காடுபுக் காரே. 18

161 மேலும் முகடில்லை கீழும் வடிம்பில்லை
காலும் இரண்டு முகட்டலக் கொன்றுண்டு
ஓலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித்[4] தளிகையே.

162 கூடங் கிடந்தது கோலங்கள் இங்கில்லை
ஆடும் இலையமும் அற்ற தறுதலும்
பாடுகின் றூர்சிலர் பண்ணில் அழுதிட்டுத்
தேடிய தீயினில் தீயவைத் தார்களே. 20

163 முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்
இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்

---

பா-ம்— [1]கொத்திக் குடறிக் கூட்டில் அடைத்தது. [2]பழத்தின் அமுதம் அறிந்தபின். [3]கத்திக்கொண் டைவரும் காடுறைந்தாரே; [4]தளியே.

பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்
கெட்ட தெழுபதிற் [1]கேடறி யீரே. 21

164 இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டான்
முடிஞ்ச தறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சிரு ளாவ தறியா உலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே. 22

165 மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த
உடலும் உயிரும் உருவந் தொழாமல்
இடர்படர்ந் தேழா நரகிற் கிடப்பர்
குடர்பட வெந்தமர் கூப்பிடு மாறே. 23

166 குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்
டிடையுமக் காலம் இருந்து நடுவே
புடையு மனிதனார் போகும்அப் போதே
அடையும் இடம்வலம் ஆருயி ராமே. 24

167 காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளி பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே. 25

---

## 3. செல்வம் நிலையாமை

168 அருளும் அரசனும் ஆனையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந்
தெருளும் உயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினையவன் மாதவ மன்றே. 1

169 இயக்குறு திங்கள் இருட்பிழம் போக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா

பா-ம்— [1]கேட்டறி.

மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப்[1] பெருஞ்செல்வமாமே

170 தன்னது சாயை தனக்குத வாதுகண்
டென்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள்
உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொ ளீரே. 3

171 ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்
ஓட்டித் துரந்திட் டதுவலி யார்கொளக் [திடும்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே. 4

172 தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே. 5

173 மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம்போல்
அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடுபே றாகச்
சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறி யாரே. 6

174 வாழ்வும் மனைவியும் மக்கள் உடன்பிறந்
தாரு மளவே தெமக்கென்பர் ஒண்பொருள்
மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்
கூவுந் துணையொன்று கூடலு மாமே. 7

175 வேட்கை மிகுத்தது மெய்கொள்வார் இங்கிலை
பூட்டுந் தறியொன்று போம்வழி ஒன்பது
நாட்டிய தாய்தமர் வந்து வணங்கிப்பின்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. 8

---

பா-ம்— [1] செலவாமே.

176 உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது
அடும்பரி சொன்றில்லை அண்ணலை எண்ணும்
விடும்பரி சாய்நின்ற மெய்ந்நமன் தூதர்
சுடும்பரி சத்தையுஞ் சூழகி லாரே. 9

---

## 4. இளமை நிலையாமை

177 கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே. 1

178 ஆண்டு பலவுங் கழிந்தன அப்பனைப்
பூண்டுகொண் டாரும் புகுந்தறி வார்இல்லை
நீண்டன காலங்கள் நீண்டு கொடுக்கினுந்
தூண்டு விளக்கின் சுடரறி யாரே. 2

179 தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை
ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே. 3

180 விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும்ஒத் தேனே. 4

181 பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலங் கடந்தண்டம் ஊடறுத் தானடி
மேலுங் கிடந்து விரும்புவன் [1]யானே. 5

---

பா—ம்—[1] தானே.

182 காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்
மாலை படுவதும் வாணாள் கழிவதுஞ்
[1]சாலும்அவ் வீசன் சலவிய னாகிலும்
ஏல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே. 6

183 பருவூசி ஐந்துமோர் பையினுள் வாழும்
பருவூசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருவூசி ஐந்தும் [2]பணித்தலைப் பட்டாற்
[3]பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. 7

184 கண்ணது காய்கதி ரோனும் உலகினை
உண்ணின் றளக்கின்ற தொன்றும் அறிகிலார்
விண்ணுறு வாரையும் வினையுறு வாரையும்
எண்ணுறும் முப்பதில் ஈர்ந்தொழிந் தாரே. 8

185 ஒன்றிய ஈரெண் கலையும் உடனுற
நின்றது கண்டு நினைக்கிலர் [4]நீசர்கள்
கன்றிய காலன் கருக்குழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. 9

186 எய்திய நாளில் இளமை கழியாமை
எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்
எய்திய நாளில் எறிவ தறியாமல்
எய்திய நாளில் [5]இருந்துகண் டேனே. 10

---

## 5. உயிர் நிலையாமை

187 தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
அழைக்கின்ற போதறி யாரவர் தாமே.

பா—ம்— [1]சாலவு மீசன் சருவிய. [2]பணித்தலைப்; பணித்தலைப். [3]பருவூசி பைந்தும். [4]நீதர்கள். [5]இரந்துகண்.
*இது 863—ம்பாடலாகவும் வந்துள்ளது.

188 ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவர்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட் டாரே. 2

189 மத்தளி ஒன்றுள தாளம்இ ரண்டுள
அத்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள்ள
அத்துள்ளே வாழும் அரசனும் அங்குளன்
மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. 3

190 வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்
தாங்கவல் லாருயிர் தாமறி யாரே. 4

191 சென்றுணர் வான்திசை பத்துந் திவாகரன்
அன்றுணர் வால்அளக் கின்ற தறிகிலர்
நின்றுண ரார்இந் நிலத்தின் மனிதர்கள்
பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே. 5

192 மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை
பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரிலை
கூறும் கருமயிர் வெண்மயி ராவது
ஈறும் பிறப்புமொ ராண்டெனும் நீரே. 6

193 துடுப்பிடு பானைக்கும் ஒன்றே அரிசி
அடுப்பிடு மூன்றிற்கும் அஞ்செரி கொள்ளி
அடுத்தெரி யாமற் கொடுமின் அரிசி
விடுத்தன நாள்களும் மேற்சென் றனவே. 7

194 இன்புறு வண்டிங் கினமலர் மேற்போய்
உண்பது வாச மதுபோல் உயிர்நிலை
இன்புற நாடி நினைக்கிலு மூன்றொளி
கண்புற நின்ற கருத்துள்நில் லானே.

195 ஆம்விதி நாடி அறஞ்செய்மின் அந்நிலம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும தென்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமைவல் லார்க்கே. 9

196 அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக்கொ டுண்மின் தலைப்பட்ட போதே. 10

## 6. கொல்லாமை

197 பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே. 1

198 கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் [1]வலிக்கயிற் றாற்கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே. 2

## 7. புலால் மறுத்தல்

199 பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. 1

200 கொலையே களவுகட் காமம் பொய்கூறல்
மலைவான பாதக மாம்அவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையாம் இவைஞான னந்தத் திருத்தலே. 2

பா-ம்— [1]வரிக்கயிற்.

## 8. பிறன்மனை நயவாமை

201 ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. 1

202 திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
அருத்தமென் றெண்ணி அறையிற் புதைத்துப்
பொருத்தமி லாத புளிமாங் கொம்பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே. 2

203 பொருள்கொண்ட கண்டனும் போதகை யானும்
இருள்கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரும்
மருள்கொண்டு மாதர் மயலுறு வார்கள்
மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே. 3

---

## 9. மகளிர் இழிவு

204 இலைநல வாயினும் எட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
[1]விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே. 1

205 மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழும் [2]இன்பம்
நனவது போலவும் நாடவொண் ணாதே. 2

206 இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்
புயலுறப் புல்லிப் புணர்ந்தவர் எய்தும்
மயலுறும் வானவர் சார்விது என்பார்
அயலுறப் பேசி அகன்றொழிந் தாரே. 3

---

பா—ம்.—[1] விலகுறி. [2] அன்பை.

207 வையகத் தேமட வாரொடுங் கூடியென்
மெய்யகத் தோருளம் வைத்த விதியது
கையகத் தேகரும் பாலையின் சாறுகொள்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே. 4

208 கோழை ஒழுக்கங் குளமூடு பாசியில்
ஆழ நடுவார் அளப்புறு வார்களைத்
தாழத் துடக்கித் தடுக்ககில் லாவிடில்
பூழை நுழைந்தவர் போகின்ற வாறே. 5

---

## 10. நல்குரவு

209 புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே. 1

210 பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்
றக்குழி தூர்க்கும் அரும்பண்டந் தேடுவீர்
எக்குழி தூர்த்தும் இறைவனை ஏத்துமின்
அக்குழி தூரும் அழுக்கற்ற போதே. 2

211 கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்
அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது
அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்
அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே. 3

212 தொடர்ந்தெழு சுற்றம் வினையினுந் தீய
கடந்ததோர் ஆவி கழிவதன் முன்னே
உடந்தொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே. 4

213 அறுத்தன ஆறினும் ஆனின மேவி
அறுத்தனர் ஐவரும் எண்ணிலி துன்பம்

ஒறுத்தன வல்வினை ஒன்றல்ல வாழ்வை
வெறுத்தனன் ஈசனை வேண்டிநின் றானே. 5

## 11. அக்கினி காரியம்

214 வசையில் விழுப்பொருள் வானும் நிலனுந்
திசையுந் திசைபெறு தேவர் குழாமும்
விசையம் பெருகிய வேத முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே. 1

215 ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்
போகதி நாடிப் புறங்கொடுத் துண்ணுவர்
தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி
தாமறி வாலே தலைப்பட்ட வாறே. 2

216 அணைதுணை அந்தணர் அங்கியுள் அங்கி
அணைதுணை வைத்ததின் உட்பொரு ளான
இணைதுணை யாமத் தியங்கும் பொழுது
துணையணை யாயதோர் தூய்நெறி யாமே. 3

217 போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு
மாதிரண்டாகி மகிழ்ந்துட னேநிற்குந்
தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்
வேதிரண் டாகி வெறிக்கின்ற வாறே. 4

218 நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று
மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
மைநின் றவிழ்தரு [1]மத்தின மாம்என்றுஞ்
செய்நின்ற செல்வம் தீயது வாமே. 5

219 பாழி அகலும் எரியுந் திரிபோலிட்
டூழி அகலும் உறுவினை நோய்பல
வாழிசெய் தங்கி உதிக்க அவைவிழும்
வீழிசெய் தங்கி வினைசுடு மாமே. 6

பா-ம்— [1] மந்திரமாம் ஒன்று.

220 பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த
வருஞ்செல்வம் தந்த தலைவனை நாடும்
வருஞ்செல்வத் தின்பம் வரவிருந் தெண்ணி
அருஞ்செல்வத் தாகுதி வேட்கநின் றாரே. 7

221 ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை
ஒண்சுட ராகிஎன் னுள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோன்உல கேழுங் கடந்தஅத்
தண்சுட ரோமத் தலைவனு மாமே. 8

222 ஓமத்துள் அங்கியின் உள்ளுளன் எம்இறை
ஈமத்துள் அங்கி இரதங்கொள் வானுளன்
வேமத்துள் அங்கி விளைவு வினைக்கடல்
கோமத்துள் அங்கி குரைகடல் தானே. 9

223 அங்கி நிறுத்தும் அருந்தவர் ஆரணத்
தங்கி இருக்கும் வகையருள் செய்தவர்
எங்கும் நிறுத்தி இளைப்பப் பெரும்பதி
பொங்கி நிறுத்தும் புகழது வாமே. 10

---

## 12. அந்தண ரொழுக்கம்

224 அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றாங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே. 1

225 வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்
போதாந்த மான பிரணவத் துள்புக்கு
நாதாந்த வேதாந்த போதாந்த நாதனை
[1] ஈதாந்தம் என்றுகண் டின்புறு வோர்களே. 2

226 காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவப்பர் மந்திரமாங் குன்னி

---

பா—ம்— [1] *ஈதாம்; மீதாந்தம்.*

நேயத் தேரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துள் தோயா மறையோர்கள் தாமே. 3

227 பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான கிரியை யிருந்து
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே. 4

228 சத்திய முந்தவம் தான்அவன் ஆதலும்
எய்த்தகும் இந்தியம் ஈட்டியே வாட்டலும்
ஒத்த உயிர்கள் உண்டா யுணர்வுற்றுப்
பெத்தம் அறுத்தலு மாகும் **பிரமமே.** 5

229 வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை ஒழிந்திலர்
**வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்**
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே. 6

230 நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ
நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காணும் நுவலிலே. 7

231 சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரன்உண்மை [1]யின்றிப்
பித்தேறும் மூடர் பிராமணர் தாம்அன்றே. 8

232 திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்
குருநெறி யாலே குருபதஞ் சேர்ந்து
கரும நியமாதி கைவிட்டுக் காணுந்
துரிய சமாதியாந் தூய்மறை யோர்க்கே. 9

பா-ம்— [1] *யின்றியுண்.*

233 மறையோ ரவரே மறையவ ராளுல்
மறையோர்தம் வேதாந்த வாய்மையில் தூய்மை
குறையோர்தன் மற்றுள்ள கோலா கலமென்
றறிவோர் மறைதெரிந் தந்தண ராமே. 10

234 அந்தண்மை பூண்ட [1]அருமறை அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேருஞ் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றுகும்
அந்தியுஞ் சந்தியும் ஆகுதி பண்ணுமே. 11

235 வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர்
நாதாந்த போதம் நணுகிய [2]போக்கது
போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்கதால்
நாதாந்த முத்தியுஞ் சித்தியும் நண்ணுமே. 12

236 ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நன்றும் இருந்தும் நலம்பல பேசினும்
வென்று விளங்கும் விகிர்தனை நாடுவர்
சென்று வணங்குந் திருவுடை யோரே. 13

237 தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட
[3]யானே விடப்படு மேதொன்றை நாடாது
பூமேவு நான்முகன் புண்ணிய போகனுய்
ஓமேவும் [4]ஓரா குதிஅவி உண்ணவே. 14

## 13. [5]அரசாட்சி முறை

238 கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் [6]நணுகநில் லானே. 1

பா—ம்— அறவேள் ஆகமத்துச். [2]போகத்துப். [3]நானே. [4]ஓமா, [5]இராச தோடம். *இது 2536-ம் பாடலாகவும் வந்துள்ளது. [6]நணுகஇல்லானே.

239 நாடோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாடோறும் நாடி அவன்நெறி நாடானேல்
நாடோறும் நாடு கெடுமூட நண்ணுமால்
நாடோறுஞ் செல்வம் நரபதி குன்றுமே. 2

240 **வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்**
வேட நெறிநிற்போர் வேடம்மெய் வேடமே
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது [1]வாமே. 3

241 மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும்
பீடொன் றிலனாகும் ஆதலாற் பேர்த்துணர்ந்
தாடம் பரநூற் சிகையறுத் தால்நன்றே. 4

242 ஞானமி லாதார் சடைசிகை நூல்நண்ணி
ஞானிகள் போல நடிக்கின் றவர்தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானமுண் டாக்குதல் நலமாகும் [2]நாட்டிற்கே. 5

243 ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையுங்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே. 6

244 திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின்
மறந்தும் அறநெறி யேஆற்றல் வேண்டும்
சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையும்
அறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே. 7

245 வேந்தன் உலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்கள் அவ்வழி யாநிற்பர்

பா-ம் — [1]வாகுமே. [2]நாட்டுக்கே.

பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொள்
பாய்ந்த புலியன்ன பாவகத் தானே. [எப் 8

246 கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டுமேலேற்றிப்
பால்கொண்டு சோமன் முகம்பற்றி உண்ணுதோர்
மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே.

247 தத்தஞ் சமயத் தகுதியில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண் டமுஞ்செயும் [1]அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. 10

## 14. வானச் சிறப்பு

248 அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றுங்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறுங் காஞ்சிரை ஆங்கது வாமே. 1

249 வரையிடை நின்றிழி வான்நீர் அருவி
உரையில்லை உள்ளத் தகத்துநின் றூறு
நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை எந்தை கழுமணி யாறே. 2

## 15. தானச் சிறப்பு

250 ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின்பழம்பொருள் போற்றன்மின்
வேட்கையுடையீர்விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் காலம் அறிமினே. 3

பா-ம்— [1]மும்மையில்; எம்மையில்; மெய்ம்மையில்.

## 16. அறஞ்செய்வான் திறம்

251 தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்
தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்
தாமறி வார்சில தத்துவ ராவர்கள்
தாமறி வார்க்குத் தமர்பர னாமே. 1

252 யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு [1]வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே. 2

253 அற்றுநின் றாருண்ணும் ஊணே அறமென்னுங்
கற்றன போதங் கமழ்பவர் மானிடர்
உற்றுநின் றாங்கொரு கூவற் குளத்தினிற்
பற்றிவந் துண்ணும் பயன்அறி யாரே. 3

254 அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர்
தழுக்கிய நாளில் தருமமுஞ் செய்யீர்
விழித்திருந் தென்செய்வீர் வெம்மை பரந்து
விழிக்கவன் றென்செய்வீர் ஏழைநெஞ் சீரே. 4

255 தன்னை அறியாது [2]தானல என்றிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்
தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே. 5

256 துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை
இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை
மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்
அறந்தான் அறியும் அளவறி வாரே. 6

257 தான்தவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்கள்

பா-ம்— [1]வாயுறுக. [2]தானல்லார்; தான் நல்லர்.

ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான்தெய்வம் என்று நமன்வரு வானே. 7

258 திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு
கிளைக்குந் தனக்கும்அக் கேடில் புகழோன்
விளைக்குந் தவம்அறம் மேற்றுணை யாமே. 8

259 பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்றுங் களால்ஒன்றும் ஈந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே. 9

---

## 17. அறஞ்செயான் திறம்

260 எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன
ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயன்அறி யாரே. 1

261 ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம்அறி யாரே. 2

262 அறம்அறி யார்அண்ணல் பாதம் நினையுந்
திறம்அறி யார்சிவ லோக நகர்க்குப்
புறம்அறி யார்பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம்அறி வார்பகை மன்னிநின் றாரே. 3

263 இருமலுஞ் சோகையும் ஈளையும் வெப்புந்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்

உருமிடி நாக முரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் [1]தாழகி லாவே. 4

264 பரவப் படுவான் பரமனை ஏத்தார்
இரவலர்க் கீதலை யாயினும் ஈயார்
[2]கரகத்தால் நீரட்டிக் காவை வளர்க்கார்
நரகத்தில் நிற்றிரோ [3]நாள்எஞ்சி னீரே. 5

265 வழிநடப் பாரின்றி வானோர் உலகங்
கழிநடப் பார்நடந் தார்கருப் பாரும்
[4]மழிநடக் கும்வினை மாசற [5]வோட்டிட
வழிநடக் கும்மள வீழ்ந்தொழிந் தாரே. 6

266 **கனிந்தவர் ஈசன் கழலடி காண்பர்**
துணிந்தவர் ஈசன் துறக்கம தாள்வர்
மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி
மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே. 7

267 இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம்அறி யாரே. 8

268 கெடுவது மாவதுங் கேடில் புகழோன்
நடுவல்ல செய்தின்ப நாடவும் ஒட்டான்
இடுவதும் ஈவதும் எண்ணுமின் இன்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே. 9

269 செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்
இல்லங் கருதி இறைவனை ஏத்துமின்
**வில்லி இலக்கெய்த விற்குறி யாமே.** 10

பா-ம்— [1]சாரகிலாவே. [2]கரகத்தே நீராட்டிக். [3]நல்நெஞ்சினீரே [4]வழி. [5]வோட்டிட், டொழிநடப் பார்வினை ஓங்கி நின்றாரே.

## 18. அன்புடைமை

270 [1]அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. 1

271 பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே. 2

272 என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போல் மணியினை எய்தவொண் ணாதே. 3

273 ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை
ஈரம் உடையவர் காண்பார் இணையடி
பாரம் உடையவர் காண்பார் பவந்தன்னைக்
கோர [2]நெறிகொடு கொங்குபுக் காரே. 4

274 என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. 5

275 தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்குந்
தேனொரு பால்திகழ் கொன்றை அணிசிவன்
தானொரு வண்ணம்என் அன்பில்நின் றானே. 6

---

பா—ம்—[1]அன்பும் சிவமும்; அன்பு சிவமும். [2]நெருக்கொடு கோங்கு.

276 முன்படைத் தின்பம் படைத்த முதலிடை
அன்படைத் தெம்பெரு மானை அறிகிலார்
வன்படைத் திந்த அகலிடம் வாழ்வினில்
அன்படைத் தான்தன் அகலிடத் தானே. 7

277 கருத்துறு செம்பொன்செய் [1]காய்கதிர்ச் சோதி
இருத்தியும் வைத்தும் இறைவஎன் றேத்தியும்
அருத்தியுள் ஈசனை யாரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே. 8

278 நித்தலுந் துஞ்சும் பிறப்பையுஞ் செய்தவன்
வைத்த பரிசறிந் தேயு மனிதர்கள்
[2]இச்சையு ளேவைப்பர் எந்தை பிரான்என்று
நச்சியே அண்ணலை நாடுகி லாரே. 9

279 அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினுள் ளாகி [3]அமரும் அரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே [4]அணைதுணை யாமே. 10

## 19. அன்பு செய்வாரை அறிவன் சிவன்

280 இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்தருள் செய்திடும் உத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே. 1

281 இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில்பல என்னினும்
அன்பிற் கலவிசெய் தாதிப் பிரான்வைத்த
[5]முன்பிப் பிறவி முடிவது தானே. 2

பா-ம்— [1]காயத்திற் சோதி. [2]இச்சையுள் வைப்பன். [3]வருமரும் பேரருள். [4]அனைத்துணை. [5]முன்பப் பிறவி.

282 அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி
இன்புறு கண்ணியொ டேற்க இசைந்தன
துன்புறு கண்ணியைந் தாடுந் துடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமின் நீரே. 3

283 புணர்ச்சியுள் ஆயிழை மேல்அன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லாருக்
குணர்ச்சியில் லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அதுவிது வாமே. 4

284 உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச்
சித்தர்கள் என்றுந் தெரிந்தறி வார்இல்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுத்தவர் முன்புநின் றானே. 5

285 கண்டேன் கமழ்தரு கொன்றையி னான்அடி
கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை
கண்டேன் கமல மலர்உறை வானடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே. 6

286 நம்பனை நானு விதப்பொரு ளாகுமென்
றும்பரில் வானவர் ஓதுந் தலைவனை
இன்பனை இன்பத் திடைநின் றிரதிக்கும்
அன்பனை யாரும் அறியகி லாரே. 7

287 முன்பு பிறப்பும் இறப்பும் அறியாதார்
**அன்பில் இறைவனை யாம்அறி வோம்என்பர்**
இன்பப் பிறப்பும் இறப்பும் இலான்நந்தி
அன்பி லவனை அறியகி லாரே. 8

288 ஈசன் அறியும் இராப்பக லுந்தன்னைப்
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத்
தேசுற் றறிந்து செயலற் றிருந்திடில்
ஈசன்வந் தெம்மிடை ஈட்டிநின் றானே. 9

289 விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்
தொட்டுத் தொடர்வன் தொலையாப் பெருமையை
எட்டுமென் றுருயி ராய்நின்ற ஈசனை
மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. 10

---

## 20. கல்வி

290 குறிப்பறிந் தேனுடல் உயிரது கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்
கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே. 1

291 கற்றறி வாளர் கருதிய காலத்துக்
**கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு**
கற்றறி வாளர் கருதி உரைசெய்யுங்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே. 2

292 நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றொன் றிலாத மணிவிளக் காமே. 3

293 கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
**பல்லி யுடையார் பாம்பரிந் துண்கின்றார்**
எல்லியுங் காலையும் ஏத்தும் இறைவனை
வல்லியுள் [1]வாதித்த காயமு மாமே. 4

294 துணையது வாய்வருந் தூயநற் சோதி
துணையது வாய்வருந் தூயநற் சொல்லாந்
துணையது வாய்வருந் தூயநற் கந்தந்
**துணையது வாய்வருந் தூயநற் கல்வியே.** 5

---

பா—ம்— [1]*வாசித்த; ஆதித்த.*

295 நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினாற் பண்பின் பயன்கெடுங்
கோலொன்று பற்றினாற் கூடா பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின் றார்களே. 6

296 ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படும்
தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடும்
ஏய்ந்த இளமதி எட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே. 7

297 வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்
கழித்துணை யாங்கற் றிலாதவர் சிந்தை
ஒழித்துணை யாம்உம் பராய்உல கேழும்
வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே. 8

298 பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லா முதல்வன் அருள்பெறில்
கிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே. 9

299 கடலுடை யான்மலை யானைந்து பூதத்
துடலுடை யான்பல ஊழிதொ றூழி
அடல்விடை யேறும் அமரர்கள் நாதன்
இடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. 10

---

## 21. கேள்வி கேட்டமைதல்

300 அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும்
புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம் ஈசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. 1

301 தேவர் பிரான்தனைத் திவ்விய மூர்த்தியை
யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்
ஓதுமின் கேள்மின் உணர்மின் உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கி நின்றாரே. 2

302 மயன்பணி கேட்பது மாநந்தி வேண்டின்
அயன்பணி கேட்பது அரன்பணி யாலே
சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர்
பயன்பணி கேட்பது பற்றது வாமே. 3

303 பெருமான் இவனென்று பேசி யிருக்குந்
திருமானிடர் பின்னைத் தேவரு மாவர்
வருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யும்
அருமா தவத்தெங்கள் ஆதிப் பிரானே. 4

304 ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்
பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தி
நேசமு மாகும் நிகழொளி யாய்நின்று
வாச மலர்க்கந்த மன்னிநின் றானே. 5

305 விழுப்பமுங் கேள்வியும் மெய்நின்ற ஞானத்
தொழுக்கமுஞ் சிந்தை உணர்கின்ற போது
வழுக்கி விடாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம தாமே. 6

306 சிறியார் மணற்சோற்றில் தேக்கிடு மாபோல்
செறிவால் அனுபோகஞ் சித்திக்கும் என்னில்
குறியாத தொன்றைக் குறியாதார் தம்மை
அறியா திருந்தார் அவராவர் அன்றே. 7

307 உறுதுணை யாவ துயிரும் உடம்பும்
உறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே. 8

308 புகழுநின் ருர்க்கும் புராணன்எம் ஈசன்
இகழுநின் ருர்க்கும் இடும்பைக் கிடமா
மகிழுநின் ருதியை ஓதி உணராக்
கழியநின் ருர்க்கொரு கற்பசு வாமே. 9

309 வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி
ஒத்துணர்ந் தான்உரு ஒன்றொடொன் றெவ்வாது
அச்சுழன் ருணி கலங்கினும் ஆதியை
நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. 10

---

## 22. கல்லாமை

310 கல்லா தவருங் கருத்தறி காட்சியை
வல்லா ரெனில்அருட் கண்ணான் மதித்துளோர்
கல்லாதார் உண்மைபற் றுநிற்பர் கற்றோருங்
**கல்லாதார் இன்பங் காணுகி லாரே.** 1

311 வல்லார்கள் என்றும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லா தவர்கள் அறிவு பலஎன்பார்
**எல்லா இடத்தும் உளன்எங்கள் தம்இறை**
**கல்லா தவர்கள் கலப்பறி யாரே.** 2

312 நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்
**எல்லா வுயிர்க்கும் இறைவனே யாயினுங்**
**கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே** 3

313 கில்லேன் வினைதுய ராக்கு மயலானேன்
கல்லேன் அரனெறி அறியாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுட்
கல்லேன் கழியநின் றடவல் லேனே. 4

314 நில்லாது சீவன் நிலையன் றெனவெண்ணி
வல்லார் அறத்துந் தவத்துளும் ஆயினார்
கல்லா மனித்தர் கயவர் உலகினில்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. 5

315 விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி
கண்ணினின் உள்ளே கலந்தங் கிருந்தது
மண்ணினின் உள்ளே மதித்து மதித்துநின்
றெண்ணி எழுதி இளைத்துவிட் டாரே. 6

316 கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடா காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே. 7

317 கல்லாத மூடரைக் காணவும் ஆகாது
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன்அன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே. 8

318 கற்றுஞ் சிவஞானம் இல்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கள்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பில் நிற்போர் கணக்கறிந் தார்களே. 9

319 ஆதிப் பிரான்அம ரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
ஓதி உணரவல் லோம்என்பர் உள்நின்ற
சோதி நடத்துந் தொடர்வறி யாரே. 10

---

## 23. நடுவு நிலைமை

320 நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி [1]யானும்நின் றேனே. 1

321 நடுவுநின் றன்நல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் றன்நல்ல நான்மறை யோதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் றார்நல்ல நம்பனு மாமே. 2

322 நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு [2]யானும்நின் றேனே. 3

323 தோன்றிய எல்லாந் துடைப்பன் அவனன்றி
ஏன்றுநின் றாரென்றும் ஈசன் இணையடி
மூன்றுநின் றார்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே. 4

---

## 24. கள்ளுண்ணாமை

324 கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறுந் தேரா
கழுநீர் விடாய்த்துத்தங் காயஞ் சுருக்கும்
முழுநீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே. 1

325 சித்தம் உருக்கிச் சிவமாஞ் சமாதியில்
ஒத்த சிவானந்தத் தோவாத தேறலைச்
சுத்த மதுவுண்ணச் சுவானந்தம் விட்டிடா
நித்தல் இருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. 2

---

பா-ம்— [1] நானும்நின். [2] நானும்.

326 காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி
யோமய் ஆனந்தத் தேறல் உணர்வுண்டே. 3

327 வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்
காமத்தோர் காமக்கள் ளுண்டே கலங்குவர்
ஓமத்தோர் உள்ளொளிக் குள்ளே உணர்வர்கள்
நாமத்தோர் அன்றே நணுகுவர் தாமே. 4

328 உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறார்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே. 5

329 மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்
மயக்குறு மாமாயை [1]மாயையின் வீடு
மயக்கில் தெளியின் மயக்குறும் அன்றே. 6

330 மயங்குந் தியங்குங் கள்வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்தார்
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே. 7

331 இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகார்
இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து
இராப்பகல் மாயை இரண்டிடத் தேனே.* 8

---

பா—ம்— [1]மாயையின் மாமாயை. *இது 1856—ம் பாடலாகவும் வந்துள்ளது.

332 சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானந் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞானஆ னந்தத்திற் சார்தலே. 9

333 சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்
சத்தி அருள்தரிற் சத்தன் அருளுண்டாஞ்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே. 10

334 தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாகிப்
பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போகியே
மெய்த்த சகமுண்டு விட்டுப் [1]பரானந்தச்
சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே. 11

335 யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தப்
போத அமுதைப் பொசித்தவர் எண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்
றாகும் மதத்தால் அறிவழிந் தாரே. 12

336 உண்ணீர் அமுத முறுமூ றலைத்திறந்
தெண்ணீர் குரவன் இணையடித் தாமரை
நண்ணீர் சமாதியி னாடிநீ ரானலங்
கண்ணாற் றொருடே சென்று கால்வழி காணுமே. *13

முதல் தந்திரம் முற்றிற்று.

---

பா-ம்—[1]பேரானந்தச். * இது 882-ம் பாடலாகவும் வந்துள்ளது.

# இரண்டாந் தந்திரம்[1]

## 1. அகத்தியம்

337 நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே. 1

338 அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்
அங்கி உதயஞ்செய் மேல்பா லவனொடு
மங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி
எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே. 2

## 2. பதிவலியில் வீரட்டம் எட்டு

339 கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத் துயிர்களை எல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றானே. 1

340 கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே. 2

341 எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்குஞ் சினத்துள் அயன்தலை முன்னற
அங்(கு)அச் சுதனை உதிரங்கொண் டானே. 3

342 எங்குங் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை யோதிபாற்

பா—ம்—[1] யோகிபாற். *இது காமிகாகமத்தின் சாரம் என்பர்.

பொங்குஞ் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித் தாழிசெய் தானே. 4

343 அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
**முப்புர மாவது மும்மல காரியம்**
அப்புரம் எய்தமை யாரறி வாரே. 5

344 முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்
அத்தி யுரியர னுவை தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரும்
அத்தீயின் உள்ளெழுந் தன்று கொலையே. 6

345 மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே. 7

346 இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்தி இலிங்க வழியது போக்கித்
திருந்திய காமன் செயலழித் தங்கண்
அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே. 8

---

### 3. இலிங்க புராணம்

347 அடிசேர்வன் என்னஎம் ஆதியை நோக்கி
முடிசேர் மலைமக னார்மக ளாகித்
திடமார் தவஞ்செய்து தேவர் அறியப்
படியார அர்ச்சித்துப் பத்திசெய் தாளே. 1

348 திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை
அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா
புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே. 2

349 ஆழி வலங்கொண் டயன்மால் இருவரும்
ஊழி வலஞ்செய்ய ஒண்சுட ராதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
[1]வாழி பிரமற்கும் வாள்கொடுத் தானே. 3

350 தாங்கி இருபது தோளுந் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்
நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே. 4

351 உறுவ(து) அறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே. 5

352 ஓடிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி இறைவா நமஎன்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் றானே. 6

---

## 4. தக்கன் வேள்வி

353 தந்தைபி ரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை
வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே. 1

354 சந்தி செயக்கண் டெழுகின் றரிதானும்
எந்தை யிவனல்ல யாமே உலகினிற்
பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய
அந்தமி லானும் அருள்புரிந் தானே. 2

---

பா-ம்— [1]வாழிப் பிரமற்கும்.

355 அப்பரி சேயய ஞர்பதி வேள்வியுள்
அப்பரி சேயங்கி அதிசய மாகிலும்
அப்பரி சேயது நீர்மையை யுள்கலந்
தப்பரி சேசிவன் ஆலிக்கின் றானே. 3

356 அப்பரி சேஅயன் மால்முதல் தேவர்கள்
அப்பரி சேயவ ராகிய காரணம்
அப்பரி சங்கி யுளநாளும் உள்ளிட்
டப்பரி சாகி [1]அலர்ந்திருந் தானே. 4

357 [2]அலர்ந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
உவந்த பெருவழி யோடிவந் தானே. 5

358 அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் இந்திரன்
சிரமுக நாசி [3]சிறந்தகை தோள்தான்
அரனருள் இன்றி அழிந்தநல் லோரே. 6

359 செவிமந் திரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்
அவிமந் திரத்தின் அடுக்களை கோலிச்
செவிமந் திரஞ்செய்து தாமுற நோக்குங்
குவிமந் திரங்கொல் கொடியது வாமே. 7

360 நல்லார் நவகுண்டம் ஒன்பதும் இன்புறப்
பல்லார் அமரர் பரிந்தருள் செய்கென
வில்லாற் புரத்தை விளங்கெரி கோத்தவன்
பொல்லா அசுரர்கள் பொன்றும் படிக்கே. 8

361 **தெளிந்தார் கலங்கினும் நீகலங் காதே**
அளிந்தாங் கடைவதெம் ஆதிப் பிரானை

---

*பா-ம்— [1]அலந்திருந்; அமர்ந்திருந். [2]அலந்திருந். [3]சித்தைகை.*

[1]விளிந்தா னதுதக்கன் வேள்வியை வீபா
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யானே. 9

## 5. பிரளயம்

362 கருவரை மூடிக் கலங்கெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல இறைவன்
ஒருவனும் நீருற ஓங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே. 1

363 அலைகடல் ஊடறுத் தண்டத்து வானோர்
தலைவன் எனும்பெயர் தான்றலை மேற்கொண்டு
உலகார் அழற்கண் டுள்விழா தோடி
அலைவாயில் வீழாமல் அஞ்சலென் றானே. 2

364 தண்கடல் விட்ட தமரருந் தேவரும்
எண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர்
விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்
கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே. 3

365 சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி
அமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி ஓசை
மிகைக்கொள அங்கி மிகாமைவைத் தானே. 4

366 பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாத கமலத் திருக்கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாத விருத்திகொண் டானே. 5

## 6. சக்கரப்பேறு

367 மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங்
கால்போதங் கையினோ டந்தரச் சக்கர

பா-ம்— [1]விளிந்தானத் தக்கன்அவ் வேள்வியை.

மேல்போக வெள்ளி மலைஅம ராபதி
பார்போக மேழும் படைத்துடை யானே. 1

368 சக்கரம் பெற்றுநல் தாமோ தரன்தானும்
சக்கரந் தன்னைத் [1]தரிக்கவொண் ணமையால்
மிக்கரன் தன்னை விருப்புடன் அர்ச்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. 2

369 கூறது வாகக் குறித்துநற் சக்கரங்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து [2]தரித்தனன் கோலமே. 3

370 தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்
தக்கன்றன் வேள்வியில் தாமோ தரன்தானுஞ்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
அக்கி உமிழ்ந்தது வாயுக் கரத்திலே. 4

---

## 7. எலும்பும் கபாலமும்

371 எலும்புங் கபாலமும் ஏந்தி எழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
எலும்புங் கபாலமும் ஏந்தில னாகில்
எலும்புங் கபாலமும் இற்றுமண் ணாமே. 1

---

## 8. அடிமுடி தேடல்

372 பிரமனும் மாலும் பிரானேநான் என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதைமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடி தேடி அரற்றுகின் றாரே.* 1

---

பா—ம்—[1]திரிக்கவொண். [2]கொடுத்தனன். *இச்செய்யுளின் பின் ஒரு பிரதியில் 'அடிமுடி காண்பர்' என்று தொடங்கும் 88-ம் செய்யுள் காணப்படுகிறது.

373 ஆமே மூலகுற நின்றஎம் அண்ணலுந்
தாமே மூலகில் தழற்பிழம் பாய்நிற்கும்
வானே மூலகுறும் மாமணி கண்டனே
[1]யானே அறிந்தேன் அவன்ஆண்மை யாலே. 2

374 ஊனுய் உயிராய் உணர்வங்கி யாய்முன்னஞ்
சேனுய்வா னேங்கித் திருவுரு வாய்அண்டத்
தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்
தாண்முழு தண்டமு மாகிநின் றுனே. 3

375 நின்றுன் நிலமுழு தண்டத்துள் நீளியன்
அன்றே யவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றுர் இருவர் திருமுடி மேற்செல
நன்றுங் கழலடி நாடவொண் ணுதே. 4

376 சேவடி ஏத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றுனும் முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனுந்
தாவடி யிட்டுத் தலைப்பெய்து மாறே. 5

377 தானக் கமலத் திருந்த சதுமுகன்
தானக் கருங்[2]கட லூழித் தலைவனும்
ஊனத்தின் உள்ளே உயிர்போல் உணர்கின்ற
தானப் பெரும்பொருள் தன்மைய தாமே. 6

378 ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்
டாலிங் கனஞ்செய் துலகம் வலம்வருங்
கோலிங் கனைஞ்சருள் கூடலு மாமே. 7

379 வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்
ஆள்கொடுத் தெம்போல் அரனை அறிகிலர்

பா–ம்—[1]நானே. அறிந்தேனென் ஆண்மையினுலே. [2]கடல்வாழித்.

ஆள்கொடுத் தின்பங் கொடுத்துக் கோளாகத்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே. 8

380 ஊழி வலஞ்செய்தங் கோரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்தது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியைவென் றானே. 9

---

## 9. [1]படைத்தல்

381 ஆதியோ டந்தம் இலாத [2]பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாந்
தீதில் பரையதன் பால்திகழ் நாதமே. 1

382 நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே. 2

383 இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும்
வல்லது ஆக வழிசெய்த அப்பொருள்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே. 3

384 தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்
சார்வத்துச் சத்திஓர் சாத்துமா றுமே. 4

385 மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்
கானின்கண் நீருங் கலந்து கடினமாய்த்

பா-ம்— [1]சிருஷ்டி; சர்வ சிருஷ்டி. [2]பராபரன்.

தேனின்கண் ஐந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே. 5

386 புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்
புவனம் படைப்பானப் புண்ணியன் தானே. 6

387 புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்
தண்ணிய மானை வளர்த்திடுஞ் சத்தியுங்
கண்ணியல் பாகக் கலவி முழுதுமாய்
மண்ணியல் பாக மலர்ந்தெழு பூவிலே. 7

388 நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை
[1]காயத்திற் சோதி பிறக்கும்அக் காற்றிடை
ஓர்வுடை நல்லுயிர்ப் பாதம் ஒலிசத்தி
நீரிடை மண்ணின் நிலைப்பிறப் பாமே. 8

389 உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி
அண்டத் தமரர் தலைவனும் ஆதியுங்
கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. 9

390 ஓங்கு பெருங்கடல் உள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் தானும்
வீங்குங் கமல மலர்மிசை மேலயன்
ஆங்குயிர் வைக்கும் அதுவுணர்ந் தானே. 10

391 காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்
நாரணன் நின்ற நடுவுட லாய்நிற்கும்
பாரணன் அன்பிற் பதஞ்செய்யும் நான்முகன்
ஆரண மாய்உல காயமர்ந் தானே. 11

பா-ம்— [1]*காய்கதிர்ச்*

392 பயன்எளி தாம்பரு மாமணி செய்ய
நயன்எளி தாகிய நம்பன்ஒன் றுண்டு
அயன்ஒளி யாயிருந் தங்கே படைக்கும்
பயனெளி தாம்வய ணங்தெளிந் தேனே. 12

393 போக்கும் வரவும் புனிதன் அருள்புரிந்
தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து
மேக்கு மிகநின்ற எட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் தானே. 13

394 நின்றுயி ராக்கு நிமலன்என் னுருயிர்
ஒன்றுயி ராக்கும் அளவை உடலுற
முன்துய ராக்கும் உடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. 14

395 ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துடலாய்உளன்
ஆகின்ற தன்மைசெய் ஆண்டகை யானே. 15

396 ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளக்கும்
பருவங்கள் தோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. 16

397 புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முடிக் காகின் றாரே. 17

398 ஆணவச் சத்தியும் ஆம்அதில் ஐவருங்
காரிய காரண ஈசர் கடைமுறை
பேணிய ஐந்தொழி லால்விந்து விற்பிறந்(து)
ஆணவம் நீங்கா தவரென லாகுமே. 18

399 உற்றமுப் பாலொன்று மாயாள் உதயமா
மற்றைய மூன்று மாயோ தயம்விந்து
[1]பெற்றவன் நாதம் பரையிற் பிறத்தலால்
துற்ற பரசிவன் தொல்வினை யாட்டிடே. 19

400 ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரன்மால் பிரமனும்
ஆகாயம் பூமி காண [2]அளித்தலே. 20

401 அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்
அளியார் திரிபுரை யாம்அவள் தானே
அளியார் சதாசிவ மாகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்துசெய் வாளே. 21

402 வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி
காரணி காரிய மாகக் கலந்தவள்
வாரணி ஆரணி வானவர் மோகினி
பூரணி [3]போதாதி போதமு மாமே. 22

403 நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கும் அரன்திரு மாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்திருந் தானே. 23

404 ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழுந் துடைத்தான்
ஒருவனு [4]மேஉல கோடுயிர் தானே. 24

405 செந்தா மரைவண்ணன் தீவண்ணன் எம்இறை
மைந்தார் முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்தும்

---

பா-ம்— [1]பெற்றவள். [2]அளித்ததே. [3]பூதாதி. [4]மேஉடலோடுயிர். *இது 438-ம் பாடலாகவும் வந்துள்ளது.

கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்தும்
[1]அந்தார் பிறவி அறுத்துநின் றானே. 25

406 தேடுந் திசைஎட்டுஞ் சீவன் உடல்உயிர்
கூடும் பிறவிக் குணஞ்செய்த மாநந்தி
ஊடும் அவர்தம துள்ளத்துள் ளேநின்று
நாடும் வழக்கமும் நான்அறிந் தேனே. 26

407 ஓராய மேஉல கேழும் படைப்பதும்
ஓராய மேஉல கேழும் அளிப்பதும்
ஓராய மேஉல கேழுந் துடைப்பதும்
ஓராய மே[2]உல கோடுயிர் தானே. 27

408 நாதன் ஒருவனும் நல்ல இருவருங்
கோது குலத்தொடுங் கூட்டிக் குழைத்தனர்
ஏது பணியென் றிசையும் இருவருக்
காதி இவனே அருளுகின் றானே. 28

409 அப்பரி சண்பத்து நான்குநூ றாயிரம்
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கும்
பொய்ப்பரி செய்திப் புகலும் மனிதர்கட்
கிப்பரி சேஇருள் மூடிநின் றானே. 29

410 ஆதித்தன் சந்திரன் அங்கிஎண் பாலர்கள்
போதித்த வானொலி பொங்கிய நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்
ஓதுற்ற மாயையின் விந்துவின் உற்றதே. 30

## 10. [3]காத்தல்

411* புகுந்துநின் றான்வெளி யாய்இரு ளாகிப்
புகுந்துநின் றான்புகழ் வாய்இகழ் வாகிப்

பா-ம்— [1]ஐந்தார் பிறவி அமைத்து நின்றானே. [2]உடலோடுயிர்தானே. [3]திதி. *இது 414-ம் பாடலாகவும் வந்துள்ளது.

புகுந்துநின் றுன்உட லாய்உயி ராகிப்
புகுந்துநின் றுன்புந்தி மன்னிநின் றுனே. 1

412 தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே உடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடல்மலை யாதியு மாய்நிற்குந்
தானே உலகில் தலைவனு மாமே.[1] 2

413 உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந்தா னாகி
அடையார் [1]பெருவழி அண்ணல்நின் றுனே. 3

414 தேடுந் திசைஎட்டுஞ் சீவன் உடல்உயிர்
[2]கூடு மரபிற் குணஞ்செய்த மாநந்தி
ஊடும் அவர்தம துள்ளத்து ளேநின்று
நாடும் வழக்கமும் நான்அறிந் தேனே. 4

415 தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்குந்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்குந்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்குந்
தானொரு காலந்தண் மாயனு மாமே. 5

416 **அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்**
இன்பமும் இன்பக் கலவியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்துநின் றுனே. 6

417 உற்று வனைவான் அவனே உலகினைப்
பெற்று வனைவான் அவனே பிறவியைச்
சுற்றிய சாலுங் குடமுஞ் சிறுதூதை
மற்றும் அவனே வனையவல் லானே. 7

---

*பா-ம்— [1]பெருவெளி. [2]கூடும் பிறவிக். [*]இது 2967-ம் பாடலாகவும் வந்துள்ளது.*

418 உள்ளுயிர்ப் பாயுட லாகினின் றுன்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியாய் நிலங்கொளி
உள்ளுயிர்க் கும்உணர் வேயுட லுட்பரந்
தள்ளுயி ராவண்ணந் தாங்கிநின் றுனே. 8

419 தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை
ஓங்கி எழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கிநின் றுனும்அத் தாரணி தானே. 9

420 அணுகினுஞ் சேயவன் அங்கியிற் கூடி
நணுகினும் ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகினும் பார்மிசைப் பல்லுயி ராகித்
தணிகினும் மண்ணுடல் அண்ணல்செய் வானே.

---

## 11. [1]அழித்தல்

421 அங்கிசெய் தீசன் அகலிடஞ் சுட்டது
அங்கிசெய் தீசன் அலைகடற் சுட்டது
அங்கிசெய் தீசன் அசுரரைச் சுட்டது
**அங்கியவ் வீசற்குக் கைஅம்பு தானே.** 1

422 இலயங்கள் மூன்றினும் ஒன்றுகற் பாந்த
நிலையன் றழிந்தமை நின்றுணர்ந் தேனல்
உலைதந்த மெல்லரி போலும் உலகம்
மலைதந்த மானிலந் தான்வெந் ததுவே. 2

423 பதஞ்செய்யும் பாரும் பனிவரை எட்டும்
உதஞ்செய்யும் ஏழ்கடல் ஓதம் முதலாங்
குதஞ்செய்யும் அங்கி கொளுவியா காசம்
விதஞ்செய்யும் நெஞ்சில் வியப்பில்லை தானே. 3

---

பா-ம்— [1]சங்காரம்.

424 கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி யிருந்தெண் டிரையாகி
ஒன்றின் பதஞ்செய்த ஓம்என்ற அப்புறக்
குண்டத்தின் மேல்அங்கி கோலிக்கொண் டானே.

425 நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாஞ்
சுத்தசங் காரந் தொழிலற்ற கேவலம்
உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே. 5

426 நித்தசங் காரம் இரண்டுடல் நீவுதல்
வைத்தசங் காரமும் மாயாசங் காரமாஞ்
சுத்தசங் காரம் மனாதீதந் தோய்வுறல்
உய்த்தசங் காரஞ் சிவன்அருள் உண்மையே. 6

427 நித்தசங் காரங் கருவிடர் நீக்கினல்
ஒத்தசங் காரம் உடலுயிர் நீவுதல்
சுத்தசங் காரம் அதீதத்துட் டோய்வுறல்
உய்த்தசங் காரம் பரனருள் உண்மையே. 7

428 நித்தசங் காரமும் நீடிளைப் பாற்றலின்
வைத்தசங் காரமும் மன்னும் அனாதியிற்
சுத்தசங் காரமுந் தோயாப் பரன்அருள்
உய்த்தசங் காரமும் நாலாம் உதிக்கிலே. 8

429 பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்
பாழாய் அடங்கினும் பண்டைப்பாழ் பாழாகா
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிராய் அடங்கும்அப் பாழிலே. 9

430 தீயவைத் தார்மின்கள் சேரும் வினைதனை
மாயவைத் தான்வைத்த வன்பதி ஒன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்கும் நினைப்பதோர்
ஆயம்வைத் தானுணர் வாரவைத் தானே. 10

## 12. [1]மறைத்தல்

431 உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி [2]நீங்கா ஒருவனை
[3]உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே. 1

432 இன்பப் பிறவி படைத்த இறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயருள் [4]அடைத்தனன்
என்பிற் கொளுவி இசைந்துறு தோற்றதை
முன்பிற் கொளுவி முடிகுவ தாமே. 2

433 இறையவன் மாதவன் இன்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன் கூடி
இறையவன் செய்த இரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த [5]பரிசறி யாதே. 3

434 காண்கின்ற கண்ணொளி காதல்செய் ஈசனை
ஆண்பெண் அலியுரு வாய்நின்ற ஆதியை
ஊண்படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே. 4

435 தெருளும் உலகிற்குந் தேவர்க்கும் இன்பம்
அருளும் வகைசெய்யும் ஆதிப் பிரானுஞ்
சுருளுஞ் சுடருறு தூவெண் சுடரும்
இருளும் அறநின் றிருட்டறை யாமே. 5

436 அரைக்கின் றருள்தரும் அங்கங்கள் ஓசை
உரைக்கின்ற ஆசையும் ஒன்றொடொன் றொவ்
பரக்கும் உருவமும் பாரகந் தானாய்க் [வாப்
கரக்கின் றவைசெய்த காண்டகை யானே. 6

---

பா—ம்— [1]திரோபவம். [2]நீங்கா தொருவனை. [3]உள்ளமும் அவனும் உறவா யிருந்தும். [4]அடைந்தனன். [5]பரிசறி யாரே.

437 ஒளித்துவைத் தேனுள் ளூறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடு மீண்டே
களிப்பொடுங் காதன்மை என்னும் பெருமை
வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே. 7

438 நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் [1]கியங்கும் அரன்திரு மாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராகி இசைந்திருந் தானே. 8

439 ஒருங்கிய பாசத்துள் உத்தம [2]சித்தன்
இருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை ஓரா வகையினிற் கங்கை
அருங்கரை பேணில் அழுக்கற லாமே. 9

440 **மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்**
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
**கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா**
**அண்ணலும் இவ்வண்ண மாகிநின் றானே.*** 10

## 13. [3]அருளல்

441 எட்டுத் திசையும் எறிகின்ற காற்றொடு
வட்டத் திரையனல் மாநிலம் ஆகாயம்
ஒட்டி உயிர்நிலை என்னும்இக் காயப்பை
கட்டி [4]அவிழ்ப்பன் கண்ணுதல் காணுமே. 1

442 உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை
நச்சியே இன்பங்கொள் வார்க்கு நமன்இல்லை
விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்
தச்சு மவனே சமைக்கவல் லானே. 2

பா—ம்— [1]கியங்கி யயன்திரு. [2]சித்தின். [3]அநுக்கிரகம் [4]அவிழ்க்கின்ற. *இது 2351-ம் பாடலாகவும் வந்துள்ளது.

443 [1]குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்
[1]குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
[2]குசவனைப் போல்எங்கள் கோன்நந்தி வேண்டில்
[3]அசைவில் உலகம் அதுஇது வாமே. 3

444 விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேஉல காக்குங்
கொடையுடை யான்குணம் எண்குண மாகுஞ்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே. 4

445 உகந்துநின் றேபடைத் தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத் தான்பல ஊழி
உகந்துநின் றேபடைத் தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர் ஊன்படைத் தானே. 5

446 படைத்துடை யான்பண் டுலகங்கள் ஏழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் றானே. 6

447 [4]ஆதி படைத்தனன் ஐம்பெரும் [5]பூதம்
[4]ஆதி படைத்தனன் [6]ஆசில்பல் ஊழி
[4]ஆதி படைத்தனன் எண்ணிலி தேவரை
[4]ஆதி படைத்தவை தாங்கிநின் றானே. 7

448 அகன்றான் [7]அகலிடம் ஏழுமொன் றாகி
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றான் பலபல [8]சீவனும் ஆகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே. 8

---

பா-ம்— [1]குயவன். [2]குயவனைப். [3]அயைவில். [4]அனாதி. [5]பூதங்கள். [6]ஆயபல் ஊழிகள். [7]கடலிடம். [8]சீவரும்.

*இது 3011-ம் பாடலாகவும் வந்துள்ளது.

449 உண்ணின்ற சோதி உறநின்ற ஓருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருள்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி [1]மாபோத மாமே. 9

450 ஆரும் அறியாத அண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
**நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்**
சோராமற் காணுஞ் சுகம்அறிந் தேனே. 10

## 14. [2]கருஉற்பத்தி

451 ஆக்குகின் றான்முன் பிரிந்த இருபத்தஞ்
சாக்குகின் றானவ னாதிஎம் ஆருயிர்
ஆக்குகின் றான்கர்ப்பக் கோளகை யுள்ளிருந்
தாக்குகின் றான்அவன் ஆவ தறிந்தே. 1

452 அறிகின்ற மூலத்தின் மேல்அங்கி அப்புச்
செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற இன்னுயிர் போந்துற நாடிப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. 2

453 இன்புறு காலத் திருவர்முன் பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்
அன்புறு காலத் தமைத்தொழிந் தானே. 3

454 கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்
புருடன் உடலில் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்த
துருவம் இரண்டாக ஓடி விழுந்ததே. 4

பா-ம் — [1]மாபோதகமே. [2]கர்ப்பக்கிரியை.

455 விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி
ஒழிந்த முதல்ஐந்தும் ஈரைந்தொ டேறிப்
பொழிந்த புனல்பூதம் போற்றுங் கரணம்
ஒழிந்த நுதல்உச்சி உள்ளே ஒளித்ததே. 5

456 பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந்
தாவி உலகில் தரிப்பித்த வாறுபோல்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவுங்
கூவி அவிழுங் குறிக்கொண்ட போதே. 6

457 போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
[1]மூழ்கின்ற முத்தனும் ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டுடன் நாலு புரவியும்
பாகன் [2]விடானெனிற் [3]பன்றியு மாமே. 7

458 ஏற எதிர்க்கில் இறையவ னாகும்
மாற எதிர்க்கில் [4]அரியவ னாகும்
நேரொக்க வைக்கின் நிகர்போதத் தானாகும்
பேரொத்த மைந்தனும் பேரர சாளுமே. 8

459 ஏயங் கலந்த இருவர்தஞ் சாயத்துப்
பாயுங் கருவும் உருவா மெனப்பல
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனோலய மானதே. 9

460 கர்ப்பத்துக் கேவல மாயாள் [5]கிளைகூட்ட
நிற்குந் துரியமும் பேதித்து நினைவெழ
வற்புறு காமியம் எட்டாதல் மாயேயஞ்
சொற்புறு தூய்மறை வாக்கினுஞ் சொல்லே. 10

461 என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்
செம்பால் இறைச்சி திருந்த மனைசெய்து

பா—ம்—[1]ஆகிப் படைத்தன. [2]விடாவிடிற். [3]பந்தியு. [4]அரியயன். [5]இளைக்கூட்ட.

இன்பால் உயிர்நிலை செய்த இறையோர் நம்
[1]நன்பால் ஒருவனை நாடுகின் றேனே. 11

462 பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோன்
இதஞ்செய்யு மொத்துடல் எங்கும் புகுந்து
குதஞ்செய்யும் அங்கியின் கோபந் தணிப்பான்
விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே. 12

463 ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே
வழிபல நீராடி வைத்தெழு வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே. 13

464 சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே. 14

465 போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனுங்
[2]கோசத்துள்ஆகங்கொணர்ந்தகொடைத்தொழில்
ஏகத்துள்ஆங்கே இரண்டெட்டு மூன்றைந்து
மோகத்துள் ஆங்கொரு முட்டைசெய் தானே. 15

466 பிண்டத்தில் உள்ளூறு பேதைப் புலன்ஐந்தும்
பிண்டத்தி னூடே பிறந்து மரித்தது
அண்டத்தின் உள்ளூறு சீவனும் அவ்வகை
அண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. 16

467 இலைப்பொறி யேற்றி யெனதுடல் ஈசன்
துலைப்பொறி யிற்கரு ஐந்துட னாட்டி
நிலைப்பொறி முப்பது நீர்மை கொளுவி
உலைப்பொறி ஒன்பதில் ஒன்றுசெய் தானே. 17

பா-ம்—[1]நண்பால், [2]கோகத்துள்.

468 இன்புற் றிருவர் இசைவித்து வைத்தமண்
துன்பக் கலசம் அணைவான் ஒருவனே
ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே. 18

469 அறியீ ருடம்பினி லாகிய வாறும்
பிறியீ ரதனிற் பெருகுங் குணங்கள்
செறியீ ரவற்றினுட் சித்திகள் இட்ட
தறியவீ ரைந்தினு ளானது பிண்டமே. 19

470 உடல்வைத்த வாறும் உயிர்வைத்த வாறும்
மடைவைத்த ஒன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியுள் அங்கிக்
கடைவைத்த ஈசனைக் கைகலந் தேனே. 20

471 கேட்டுநின் றேன்எங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றுன்முதல் யோனி மயனவன்
கூட்டுகின் றுன்குழம் பின்கரு வையுரு
நீட்டிநின் றுகத்து நேர்பட்ட வாறே. 21

472 பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடும்
நீரிடை நின்ற குமிழி நிழலதாய்ப்
பாருடல் எங்கும் பரந்தெட்டும் பற்றுமே. 22

473 எட்டினுள் ஐந்தாகும் இந்திரி யங்களும்
கட்டிய மூன்று கரணமு மாய்விடும்
ஒட்டிய பாச உணர்வென்னுங் காயப்பை
கட்டி அவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. 23

474 கண்ணுதல் நாமங் கலந்துடம் பாயிடைப்
பண்ணுதல் செய்து பசுபாசம் நீங்கிட
எண்ணிய வேதம் இசைந்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே. 24

475 அருளல்ல தில்லை அரனவன் அன்றி
அருளில்லை யாதலி னவ்வோர் உயிரைத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. 25

476 வகுத்த பிறவியை மாதுநல் லாளுந்
தொகுத்திருள் நீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்லுயிர் எல்லாம்
வகுத்துள்ளும் நின்றதோர் மாண்பது வாமே. 26

477 மாண்பது வாக வளர்கின்ற [1]வன்னியுங்
காண்பது ஆண்பெண் அலியெனுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தானச் சோதிதன் ஆண்மையே. 27

478 **ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்**
பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகு மாகில் தரணி முழுதாளும்
பாணவ மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே. 28

479 பாய்ந்தபின் னஞ்சோடில் ஆயுளும் நூறாகும்
பாய்ந்தபின் னாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந் திவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலு மாமே. 29

480 பாய்கின்ற வாயுக் குறையிற் குறளாகும்
பாய்கின்ற வாயு விளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படிற் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லைப் பார்க்கிலே. 30

481 மாதா உதரம் மலமிகில் மந்தனாம்
மாதா உதரம் சலமிகில் மூங்கையாம்

பா-ம்— [1]வன்னியைக்.

மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே. 31

482 குழவியும் ஆணும் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணும் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபான னெதிர்க்கில்
குழவி அலியாகுங் கொண்டகால் ஒக்கிலே. 32

483 கொண்டநல் வாயு இருவர்க்கும் [1]ஒத்தெழில்
கொண்ட குழவியுங் கோமள மாயிடுங்
கொண்டநல் வாயு இருவர்க்குங் குழறிடில்
கொண்டதும் இல்லையாங் கோல்வளை யாட்கே. 33

484 கோல்வளை உந்தியிற் கொண்ட குழவியுந்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. 34

485 உருவம் வளர்ந்திடும் ஒண்டிங்கள் பத்திற்
பருவம தாகவே பாரினில் வந்திடும்
மருவி வளர்ந்திடு மாயையி னாலே
அருவம தாவதிங் காரறி வாரே. 35

486 இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன் இம்மாயையின் கீழ்மையெவ் வாறே.

487 இன்புற நாடி இருவருஞ் [2]சந்தித்துத்
துன்புறு பாசத்தில் தோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் தோன்றிய
தொன்புற நாடிநின் றேதலு மாமே. 37

பா-ம்— [1]ஒத்தேறில். [2]சிந்தித்துத்.

488 குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக் கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே. 38

489 முதற்கிழங் காய்முளை யாய்அம் முளைப்பின்
அதற்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கும்
அதற்கது வாய்இன்ப மாவது போல
அதற்கது வாய்நிற்கும் ஆதிப் பிரானே. 39

490 ஏனோர் பெருமைய னாகினும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந் துங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே அறியுந் தவத்தினி னுள்ளே.* 40

491 பரத்திற் கரைந்து பதிந்தநற் காயம்
உருத்தரித் திவ்வுடல் ஓங்கிட வேண்டித்
திரைக்கடல் உப்புத் திரண்டது போலத்
திரித்துப் பிறக்குந் திருவரு ளாலே. 41

## 15. மூவகைச்சீவ வர்க்கம்

492 சக்தி சிவன்விளை யாட்டால் உயிராக்கி
ஒத்த இருமாயா கூட்டத் திடைபூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே.** 1

493 விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தாங்கு சகலத்தின்
அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே. 2

*இது 2012-ம், 3024-ம் பாடல்களாகவும் வந்துள்ளது.
**இது 1771-ம் பாடலாகவும் வந்துள்ளது.

494 விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவர்
தஞ்ஞானர் அட்டவித் தேசராஞ் சார்ந்துளோர்
எஞ்ஞானர் ஏழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞானர் ஆணவம் விட்டுநின் றாரே. 3

495 இரண்டா வதில்முத்தி எய்துவர் அத்தனை
இரண்டாவ துள்ளே இருமல பெத்தர்
இரண்டாகு நூற்றெட்டு ருத்திரர் என்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. 4

496 பெத்தத்த சித்தொடு பேண்முத்தச் சித்தது
ஒத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய்
மத்தது மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே. 5

497 சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகார் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்
பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்
நவமான தத்துவம் [1]நாடிக்கண் டோரே. 6

498 விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்
விஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்
அஞ்ஞானர் அச்சக லத்தர் சகலராம்
விஞ்ஞான ராதிகள் ஒன்பான்வே றுயிர்களே. 7

499 விஞ்ஞான கன்மத்தால் மெய்யகங் கூடிய
அஞ்ஞான கன்மத்தி லுல்சுவர் யோனிபுக்
கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெய்ஞ்ஞான ராகிச் சிவமேவல் உண்மையே. 8

---

பா-ம்— [1] நாடிக்கொண் டாரே.

500 ஆணவந் துற்ற வவித்தா நனவற்றோர்
காணிய விந்துவா நாத சகலாதி
ஆணவ மாதி யடைந்தோ ரவரன்றே
சேணுயர் சத்தி சிவதத் துவமாமே. 9

## 16. பாத்திரம்

501 திலமத் தனையே சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. 1

502 கண்டிருந் தாருயிர் உண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தாருயிர் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனைச்
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. 2

503 கைவிட் டிலேன்கரு வாகிய காலத்து
மெய்விட் டிலேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிலாத விடிஞ்சிலு மாமே. 3

504 ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
ஏவன செய்யும் இளங்கிளை யோனே.* 4

## 17. அபாத்திரம்

505 கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்குஞ்
சீலமும் நோன்பும் இலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது ஆகுமே. 1

*இது 2175-ம் பாடலாகவும் வந்துள்ளது.

506 ஈவது யோக இயம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
ஆவ தறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொ ளீரே. 2

507 ஆமா றறியான் அதிபஞ்ச பாதகன்
தோமாறும் ஈசற்குந் தூய குரவற்குங்
காமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்
போமா நரகிற் புகான்போதங் கற்கவே. 3

508 மண்மலை யத்தனை மாதனம் ஈயினும்
அண்ணல் இவனென்றே யஞ்சலி யத்தனாய்
எண்ணி யிறைஞ்சாதார்க் கீந்த இருவரும்
நண்ணுவர் ஏழா நரகக் குழியிலே. 4

---

## 18. தீர்த்தம்

509 உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியி லோரே. 1

510 தெளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங்
குளியறி வாளர்க்குக் கூடவும் ஒண்ணான்
வளியறி வாளர்க்கு வாய்க்கினும் வாய்க்குந்
தெளியறி வாளர்தஞ் சிந்தையு ளானே. 2

511 உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தி னாருங் கலந்தறி வார்இல்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பந்தருள் ளானே. 3

512 அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்
செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொள்

மறியார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனல்மூழ்கப் புண்ணிய ராமே. 4

513 கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்
[1]உடலுற் றுத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை ஒன்றறி யாரே. 5

514 கலந்தது நீர துடம்பிற் கறுக்குங்
கலந்தது நீர துடம்பிற் சிவக்குங்
கலந்தது நீர துடம்பில் வெளுக்குங்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. 6

---

## 19. [2]திருக்கோயில்

515 தாவர லிங்கம் பறித்தொன் றில் தாபித்தால்
ஆவதன் முன்னே அரசு நிலைகெடுஞ்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடுங்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. 1

516 கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே. 2

517 ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளெல்லாஞ்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே. 3

518 முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள [3]வாரி வளங்குன்றுங்

---

பா—ம்—[1]உடலுறத். [2]திருக்கோயிலிழிவு. [3]மாரி.

கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே. 4

519 *பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தாற்*
போர்கொண்டநாட்டுக்குப்பொல்லாவியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாம்என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. 5

## 20. அதோமுக தெரிசனம்

520 எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே. 1

521 அண்டமொ டெண்டிசை தாங்கும் அதோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே. 2

522 செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகழும் [1]மனிதர்கள்
மெய்யே யுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே. 3

523 நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீக் கலந்துட் சிவனென நிற்கும்
முந்திக் கலந்தங் குலகம் வலம்வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே. 4

524 அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகத் தன்னெடும் எங்கு முயலுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே. 5

---

பா-ம்— [1] மனிதர்காள்.

525 அதோமுக மாமல ராயது கேளும்
அதோமுகத் தாலொரு நூறுய் விரிந்து
அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே. 6

## 21. சிவநிந்தை

526 தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே
அளிவுறு வாரம ராபதி நாடி
எளியனென் றீசனை நீசர் இகழின்
கிளியொன்று பூனையிற் கீழது வாகுமே. 1

527 முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்
விளிந்தவர் மெய்ந்நின்ற ஞானம் உணரார்
அளிந்தமு தூறிய ஆதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கலொண் ணுதே. 2

528 அப்பகை யாலே அசுரருந் தேவரும்
நற்பகை செய்து நடுவே முடிந்தனர்
எப்பகை யாகிலும் எய்தார் இறைவனைப்
பொய்ப்பகை செய்யினும் ஒன்றுபத் தாமே. 3

529 போகமும் மாதர் புலவி யதுநினைந்
தாகமும் உள்கலந் தங்குள ளுதலில்
வேதிய ராயும் விகிர்தனும் என்கின்ற
நீதியுள் ஈசன் நினைப்பொழி வாரே. 4

## 22. குரு நிந்தை

530 பெற்றிருந் தாரையும் பேணுர் கயவர்கள்
உற்றிருந் தாரை உளைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி உற்றிருந் தாரவர்
பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. 1

531 ஓரெழுத் தொருபொருள் உணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
[1]வாரிடைக் கிருமியாய் [2]மாய்வர் மண்ணிலே. 2

532 பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும்ஆண்டொன்றில் [3]மாண்டிடுஞ்
சத்தியம் [4]ஈது சதாநந்தி ஆணையே. 3

533 மந்திரம் ஓரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. 4

534 ஈச னடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாகுமே நந்நந்தி யாணையே. 5

535 சன்மார்க்க சற்குரு சந்நிதி பொய்வரின்
நன்மார்க்க முங்குன்றி ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையும் மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. 6

536 கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
மெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றும்
கைப்பட்ட நெய்பால் தயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றுங் கன்மிஞானிக்
[கொப்பே. 7

---

பா—ம்— [1]பாரிடைக். [2]படிகுவர். [3]மாய்த்திடுஞ். [4]சொன்னேம்.

## 23. மயேசுர நிந்தை

537 ஆண்டான் அடியவ ரார்க்கும் விரோதிகள்
ஆண்டான் அடியவர் ஐயமேற் [1]றுண்பவர்
ஆண்டான் அடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் விழுவது தாழ்நர காகுமே. 1

538 ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே
ஞானியை வந்திப் பவனுமே நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே. 2

## 24. பொறையுடைமை

539 பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதான் ஒன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையும் [2]நாவையுந்
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே. 1

540 ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த [3]மேனியன் பாதம் பணிந்துய்ய
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் [4]மன்னவன்
[5]ஞாலத் திவன்மிக நல்லனென் றாரே. 2

541 ஞானம் விளைந்தவர் நம்மிட மன்னவர்
சேனை வளைந்து திசைதொறுங் கைதொழ
ஊனை விளைத்திடும் உம்பர்தம் ஆதியை
ஏனை [6]விளைந்தருள் எட்டலு மாமே. 3

542 வல்வகை யாலும் மனையிலும் மன்றிலும்
பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செய்யுங்
கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்தனுக்
கெல்லையி லாத இலயமுண் டாமே. 4

பா-ம்— [1] றுண்பார். [2] நாவியும். [3] மேனி பணிந்தடி யேன்தொழ. [4] ஒப்புநீ. [5] ஞாலத்து நம்மடி நல்கிடென் றுலே. [6] வளைந்தருள்.

## 25. பெரியாரைத் துணைக்கோடல்*

543 ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
தேடவல் லார்க்கருள் தேவர் பிரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே. 1

544 தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்
மாமனத் தங்கன்பு வைத்த நிலையாகும்
நீயிடர்ப் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. 2

545 அறிவார் அமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் [1]சிவதத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே. 3

546 தார்சடை யான்றன் தமராய் உலகினிற்
போர்புக ழானெந்தை பொன்னடி சேருவர்
வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங்
கோவடைந் தந்நெறி கூடலு மாமே. 4

547 உடையான் அடியார் அடியா ருடன்போய்ப்
படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
உடையான் வருகென ஓலமென் றாரே. 5

548 அருமைவல் லான்கலை [2]ஞானத்துள் தோன்றும்
பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்தும்
உரிமைவல் லோன்உணர்ந் தூழி யிருக்குந்
திருமைவல் லாரொடு சேர்ந்தனன் யானே. 6

**இரண்டாந் தந்திரம் முற்றிற்று**

---

பா—ம்— *பெரியாரைச் சேர்தல். [1]சிவதத்துவத்தைத. [2]ஞாலத்துள்.

# மூன்றாந் தந்திரம்*

## 1. அட்டாங்க யோகம்

549 [1]உரைத்தன வற்கரி ஒன்று மூடிய
நிரைத்த இராசி நிரைமுறை எண்ணிப்
[2]பிரச்சதம் எட்டும் பேசியே நந்தி
நிரைத்த இயமம் நியமஞ்செய் தானே. 1

550 செய்த இயம நியமஞ் சமாதிசென்
றுய்யப் பராசத்தி உத்தர பூருவ
மெய்த கவச நியாசங்கள் முத்திரை
எய்த வுரைசெய்வன் இந்நிலை தானே. 2

551 அந்நெறி இந்நெறி என்னாதட் டாங்கத்
தன்னெறி சென்று சமாதியி லேநின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி [3]யாகத்திற் போக்கில்லை யாகுமே. 3

552 இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணயா மம்[4]பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே. 4

## 2. இயமம்

553 எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்த ணியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. 1

பா—ம்— [1]உரைத்த நவாக்கிரி. [2]பிரைச்சதம். [3]யாக்கத்திற். [4]நன்பிரத்தி. *இது வீராகமத்தின் சாரம் என்பர்.

554 கொல்லான்பொய்கூறான்களவிலான்எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லா னியமத் திடையில்நின் றானே. 2

## 3. நியமம்

555 ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்
சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்
பாதியுள் மன்னும் பராசத்தி யோடுடன்
நீதி [1]யுணர்ந்து நியமத்த னாமே. 1

556 தூய்மை [2]அருளூண் சுருக்கம் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே. 2

557 தவஞ்செபஞ் சந்தோடம் ஆத்திகந் தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொண் மதிசொல்லீர் ஐந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே. 3

## 4. ஆதனம்

558 பங்கய மாதி பரந்தபல் ஆதனம்
அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்
சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்
தங்க இருப்பத் தலைவனு மாமே. 1

559 ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே. 2

---

பா–ம்— [1]யுணர்ந்த. [2]அருளூண்.

560 துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து
அரிய முழந்தாளி லங்கையை நீட்டி
உருசி யொடுமுடல் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே. 3

561 ஒக்க அடியிணை யூருவில் ஏறிட்டு
முக்கி யுடலை முழங்கை தனில்ஏற்றித்
தொக்க அறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட ஆசனங் கொள்ளலு மாமே. 4

562 பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வாய் அங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே. 5

563 பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திரம் வீரஞ் சுகாதனம் ஓரேழு
[1]முத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலஆ சனமே. 6

---

## 5. பிராணாயாமம்

564 ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப்பற்றுக்கொடுக்குங்கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே. 1

565 ஆரிய னல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவின் அருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. 2

---

பா—ம்— [1]முத்த மயூரமுது.

896 தானே தனக்குத் தலைவனு மாய்நிற்குந்
தானே தனக்குத் [1]தன்மலை யாய்நிற்குந்
தானே தனக்குத் தன்மய மாய்நிற்குந்
தானே தனக்குத் தலைவனு மாமே. 13

897 தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத்
தலைவனு மாய்நின்ற சற்பாத் திரத்தைத்
தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத்
தலைவனு மாய்நின்ற தாளிணை தானே. 14

898 இணையார் திருவடி எட்டெழுத் தாகும்
இணையார் கழலிணை யீரைஞ்ச தாகும்
இணையார் கழலிணை ஐம்பத்தொன் றாகும்
இணையார் கழலிணை ஏழா யிரமே. 15

899 ஏழா யிரமாய் இருபதாய் முப்பதாய்
ஏழா யிரத்தும் எழுகோடி தானாகி
[2]ஏழா யிரத்துயிர் எண்ணிலா மந்திரம்
ஏழா யிரண்டாய் இருக்கின்ற வாறே. 16

900 இருக்கின்ற மந்திரம் ஏழா யிரமாம்
இருக்கின்ற மந்திரம் எத்திறம் இல்லை
இருக்கின்ற மந்திரஞ் சிவன்திரு மேனி
இருக்கின்ற மந்திரம் இவ்வண்ணந் தானே. 17

901 தானே தனக்குத் தகுநட்டந் தானாகுந்
தானே அகார உகாரம தாய்நிற்குந்
தானே [3]ரீங்காரத் தத்துவக் கூத்துக்குத்
தானே உலகில் தனிநடந் தானே. 18

902 நடமிரண் டொன்றே நளினம தாகும்
நடமிரண் டொன்றே நமன்செய்யுங் கூத்து

பா—ம்— [1]தனமலை. [2]ஏழா யிரத்துயர். [3]ஹ்ரீங்காரத்தத்துவ மாய் நிற்கும்.

நடமிரண் டொன்றே நகைசெயா மந்திரம்
நடஞ்சிவ லிங்கம் நலஞ்செம்பு பொன்னே. 19

903 **செம்புபொன் னாகுஞ் சிவாய நமவென்னிற்**
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரஞ்
செம்புபொன் னாகும் ஸ்ரீயுங் கிரீயுமெனச்
செம்புபொன் னான திருவம் பலமே. 20

904 திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்
திருவம் பலமாக ஈராறு கீறித்
திருவம் பலமாக இருபத்தைஞ் சாக்கித்
திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே. 21

905 **வாறே சிவாய [1]நமச்சி வாயநம**
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே அருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே. 22

906 பொன்னான மந்திரம் புகலவும் ஒண்ணாது
பொன்னான மந்திரம் [2]பொறிகிஞ்சு கத்தாகும்
பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கிற்
பொன்னாகும் வல்லோர்க் குடம்புபொற் பாதமே.

907 பொற்பாதங் காணலாம் புத்திரர் உண்டாகும்
பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும்
பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும்
பொற்பாத நன்னடஞ் சிந்தனை சொல்லுமே. 24

908 சொல்லு மொருகூட்டிற் புக்குச் சுகிக்கலாம்
நல்ல மடவார் நயந்துட னேவருஞ்
சொல்லினும் பாசச் சுடர்ப்பாம்பு நீங்கிடுஞ்
சொல்லும் திருக்கூத்தின் [3]சூக்குமந் தானே. 25

---

பா-ம்— [1]நமமசி வாயந. [2]போகிக்குஞ் சித்தர்க்கும். [3]சூக்கமம் [பிற இடங்களிலும் இவ்வாறே கொள்க.]

909 சூக்குமம் எண்ணு யிரஞ்செபித் தாலுமேற்
சூக்கும மான வழியிடைக் காணலாஞ்
சூக்கும மான வினையைக் கெடுக்கலாஞ்
சூக்கும மான சிவனதா னந்தமே. 26

910 ஆனந்தம் [1]ஆனந்தம் ஒன்றென் றறைந்திட
ஆனந்தம் [2]ஆனந்தம் ஆ-ஈ-ஊ-ஏ-ஓமென் றைறந்
ஆனந்தம் ஆனந்தம் அஞ்சும தாயிடும் [திடம்
ஆனந்தம் [3]ஆனந்தம் அம்-ஹ்ரீம்-அம்-க்ஷம்-ஆம்-
[ஆகுமே. 27

911 மேனி யிரண்டும் விலங்காமல் மேல்கொள்ள
மேனி [4]யிரண்டு மிகார விகாரியா
மேனி யிரண்டும் ஊ-ஆ-ஈ-ஏ-ஓ-என்னும்
மேனி யிரண்டும் ஈ-ஓ-ஊ-ஆ-ஏ-கூத்தாமே. 28

912 கூத்தே சிவாய நமமசி வாயிடுங்
கூத்தே-ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவாயநம வாயிடுங்
கூத்தே-ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவயநம வாயிடுங்
கூத்தே-இ-ஊ-ஆ-ஏ-ஓம் நமசிவாயகோளொன்று
[மாறே. 29

913 ஒன்றிரண் டாடவோ ரொன்று முடனாட
ஒன்றினின் மூன்றாட ஓரேழும் ஒத்தாட
[5]ஒன்றினால் ஆடவோர் ஒன்பதும் உடனாட
மன்றினில் ஆடினான் மாணிக்கக் கூத்தே. 30

---

## 2. திருவம்பலச் சக்கரம்

914 இருந்தஇவ் வட்டங்கள் ஈராறி ரேகை
இருந்த இரேகைமேல் ஈரா றிருத்தி

---

பா-ம்— [1]ஒன்றென் றறைந்திடம் ஆனந்தம். [2]ஆ-ஈ-ஊ-ஏ-ஓஎன் றைறந்திடம். [3]ஆம்-ஹ்ரீம்-ஆம்-க்ஷம்-ஆகுமே. [4]யிரண்டு மிக்கார் விகாரியா. [5]ஒன்றினில் நாலாட ஒன்பதுமாட.

இருந்த மனைகளும் ஈராறு பத்தொன்
றிருந்த மனையொன்றில் எய்துவன் றானே. 1

915 தாளொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்
தாளொன்று [1]மங்நான்குந் தன்பே ரெழுத்தாகுந்
தாளொன்று நாற்கோணந் தன்னைந் தெழுத்தாகுந்
தாளொன்றி லேயொன்று மவ்வரன் தானே. 2

916 அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
**அரகர என்ன அறும்பிறப் பன்றே.** 3

917 எட்டு நிலையுள எங்கோன் இருப்பிடம்
எட்டினில் ஒன்றும் இருமூன்றும் ஈரேழும்
ஒட்டிய விந்துவும் நாதமும் ஓங்கிடப்
பட்டது மந்திரம் பான்மொழி பாலே. 4

918 மட்டவிழ் தாமரை மாதுநல் லாளுடன்
ஒட்டி இருந்த உபாயம் அறிகிலர்
விட்ட எழுத்தை விடாத எழுத்துடன்
கட்டவல் லாருயிர் காக்கவல் லாரே. 5

919 **ஆலய மாக அமர்ந்தபஞ் சாக்கரம்**
ஆலய மாக அமர்ந்தவித் தூலம்[2]போய்
ஆலய மாக [3]வறிகின்ற சூக்குமம்
ஆலய மாக அமர்ந்திருந் தானே. 6

920 இருந்தஇவ் வட்டம் இருமூன்றி ரேகை
இருந்த வதனுள் இரேகை யைந்தாக
இருந்த அறைகள் இருபத்தைஞ் சாக
இருந்த அறையொன்றில் எய்து மகாரமே. 7

921 மகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை
ஒகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி

---

**பா-ம்— [1]மைஞ்ஞான்குந். [2]பேர், போம். [3]வருகின்ற.**

அகாரந் தலையாய் இருகண் சிகாரமாய்
நகார வகாரநற் காலது நாடுமே. 8

922 நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடு[1]மவர்வாய் அமர்ந் தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநம சிவாய
வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே. 9

923 ஆயுஞ் சிவாய நமமசி வாயந
வாயு நமசிவா யயநம சிவாயந
வாயுமே வாய நமசியெனு மந்திர
மாயுஞ் சிகாரந் தொட்டந்தத் தடைவிலே. 10

924 அடைவினில் ஐம்பதும் ஐயைந் தறையின்
அடையும் அறையொன்றுக் கீரெழுத் தாக்கி
அடையு மகாரத்தில் அந்தமாம் க்ஷவ்வும்
அடைவின் எழுத்தைம்பத்தொன்றும்அமர்ந்ததே.

925 அமர்ந்த அரகர வாம்புற வட்டம்
அமர்ந்த அரிகரி யாமத னுள்வட்டம்
அமர்ந்த அசபை யாம்அத னுள்வட்டம்
அமர்ந்தஇ ரேகையும் ஆகின்ற சூலமே. 12

926 சூலத் தலையினில் தோற்றிடுஞ் சத்தியுஞ்
சூலத் [2]தலையினிற் சூழும்ஓங் காரத்தால்
சூலத் திடைவெளி தோற்றிடும் அஞ்செழுத்
தாலப் பதிக்கும் அடைவது வாமே. 13

927 அதுவாம் அகார இகார உகாரம்
அதுவாம் எகாரம் ஒகார [3]மதஞ்சாம்
அதுவாகுஞ் சக்கர வட்டமேல் வட்டம்
பொதுவாம் இடைவெளி பொங்குநம் பேரே. 14

---

பா-ம்— [1]*மலர்வாய்.* [2]*தடியினிற்.* [3]*மதைந்தாம்.*

928 பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது
சோர்வுற்ற சக்கர வட்டத்துட் சந்தியின்
நேர்பெற் றிருந்திட நின்றது சக்கரம்
ஏர்பெற் றிருந்த இயல்பிது வாமே. 15

929 இயலுமிம் மந்திரம் எய்தும் வழியின்
செயலும் அறியத் தெளிவிக்கு நாதன்
புயலும் புனலும் பொருந்தங்கி மண்விண்
முயலும் எழுத்துக்கு முன்னா இருந்ததே. 16

930 ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினாலும்
[1] ஏறிட் டதன்மேலே விந்துவும் நாதமுஞ்
சீறிட்டு நின்று சிவாய நமவென்னக்
கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப் போமே. 17

931 அண்ணல் இருப்ப தவளக் கரத்துளே
பெண்ணினல் லாளும் பிரானக் கரத்துளே
எண்ணி இருவர் இசைந்தங் கிருந்திடப்
புண்ணிய வாளர் பொருளறி வார்களே. 18

932 அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து
இவ்விட்டுப் பார்க்கில் இலிங்கம தாய்நிற்கும்
மவ்விட்டு மேலே வளியறக் கண்டபின்
தொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே. 19

933 அவ்வுண்டு சவ்வுண் டனைத்துமங் குள்ளது
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாரில்லை
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாளர்க்குச்
சவ்வுண்டு சத்தி சதாசிவன் தானே. 20

934 அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத் தாலே அமர்ந்தபஞ் சாக்கரம்

பா-ம்— [1] ஏறெட்டதின் மேலே.

அஞ்செழுத் தாகிய வக்கர சக்கரம்
அஞ்செழுத் துள்ளே அமர்ந்திருந் தானே. 21

935 கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற்
கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினேர்
கூத்தனொ டொன்றிய கொள்கைய ராய்நிற்பர்
கூத்தனைக் காணுங் குறியது வாமே. 22

936 அத்திசைக் குள்நின்ற அனலை எழுப்பியே
அத்திசைக் குள்நின்ற [1] நவ்வெழுத் தோதினல்
அத்திசைக் குள்நின்ற அந்த மறையனை
அத்திசைக் குள்ளுற வாக்கினன் தானே. 23

937 தானே யளித்திடுந் தையலை நோக்கினல்
தானே யளித்திட்டு மேலுற வைத்திடுந்
தானே யளித்த மகாரத்தை ஓதிடத்
தானே யளித்ததோர் கல்லொளி யாகுமே. 24

938 கல்லொளி யேயென நின்ற வடதிசை
கல்லொளி யேயென நின்றனன் இந்திரன்
கல்லொளி யேயென நின்ற சிகாரத்தைக்
கல்லொளி யேயெனக் [2] காட்டிநின் றானே 25

939 தானே யெழுகுணந் தண்சுட ராய்நிற்குந்
தானே யெழுகுணம் வேதமு மாய்நிற்குந்
தானே யெழுகுண மாவதும் ஓதிடில்
தானே யெழுந்த மறையவ னாமே. 26

940 மறையவ னாக மதித்த பிறவி
மறையவ னாக மதித்திடக் காண்பர்
மறையவன் அஞ்செழுத் துண்ணிற்கப் பெற்ற
மறையவன் அஞ்செழுத் [3] தாமது வாகுமே. 27

---

பா—ம்— [1] தவ்வெழுத். [2] காட்டினன் தானே, [3] தாமவர் தாமே.

941 ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சீயிரு தோள்வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற வச்சுட ரவ்வியல் பாமே. 28

942 அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையுஞ்
செவ்வியல் பாகச் சிறந்தனன் நந்தியும்
ஒவ்வியல் பாக ஒளியுற நோக்கிடிற்
பவ்வியல் பாகப் பரந்துநின் றானே. 29

943 பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்
வரந்தரு மந்திரம் வாய்த்திட வாங்கித்
துரந்திடு மந்திரஞ் சூழ்பகை போக
உரந்தரு மந்திரம் ஓமென் றெழுப்பே. 30

944 ஓமென் றெழுப்பித்தன் உத்தம நந்தியை
நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை
ஆமென் றெழுப்பியவ் வாறறி வார்கள்
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே. 31

945 ஆகின்ற சக்கரத் துள்ளே எழுத்தைந்தும்
பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கும்
ஆகின்ற ஐம்பத் தோரெழுத் துள்நிற்கப்
பாகொன்றி நிற்கும் பராபரன் தானே. 32

946 பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்
பரமாய நவசிம பார்க்கில் மவயநசி
பரமாய சியநம வாம்பரத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே. 33

947 நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தரு வண்ணமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தர நின்றிடில்
நின்ற எழுத்துள்ளும் நின்றனன் தானே. 34

948 நின்றது சக்கரம் நீளும் புவியெல்லாம்
மன்றது வாய்நின்ற மாயநன் னாடனைக்
கன்றது வாகக் கறந்தனன் நந்தியுங்
குன்றிடை நின்றிடுங் கொள்கைய னாமே. 35

949 கொண்டஇச் சக்கரத் துள்ளே குணம்பல
கொண்டஇச் சக்கரத் துள்ளே குறியைந்து
கொண்டஇச் சக்கரங் கூத்தன் எழுத்தைந்துங்
கொண்டஇச் சக்கரத் துள்நின்ற கூத்தே. 36

950 வெளியி லிரேகை யிரேகையி லத்தலை
சுளியில் உகாரமாஞ் சுற்றிய வன்னி
நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதந்
தெளியும் பிரகாரஞ் சிவமந் திரமே. 37

951 அகார வுகார சிகார நடுவாய்
வகாரமோ டாறும் வளியுடன் கூடிச்
சிகார முடனே சிவன்சிந்தை செய்ய
ஓகார முதல்வன் உவந்துநின் றானே. 38

952 அற்ற விடத்தே அகாரம தாவது
உற்ற விடத்தே யுறுபொருள் கண்டிடச்
செற்றம் அறுத்த செழுஞ்சுடர் மெய்ப்பொருள்
குற்றம் அறுத்த பொன்போலுங் குளிகையே. 39

953 அவ்வென்ற போதினில் உவ்வெழுத் தாலித்தால்
உவ்வென்ற முத்தி யுருகிக் கலந்திடும்
மவ்வென்றென் னுள்ளே வழிபட்ட நந்தியை
எவ்வணஞ் சொல்லுகேன் எந்தை இயற்கையே.

954 நீரில் எழுத்திவ் வுலக ரறிவது
வானில் எழுத்தொன்று கண்டறி வாரில்லை
யாரிவ் வெழுத்தை அறிவா ரவர்கள்
ஊனில் எழுத்தை உணர்கிலர் தாமே. 41

955 காலை நடுவுறக் காயத்தில் அக்கரம்
மாலை நடுவுற ஐம்பது மாவன
மேலை நடுவுற வேதம் விளம்பிய
மூலம் நடுவுற முத்திதந் தானே. 42

956 நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று
பாவிக ளத்தின் பயனறி வாரில்லை
ஓவிய ராலும் அறியவொண் ணாதது
தேவியுந் தானுந் திகழ்ந்திருந் தானே. 43

957 அவ்வொடு [1]சவ்வென்ற தரனுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனாதியு மாமே. 44

958 மந்திரம் ஒன்றுள் [2]மலரால் உதிப்பது
உந்தியி னுள்ளே உதயம்பண் ணிநிற்குஞ்
சந்திசெய் யாநிற்பர் தாம தறிகிலர்
[3]அந்தி தொழுதுபோ யார்த்தகன் றார்களே. 45

959 சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற
ஆவிக்குள் மந்திரம் ஆதார மாவன
பூவுக்குள் மந்திரம் போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் மந்திரம் அங்குச மாமே. 46

960 அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவாய்
உருவிட [4]ஆறு முறுமந் திரமே. 47

961 விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்

பா—ம்— [1]சவ்வென்றரனுற்ற. [2]மலராள். [3]நந்தி. [4]லாறு மூலமந்திரமே.

அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாமே.* 48

962 ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலர்
ஆறெழுத் தொன்றாக ஓதி உணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்கு
ஓரெழுத் தாலே உயிர்பெற லாமே. 49

963 ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைஞ்சும்
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தினில் ஐயிரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக்கொள் ளீரே. 50

964 விந்துவி லுஞ்சுழி நாதம் எழுந்திடப்
பந்தத் [1]தலைவி பதினாறு கலையதாய்க்
கந்தர வாகரங் காலுடம் பாயினுள்
அந்தமும் இன்றியே ஐம்பத்தொன் றாயதே. 51

965 ஐம்ப தெழுத்தே அனைத்தும்வே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போய் அஞ்செழுத் தாமே.** 52

966 அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே அமர்ந்துநின் றானே. 53

967 வீழ்ந்தெழ லாம்விகிர் தன்திரு நாமத்தைச்
சோர்ந்தொழி யாமல் தொடங்கும் ஒருவற்குச்
சார்ந்த வினைத்துயர் போகத் தலைவனும்
போந்திடும் என்னும் புரிசடை யோனே. 54

---

பா-ம்— [1] தலையிற். *இஃது 1971-ம் பாடலாகவும் வந்துள்ளது
**இஃது 2698-ம் பாடலாகவும் வந்துள்ளது.

968 உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்
விண்ணின் றமரர் விரும்பி அடிதொழ
எண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே. 55

969 ஐந்தின் பெருமையே அகலிட மாவதும்
ஐந்தின் பெருமையே ஆலய மாவதும்
ஐந்தின் பெருமையே யறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெயப் பாலனு மாமே. 56

970 வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்
நீரெழுத் தாய்நிலந் தாங்கியும் அங்குளன்
சீரெழுத் தாய்அங்கி யாயுயி ராமெழுத்
தோரெழுத் தீசனும் ஒண்சுட ராமே. 57

971 நாலாம் எழுத்தோசை [1]ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவிலவல் லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே. 58

972 இயைந்தனள் ஏந்திழை என்னுள மேவி
நயந்தன ளங்கே நமசிவ என்னும்
பயந்தனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனன் மற்றும் பிதற்றறுத் தேனே.* 59

973 ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினை
ஓமத்தி லேயுதம் பண்ணும் ஒருத்திதன்
நாம நமசிவ என்றிருப் பாருக்கு
[2]நேமத் தலைவி நிலவி [3]நின்றாளே.** 60

974 பட்ட பரிசே பரமஞ் செழுத்ததின்
இட்ட மறிந்திட் டிரவு பகல்வர

---

பா—ம்— [1]ஞாலமுழுவதும். [2]நேமித். [3]நின்றானே, *இஃது 1115—ம் பாடலாகவும் வந்துள்ளது. **இஃது 1213-ம் பாடலாகவும் வந்துள்ளது.

நட்டம தாடு நடுவே நிலயங்கொண்
டட்டதே சப்பொரு ளாகிநின் றானே. 61

975 அகாரம் உயிரே உகாரம் பரமே
மகார மலமாய் [1]வருமுப் பதத்திற்
சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமாய்
அகாரம் உயிரென் றறையலு மாமே.* 62

976 நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஓகார முதற்கொண் டொருக்கால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே. 63

977 அஞ்சுள வானை அடவியுள் வாழ்வன
அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன
அஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே
அஞ்சாதி யாதி அகம்புக லாமே. 64

978 ஐந்து கலையில் அகராதி தன்னிலே
வந்த நகராதி மாற்றி மகராதி
நந்தியை மூலத்தே நாடிப் பரையொடுஞ்
சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே. 65

979 மருவுஞ் [2]சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த [3]யோகமும் ஞானமு மாகுந்
தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே
அருள்தங்கி யச்சிவ மாவது வீடே. 66

980 அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்
நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சக மில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்ச மிதுவென்று சாற்றுகின் றேனே. 67

---

பா-ம்— [1]வருமுப்பத்தாறிற். [2]சிவாயவென, [3]போகமும்.

*இஃது 2503-ம் பாடலாகவும் வந்துள்ளது.

981 சிவாயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்
சிவாயவொ டவ்வே சிவனுரு வாகுஞ்
சிவாயவொ டவ்வுந் தெளியவல் லார்கள்
சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே. 68

982 சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஒகார முடனே ஒருகா [1]லுரைக்க
மகார முதல்வன் மதித்துநின் றானே. 69

983 நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகுஞ் சதாசிவந் தானே. 70

984 நவமுஞ் சிவமும் உயிர்பர மாகுந்
தவமொன் றிலாதன தத்துவ மாகுஞ்
சிவமொன்றி யாய்பவ ராதர வால்அச்
சிவமென்ப தானும் எனுந்தெளி வுற்றதே. 71

985 கூடிய எட்டும் இரண்டுங் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துள் ளேவைத்து
ஆடிய ஐவரும் அங்குற வாவர்கள்
[2]தேடி அதனைத் தெளிந்தறி யீரே. 72

986 எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே. 73

987 எட்டு வரையின் மேலெட்டு வரைகீறி
இட்ட நடுவுள் இறைவன் [3]எழுத்தொன்றில்

---

பா-ம்— [1]லுரைக்கும். [2]தேடிய தன்னைத். [3]எழுத்தாறில்.

வட்டத்தி லேயறை நாற்பத்தெட் டுமிட்டுச்
சிட்டஞ் செழுத்துஞ் [1]செபிசீக் கிரமே. 74

988 தானவர் சட்டர் சதிரர் இருவர்கள்
ஆனஇம் மூவரோ டாற்றவ ராதிகள்
ஏனைப் பதினைந்தும் விந்துவும் நாதமுஞ்
சேனையுஞ் செய்சிவ சக்கரந் தானே. 75

989 பட்டன மாதவ [2]மாறும் பராபரம்
விட்டனர் தம்மை விகிர்தா நமஎன்பர்
எட்டனை யாயினும் ஈசன் திறத்திறம்
ஒட்டுவன் பேசுவன் ஒன்றறி யேனே. 76

990 சிவன்முதல் மூவரோ டைவர் [3]சிறந்த
அவைமுதல்ஆறிரண் டொன்றொடொன்[4]றான
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதல் சங்கரன் தன்பெயர் தானே. 77

991 வித்தாஞ் செகமய மாக வரைகீறி
நத்தார் கலைகள் பதினாறு நாட்டிப்பின்
உத்தாரம் பன்னிரண் டாதி கலைதொகும்
பத்தாம் பிரம சடங்குபார்த் தோதிடே. 78

992 கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை
கொண்டெழுந் தேன்உடன் கூடிய காலத்துப்
பண்டழி யாத பதிவழி யேசென்று
நண்பழி யாமே நமவென லாமே. 79

993 புண்ணிய வானவர் பூமழை தூவிநின்(று)
எண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்
நண்ணுவர் நண்ணி நமஎன்று நாமத்தைக்
கண்ணென உன்னிக் கலந்துநின் றாரே. 80

---

பா-ம்— [1]செவிசக்கரமே. [2]மாற்றும். [3]சிறந்து: [4]றாகும்.

994 **ஆறெழுத் தாவ தாறு சமயங்கள்**
ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்
சாவித் திரியில் தலையெழுத் தொன்றுள
பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே. 81

995 எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே
கட்டிய ஒன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்
சுட்டி இவற்றைப் பிரணவஞ் சூழ்ந்திட்டு
மட்டும் உயிர்கட் குமாபதி யானுண்டே. 82

996 நம்முதல் அவ்வொடு நாவின ராகியே
அம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முத லாகவே உணர்பவர் உச்சிமேல்
உம்முத லாயவன் உற்றுநின் றானே. 83

997 நின்ற அரசம் பலகைமேல் நேராக
ஒன்றிட மவ்விட்டு ஓலையிற் சாதகந்
துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைத்
தன்ற வெதுப்பிடத் **தம்பனங்** காணுமே. 84

998 கரண விறளிப் பலகை யமன்றிசை
மரணமிட் டெட்டின் மகார வெழுத்திட்டு
வரணமி லிங்காயம் பூசி யடுப்பிடை
முரணிற் புதைத்திட **மோகன** மாகுமே. 85

999 ஆங்கு வடமேற்கில் ஐயனார் கோட்டத்திற்
பாங்கு படவே பலாசப் பலகையிற்
காங்கரு மேட்டிற் கடுப்பூசி விந்துவிட்(டு)
ஓங்காமல் வைத்திடும் **உச்சாட** னத்துக்கே. 86

1000 உச்சியம் போதில் ஒளிவன்னி மூலையிற்
பச்சோலை யிற்பஞ்ச காயத்தைப் பாரித்து

முச்சது ரத்தின் முதுகாட்டில் [1]வைத்திட
[2]அச்சமற மேலோர் மாரணம் வேண்டிலே. 87

1001 ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி
ஏய்ந்த வகாரம் உகாரம் எழுத்திட்டு
வாய்ந்ததோர் [3]வில்லம் பலகை வசியத்துக்
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே.88

1002 எண்ணாக் கருடனை ஏட்டின் [4]உகாரமிட்(டு)
எண்ணாப் [5]பொன்னொளி எழுவெள்ளி பூசிடா
வெண்ணாவற் பலகையி லிட்டுமேற் கேநோக்கி
எண்ணாவெழுத்தொடெண்ணாயிரம் வேண்டிலே.

---

## 3. அருச்சனை

1003 அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரந்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. 1

1004 சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கர்ப்பூரங் காரகிற்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்(து)
ஆங்கே அணிந்துநீர் அர்ச்சியும் அன்பொடே. 2

1005 அன்புட னேநின் றமுதமும் ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதொறுந்
துன்பம் அகற்றித் தொழுவோர் நினையுங்கால்
[6]இன்புட னேவந் தெய்திடும் முத்தியே. 3

1006 எய்தி வழிப்படில் எய்தா தனவில்லை
எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமுன்

---

பா-ம்— [1]வைத்திடு. [2]வைச்சபின். [3]வில்வப்பலகை, [4]அகாரமிட், யகாரமிட். [5]பொன்னுளில். [6]இன்பமுட னேவந்.

எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே. 4

1007 நண்ணும் பிறதார நீத்தார் அவித்தார்
மண்ணிய நைவேத் தியமனு சந்தான
நண்ணிய பஞ்சாங்க நண்ணுஞ் செபமென்னு
[1]மன்னு மனபவ னத்தொடு வைகுமே. 5

1008 வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர்
வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்மம் மிகுதியோ ராய்ந்தன்பே.

1009 அறிவரு ஞானத் தெவரும் அறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்கள்
நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்
எறிமணி யுள்ளே இருக்கலு மாமே. 7

1010 இருளும் வெளியும்போல் இரண்டாம் இதய
மருளறி யாமையும் மன்னு மறிவு
மருளிவை [2]விட்டறி யாமை மயங்கு
மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே. 8

1011 தானவ னாகி அவனேதா னயிட
ஆன இரண்டில் அறிவன் சிவமாகப்
போனவ னன்பிது நாலாம் மரபுறத்
தானவ னாகுமோ [3]ராசித்த தேவரே. 9

1012 ஓங்கார முந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா வகாரமும் நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் நகாரம் பயில்நெற்றி யுற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாதமே லாகுமே. 10

---

பா-ம்— [1]*மன்னு வனலத் தோடிவை; எண்ணும் பவனத் தோடிவை.* [2]*விட்டெறி.* [3]*ராதித்த.*

1013 நமவது வாசன மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவற வாதி நாடுவ தன்றுஞ்
சிவமாகு மாமோனஞ் சேர்தல்மெய் வீடே. 11

1014 தெளிவரு நாளிற் சிவஅமு தூறும்
ஒளிவரு நாளில் ஓரெட்டில் உகளும்
ஒளிவரும் அப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரு நாதன் வெளியாய் இருந்தே. 12

---

## 4. நவகுண்டம்

1015 நவகுண்ட மானவை நானுரை செய்யின்
நவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானும்
நவகுண்டத் துள்ளெழு நன்மைகள் எல்லாம்
நவகுண்ட மானவை நானுரைப் பேனே. 1

1016 உரைத்திடுங் குண்டத்தின் உள்ளேழுக் காலும்
நகைத்தெழு நாற்கோண நன்மைகள் ஐந்தும்
புகைத்திடு முப்புரம் பாரங்கி யோடே
[1]மிகைத்தெழு கண்டங்கள் மேலறி யோமே. 2

1017 மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள்
காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர்
பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது
நானறிந் துள்ளே நாடிக்கொண் டேனே. 3

1018 கொண்டஇக் குண்டத்தின் உள்ளெழு சோதியாய்
அண்டங்கள் ஈரேழு மாக்கி அழிக்கலாம்
பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலாம்
இன்றுசொல் நூலாய் எடுத்துரைத் தேனே. 4

---

பா—ம்— [1] *மிகைத்திடு குண்டங்கள்.*

1019 எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற்
பதித்த கலைகளும் பாலித்து நிற்குங்
கதித்தனல் உள்ளெழக் கண்டுகொள் வார்க்கே
கொதித்தெழும் வல்வினை கூடகி லாவே. 5

1020 கூடமுக் கூடத்தின் உள்ளெழு குண்டத்துள்
ஆடிய ஐந்தும் அகம்புறம் பாய்நிற்கும்
பாடிய பன்னீ ரிராசியும் அங்கெழ
நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே. 6

1021 நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங்
கைச்சுட ராகுங் கருத்துற்ற கைகளிற்
பைச்சுடர் மேனி பதைப்புற் றிலிங்கமும்
நற்சுட ராயெழு நல்லதென் றாளே. 7

1022 நல்லதென் றாளே நமக்குற்ற நாயகஞ்
சொல்லதென் றாளே சுடர்முடி பாதமா
மெல்லநின் றாளை வினவகில் லாதவர்
கல்லதன் றாளையுங் கற்றும்வின் னாளே. 8

1023 வின்னா விளம்பிறை மேவிய குண்டத்துச்
சொன்னால் இரண்டுஞ் சுடர்நாகந் திக்கெங்கும்
பன்னாலு நாகம் பரந்த பரஞ்சுடர்
என்னாகத் துள்ளே இடங்கொண்ட வாறே. 9

1024 இடங்கொண்ட பாதம் எழிற்சுட ரேக
நடங்கொண்ட பாதங்கள் [1]நண்ணீ ரதற்குச்
சகங்கொண்ட கையிரண் டாறுந் தழைப்ப
முகங்கொண்ட செஞ்சுடர் முக்கண ணார்க்கே. 10

1025 முக்கணன் றானே முழுச்சுட ராயவன்
அக்கணன் றானே அகிலமும் உண்டவன்

பா-ம்— [1]நன்னீ.

திக்கண ளுகித் [1]திகையெட்டுங் கண்டவன்
எக்கணன் ருனுக்கும் எந்தை பிரானே. 11

1026 எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலாற்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலான்
மைந்தன் இவனென்று மாட்டிக்கொள் வீரே. 12

1027 மாட்டிய குண்டத்தின் உள்ளெழு வேதத்துள்
ஆட்டிய காலொன்றும் இரண்டும் அலர்ந்திடும்
வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ
நாட்டுஞ் சுரரிவர் நல்லொளி தானே. 13

1028 நல்லொளி யாக நடந்துல கெங்குங்
கல்லொளி யாகக் கலந்துள் இருந்திடும்
சொல்லொளி யாகத் தொடர்ந்த உயிர்க்கெலாங்
கல்லொளி கண்ணுளு மாகி [2]நின்ருளே. 14

1029 நின்றஇக் குண்டம் நிலையாறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்தெழு மாருறுங்
கொண்டஇத் தத்துவம் [3]உள்ளே கலந்தெழ
விண்ணுளும் என்ன எடுக்கலு மாமே. 15

1030 எடுக்கின்ற பாதங்கண் மூன்ற தெழுத்தைக்
கடுத்த முகம்இரண் டாறுகண் ணகப்
படித்தெண்ணு நாவெழு கொம்பொரு நாலும்
அடுத்தெழு [4]கண்ணுன தந்தமி லாற்கே. 16

1031 அந்தமில் லானுக் ககலிடந் தானில்லை
அந்தமில் லானை அளப்பவர் தாமில்லை
அந்தமில் லானுக் கடுத்தசொற் ருனில்லை
அந்தமில் லானை அறிந்துகொள் பத்தே. 17

---

பா—ம்— [1] திசையெட்டுங். [2] நின்ருனே. [3] முன்னே. [4] கண்ணுன் அந்தமிலார்க்கே.

1032 பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு
மட்டிட்ட குண்டம் மலர்ந்தெழு தாமரை
கட்டிட்டு நின்று கலந்தமெய் யாகமும்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே. 18

1033 பார்ப்பதி பாகன் பரந்தகை நாலைஞ்சு
காற்பதி பத்து முகம்பத்துக் கண்களும்
பூப்பதி பாதம் இரண்டு சுடர்முடி
நாற்பது சோத்திரம் நல்லிரு பத்தஞ்சே. 19

1034 அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்
மஞ்சிட்ட குண்ட மலர்ந்தங் கிருத்தலால்
பஞ்சிட்ட சோதி பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதன் முத்தியே 20

1035 முத்திநற் சோதி முழுச்சுட ராயவன்
கற்றற்று நின்றார் கருத்துள் இருந்திடும்
பற்றற நாடிப் பரந்தொளி யூடுபோய்ச்
செற்றறற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே. 21

1036 சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமும்
ஆர்ந்த திசைகளும் அங்கே அமர்ந்திடும்
பாய்ந்தஐம் பூதமும் பார்க்கின்ற வன்னியைக்
காய்ந்தவர் என்றுங் கலந்தவர் தாமே. 22

1037 மெய்கண்ட மாம்விரி நீருல கேழையும்
உய்கண்டஞ் செய்த ஒருவனைச் சேருமின்
செய்கண்ட ஞானந் திருந்திய தேவர்கள்
பொய்கண்டம் இல்லாப் பொருள்கலந் தாரே. 23

1038 கலந்திரு பாதம் இருகர மாகு
மலர்ந்திரு குண்ட மகாரத்தோர் மூக்கு
மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் நெற்றி
உணர்ந்திரு குஞ்சியங் குத்தம னார்க்கே. 24

1039 உத்தமன் சோதி உளனொரு பாலனாய்
மத்திம னாகி மலர்ந்தங் கிருந்திடும்
பச்சிம திக்கும் பரந்து குழிந்தன
சத்திமா னாகத் தழைத்த கொடியே. 25

1040 கொடியாறு சென்று குலாவிய குண்டம்
[1]அடியிரு கோணமாய் அந்தமும் ஒக்கும்
படியே மூலகும் பரந்த சுடரை
மடியாது கண்டவர் மாதன மாமே. 26

1041 மாதன மாக வளர்கின்ற [2]வன்னியைச்
சாதன மாகச் சமைந்த குருவென்று
போதன மாகப் பொருந்த உலகாளும்
பாதன மாகப் பிரிந்தது பார்த்தே. 27

1042 பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை
ஆத்தம தாகவே யாய்ந்தறி வாரில்லை
காத்துட லுள்ளே கருதி இருந்தவர்
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே. 28

1043 உகங்கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க
அகங்கண்ட யோகியுள் நாடி எழுப்பும்
[3]பயங்கண்டு கொண்டஇப் பாய்கரு வொப்பச்
சகங்கண்டு கொண்டது சாதன மாமே. 29

1044 சாதனை நாலு தழல்மூன்று வில்வயம்
வேதனை வட்டம் விளையாறு பூநிலை
போதனை போதைஞ்சு பொற்கய வாரண
நாதனை நாடு நவகோடி தானே. 30

## 5. சத்திபேதம் – திரிபுரை சக்கரம்

1045 மாமாயை மாயை வயிந்தவம் வைகரி
ஓமாயை உள்ளொளி ஓராறு கோடியில்

பா-ம்— [1] அடியுரு. [2] கன்னியைச். [3] புகங்கண்டு.

தாமான மந்திரஞ் சத்திதன் மூர்த்திகள்
ஆமா யலவாந் திரிபுரை யாங்கே. 1

1046 திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி [1]யாம்பல வன்னத்தி
இருள்புரை ஈசி மனோன்மனி என்ன
வருபல வாய்நிற்கு மாமாது தானே. 2

1047 தாஞ அமைந்தவம் முப்புரந் தன்னிடைத்
தாஞன மூவுரு வோருருத் தன்மையள்
தாஞன பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி
தாஞன போகமும் முத்தியும் நல்குமே. 3

1048 நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்
பல்கும் பரவிந்து பாரண்ட மானவை
நல்கும் பரைஅபி ராமி அகோசரி
புல்கு மருளுமப் போதந்தந் தாளுமே. 4

1049 தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்
ஏரணி அங்குச பாசம் எழில்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே. 5

1050 குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்ட [2]வரத்த நிறமன்னு கோலத்தள்
கண்டிகை யாரங் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றாளே. 6

1051 நின்ற திரிபுரை நீளும் புராதனி
குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை
நன்றறி கண்டிகை நாற்காற் கரீடணி
துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே. 7

பா—ம்— [1]யாம்பால; யம்பல, [2]வரத்தள் நிறமன்னு.

1052 சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள்
வத்துவ மாயா ளுமாசத்தி மாபரை
அத்தகை [1]யாவும் அனோரணி தா னுமாய்
வைத்தவக் கோல மதியவ ளாகுமே. 8

1053 அவளை யறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை
அவளன்றி யூர்புகு மாறறி யேனே. 9

1054 அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பர்
அறிவா [2]ரருவுரு வாமவள் என்பர்
அறிவார் கரும மவளிச்சை என்பர்
அறிவார் பரனு மவளிடத் தானே. 10

1055 தானெங் குளனங் குளதையன் மாதேவி
ஊனெங் குளஅங் குள்ளுயிர்க் காவலன்
வானெங் குளஅங் குளேவந்து மப்பாலாம்
கோனெங்கும் நின்ற குறிபல பாரே. 11

1056 பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந்
தராசத்தி யாய்நின்ற தன்மை யுணராய்
உராசத்தி ஊழிகள் தோறும் உடனே
புராசத்தி புண்ணிய மாகிய போகமே. 12

1057 போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்
பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கும்
ஆகஞ்செய் தாங்கே அடியவர் நாடொறும்
பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. 13

1058 கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்

---

பா—ம்— [1]யான மனோரணி. [2]ரறிவுரு.

செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
[1]நம்பிஎன் உள்ளே நயந்துவைத் தேனே. 14

1059 வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்
பத்து முகமும் பரையும் பராபரைச்
சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திடுஞ்
சத்தியும் வித்தைத் தலையவ ளாமே. 15

1060 தலைவி தடமுலை மேல்நின்ற தையல்
தொலைவில் தவஞ்செயுந் தூய்நெறித் தோகை
கலைபல வென்றிடுங் கன்னியென் உள்ளம்
நிலைபெற இங்கே நிறைந்துநின் றாளே. 16

1061 நின்றவள் நேரிழை நீள்கலை யோடுற
என்றன் அகம்படிந் தேழுல குந்தொழ
மன்றது வொன்றி [2]மனோன்மனி மங்கலி
ஒன்றெனோ டொன்றிநின் றொத்தடைந் தாளே.

1062 ஒத்தடங் குங்கம லத்திடை யாயிழை
அத்தகை செய்கின்ற வாய பெரும்பதி
மத்தடை கின்ற மனோன்மனி மங்கலி
சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. 18

1063 உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி
மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்
புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்
கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே. 19

1064 அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போலுள்ளே நோக்கித்
தெளியுறு [3]வித்துச் சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை உய்யவுண் டாளே. 20

பா—ம்— [1]நம்பினேன். [2]மனோன்மணி. [3]சித்துக்.

1065 உண்டில்லை என்ற துருச்செய்து நின்றது
வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது
கண்டிலர் காரண காரணி தம்மொடு
மண்டல மூன்றுற மன்னிநின் றாளே. 21

1066 நின்றா ளவன்தன் உடலும் உயிருமாய்ச்
சென்றாள் சிவகதி சேரும் பராசத்தி
ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே
நின்றாள் பரஞ்சுடர் ஏடங்கை யாளே. 22

1067 ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை
பாடுந் திருமுறை பார்ப்பதி பாதங்கள்
சூடுமின்சென்னிவாய்த்தோத்திரஞ்சொல்லுமே.

1068 தோத்திரஞ் செய்து தொழுது துணையடி
வாய்த்திட ஏத்தி வழிபடு மாறிரும்
பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும்
பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே. 24

1069 ஆதி விதமிகுத் தண்டந்த மால்தங்கை
நீதி மலரின்மேல் நேரிழை நாமத்தைப்
பாதியில் வைத்துப் பல்காற் பயில்விரேல்
சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே. 25

1070 மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்
வேதாதி நூலின் விளங்கும் பராபரை
ஆதார மாகியே ஆய்ந்த பரப்பினள்
நாதாதி [1]நாதத்து நல்லரு ளாளே. 26

1071 அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர்
பொருள்பெற்ற சிந்தைப் புவனா பதியார்

---

பா-ம்— [1] நாதத்துள்.

மருளுற்ற சிந்தையை மாற்றி யருண்மைப்
பொருளுற்ற சேவடி போற்றுவன் [1]யானே. 27

1072 ஆன வராக முகத்தி பதத்தினள்
ஈன வராகம் இடிக்கும் முசலத்தோ(டு)
ஏனை யுழுபடை ஏந்திய வெண்ணகை
ஊனை மறவுணர்ந் தாருளத் தோங்குமே. 28

1073 ஓங்காரி என்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
[2]ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே. 29

1074 தானே தலைவி யெனநின்ற தற்பரை
தானே யுயிர்வித்துத் தந்த பதினாலும்
வானோர் [3]தலமும் மனமும்நற் புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே. 30

## 6. வயிரவி மந்திரம்*

1075 பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி
தன்னில் அகாரமு மாயையுங் கற்பித்துப்
பன்னிரண் டாதியோ டந்தம் பதினாலுஞ்
சொன்னிலை சோடச மந்தமென் றோதிடே. 1

1076 அந்தம் பதினாலும் அதுவே வயிரவி
முந்து நடுவும் முடிவும் முதலாகச்
சிந்தைக் கமலத் தெழுகின்ற மாசத்தி
அந்தமும் ஆதியு மாகிநின் றாளே. 2

1077 ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்
போகின்ற [4]பூதம் பொருந்து புராதரர்

பா-ம்— [1]நானே. [2]ஹ்ரீங்காரத். [3]தவமும். [4]போதம்.
*இஃது ஒரு பிரதியில் ஆதிவயிரவி மந்திரம் என்றுளது.

சார்கின்ற சார்வுழிச் சாரார் கதிர்பெறப்
போகுந் திரிபுரை புண்ணியத் தோரே. 3

1078 புண்ணிய நந்தி புனிதன் திருவாகும்
எண்ணிய நாட்கள் இருபத்தேழ் சூழ்மதி
பண்ணிய வன்னி பகலோன் மதியீறு
திண்ணிய சிந்தைதன் தென்னனு மாமே. 4

1079 தென்னன் திருநந்தி சேவகன் தன்னொடும்
பொன்னங் கிரியிற் பூதலம் போற்றிடும்
பன்னும் பரிபிடி யந்தம் பகவனோ(டு)
உன்னுந் திரிபுரை ஓதிநின் றானுக்கே. 5

1080 ஓதிய நந்தி உணருந் திருவருள்
நீதியில் வேத நெறிவந் துரைசெய்யும்
போதம் இருபத் தெழுநாள் புணர்மதி
சோதி வயிரவி சூலம்வந் தாளுமே. 6

1081 சூலங் கபாலங்கை ஏந்திய சூலிக்கு
நாலாங் கரமுள நாகபா சாங்குச
மாலங் கயனறி யாத வடிவுக்கு
மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே. 7

1082 மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி
சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை
கல்லியல் ஒப்பது காணுந் திருமேனி
பல்லிய லாடையும் பன்மணி தானே. 8

1083 பன்மணி சந்திர கோடி திருமுடி
சொன்மணி குண்டலக் காதி யுழைக்கண்ணி
நன்மணி சூரிய சோம நயனத்தள்
பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே. 9

1084 பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளேயோர்
ஆரியத் தாளுண்டங் கெண்மர் கன்னியர்

பாரித்த பெண்கள் அறுபத்து நால்வருஞ்
சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண் டாரே. 10

1085 கண்ட சிலம்பு வளைசங்கு சக்கரம்
எண்டிசை [1]யோகி இறைவி பராசத்தி
அண்டமோ டெண்டிசை தாங்கும் அருட்செல்வி
புண்டரி கத்தினுட் பூசனை யாளே. 11

1086 பூசனை கந்தம் புனைமலர் மாகோடி
யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும்
வாசமி லாத மணிமந் திரயோகந்
தேசந் திகழுந் திரிபுரை காணே. 12

1087 காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனும் மாயனுங்
காணுந் தலைவிநற் காரணி [2]காணே. 13

1088 [3]காரணி மந்திரம் ஓதுங் கமலத்துப்
பூரண கும்ப விரேசம் பொருந்திய
நாரணி நந்தி நடுவங் குரைசெய்த
ஆரண வேதநூல் அந்தமு மாமே. 14

1089 அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்
வந்த வழிமுறை மாறி யுரைசெய்யுஞ்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடு
நந்தி இதனை நவமுரைத் தானே. 15

1090 உரைத்த நவசத்தி ஒன்று முடிய
நிரைத்த விராசி நெடுமுறை எண்ணிப்
பிரைச்சதம் எட்டுமுன் பேசிய நந்தி
நிரைத்து நியதி நியமஞ்செய் தானே. 16

---

பா—ம்— [1]மேலாகி; மோகி. [2]தானே. [3]காரண.

1091 தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற
வேமத் திருளற வீசும் இளங்கொடி
ஓமப் பெருஞ்சுடர் உள்ளெழு நுண்புகை
மேவித் தழுதொடு மீண்டது காணே. 17

1092 காணும் இருதய மந்திர முங்கண்டு
பேணு நமவென்று பேசுந் தலைமேலே
வேணு நடுவு மிகநின்ற வாகுதி
பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே. 18

1093 சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதிப்
பகைநின்ற வங்கத்தைப் பாரென்று மாறித்
தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம்
வகைநின்ற யோனி வருத்தலு மாமே. 19

1094 வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்
பொருத்தி அணிவிரற் சுட்டிப் பிடித்து
நெரித்தொன்ற வைத்து நெடிது நடுவே
பெருத்த விரலிரண் டுள்புக்குப் பேசே. 20

1095 பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை
கூசமி லாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன்கொண்டு கூவே. 21

1096 கூவிய சீவன் பிராணன் முதலாகப்
பாவிய சவ்வுடன் பண்ணும் யகாரத்தை
மேவிய மாயை [1]விரிசங்கு முத்திரை
தேவி நடுவுள் திகழ்ந்துநின் றாளே. 22

1097 நின்ற வயிரவி நீலி நிசாசரி
ஒன்றும் இரண்டும் ஒருங்கிய உள்ளத்துச்

பா-ம்— [1]வரிசங்கு.

சென்றருள் நாயகி தேவர் பிரானுக்கே
நன்றருள் ஞாலத்து நாடிடுஞ் சாற்றியே. 23

1098 சாற்றிய வேதஞ் சராசரம் ஐம்பூதம்
நாற்றிசை முக்கண்ணி நாடும் இருள்வெளி
தோற்றும் உயிர்ப்பன்மை சோதி பராபரை
ஆற்றலொ டாய்நிற்கும் ஆதி முதல்வியே. 24

1099 ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி யுணரில் உடலுயிர் ஈசனும்
பேதை உலகிற் பிறவிகள் நாசமாம்
ஓத வுலவாத கோலமொன் றுகுமே. 25

1100 கோலக் குழலி குலாய புருவத்தள்
நீலக் குவளை மலரன்ன கண்ணினள்
ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி
மேலைச் சிவத்தை வெளிப்படுத் தாளே. 26

1101 வெளிப்படு வித்து விளைவறி வித்துத்
தெளிப்படு வித்தென் சிந்தையி னுள்ளே
களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதி
ஒளிப்படு-வித்தென்னை உய்யக்கொண் டாளே. 27

1102 கொண்டனள் கோலங் கோடி அநேகங்கள்
கண்டனள் எண்ணெண் கலையின்கண் மாலைகள்
விண்டனள் மேலை விரிகதிர் மூன்றையுந்
தண்டலை மேல்நின்ற தையல்நல் லாளே. 28

1103 தையல்நல் லாளைத் தவத்தின் தலைவியை
மையலை நோக்கும் மனோன்மனி மங்கையைப்
பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்
வெய்ய பவமினி மேவகி லாவே. 29

1104 வேயன தோளி விரையுறு மென்மலர்
ஏய குழலி இளம்பிறை ஏந்திழை

தூய சடைமுடிச் சூலினி சுந்தரி
ஏயென துள்ளத் தினிதிருந் தாளே. 30

1105 இனியதென் மூலை இருக்குங் குமரி
தனியொரு நாயகி தானே தலைவி
தனிப்படு வித்தனள் சார்வு படுத்து
நனிப்படு வித்துள்ளம் நாடிநின் றாளே. 31

1106 [1]நாடிகள் மூன்று நடுவெழு ஞாளத்துக்
கூடி இருந்த குமரி குலக்கன்னி
பாடகச் சீறடிப் பைம்பொற் சிலம்பொலி
ஊடக மேவி உறங்குகின் றாளே. 32

1107 உறங்கு மளவின் மனோன்மணி வந்து
கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப்
பிறங்கொளித் தம்பலம் வாயில் உமிழ்ந்திட்
டுறங்கலை யாவென் றுபாயஞ்செய் தாளே. 33

1108 உபாயம் அளிக்கும் ஒருத்தியென் உள்ளத்
தபாயம் அறக்கெடுத் தன்பு விளைத்துச்
சுவாவை விளக்குஞ் சுழியகத் துள்ளே
அவாவை அடக்கிவைத் தஞ்சலென் றாளே. 34

1109 அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை
செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை
தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்
கின்சொல் அளிக்கும் இறைவியென் றாரே. 35

1110 ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை
காரியல் கோதையள் காரணி நாரணி
ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடுங்
கோரியென் உள்ளங் குலாவிநின் றாளே. 36

பா-ம்— [1]நாடிய கண்மூன்று நடுவெழு ஞானத்துக்.

1111 குலாவிய கோலக் குமரியென் னுள்ளம்
நிலாவி இருந்து நெடுநாள் அணைந்தும்
உலாவி யிருந்துணர்ந் துச்சியி னுள்ளே
கலாவி யிருந்த கலைத்தலை யாளே. 37

1112 கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கண்ணுள்
முலைத்தலை மங்கை முயங்கி இருக்குஞ்
சிலைத்தலை யாய தெரிவினை நோக்கி
அலைத்தபூங் கொம்பினள் அங்கிருந் தாளே. 38

1113 இருந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவிப்
[1]பொருந்திய நால்விரல் புக்கனள் புல்லித்
திருந்திய தாணுவிற் சேர்த்துடன் ஒன்றி
அருந்தவ மெய்தினள் ஆதியி னாளே. 39

1114 ஆதி யனாதி யகாரணி காரணி
சோதிய சோதி சுகபர சுந்தரி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
ஓதியென் னுள்ளத் துடனியைந் தாளே. 40

1115 இயைந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவி
நயந்தனள் அங்கே நமசிவ என்னும்
அயன்தனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனள் மற்றும் பிதற்றறுத் தாளே. 41

1116 பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்
முயற்றியின் முத்தி அருளும் முதல்வி
கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்
முகத்தருள் நோக்கமும் முன்னுள்ள தாமே. 42

1117 உள்ளத் திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள்
பிள்ளைத் தடமுள்ளே பேசப் பிறந்தது

பா-ம்— [1]பொருந்திரு.

[1]வள்ளற் றிருவின் வயிற்றினுள் மாமாயைக்
கள்ள ஒளியின் கருத்தாகுங் கன்னியே. 43

1118 கன்னியுங் கன்னி அழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றனள் தாய்மொழி
பன்னிய நன்னூற் பகவரும் அங்குள
என்னேஇம் மாயை இருளது தானே. 44

1119 இருளது சத்தி வெளியதெம் அண்ணல்
பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம்
தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணில்
அருளது செய்யும்எம் ஆதிப் பிரானே. 45

1120 ஆதி அனாதியும் ஆய பராசத்தி
பாதி பராபரை மேலுறை பைந்தொடி
மாது சமாதி மனோன்மணி மங்கலி
ஓதுமென் னுள்ளத் துடன்முகிழ்த் தாளே. 46

1121 ஓதிய வண்ணங் கலையின் உயர்கலை
ஆதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமுந் தத்துவ மாய்நிற்பள்
ஆதியென் றோதினள் ஆவின் கிழத்தியே. 47

1122 ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடுந்
தேவின் கிழத்தி திருவாஞ் [2]சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. 48

1123 வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்
தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்பள்
எனையடி மைக்கொண்ட ஏந்திழை ஈசன்
கணவனைக் காண அனாதியு மாமே. 49

பா-ம்— [1]வள்ளத் திருவினை. [2]சியமங்கை.

1124 ஆதி அனாதி [1]அகாரணி காரணி
வேதம தாய்ந்தனள் வேதியர்க் காய்நின்ற
[2]சோதி தனிச்சுடர் சொரூப மாய்நிற்கும்
பாதி பராபரை பன்னிரண் டாதியே. 50

---

## 7. பூரண சத்தி

1125 அளந்தேன் அகலிடத் தந்தமும் [3]ஈறும்
அளந்தேன் அகலிடத் தாதிப் பிரானை
அளந்தேன் அகலிடத் தாளொடு பெண்ணும்
அளந்தேன் அவனருள் ஆய்ந்துணர்ந் தேனே. 1

1126 [4]உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி
புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்
கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி
கொணர்ந்த வழிகொண்டு கும்பக மாமே. 2

1127 கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும்
வம்பில் திகழும் மணிமுடி வண்ணனும்
இன்பக் கலவி இனிதுறை தையலும்
அன்பிற் கலவியு ளாயொழிந் தாரே. 3

1128 இன்பக் கலவியில் இட்டெழு கின்றதோர்
அன்பிற் புகவல்ல னும்எங்கள் அப்பனுந்
துன்பக் குழம்பில் துயருறும் பாசத்துள்
என்பிற் பராசத்தி என்னம்மை தானே. 4

1129 என்னம்மை என்னப்பன் என்னுஞ் செருக்கற்று
உன்னம்மை ஊழித் தலைவனும் அங்குளன்
மன்னம்மை யாகி மருவி யுரைசெய்யும்
பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே. 5

---

பா—ம்— [1]அகாரண. [2]சோதி சகளச் சுடருருவாய் நிற்கும்.
[3]ஆதியும். [4]உணர்ந்தில தீசனை.

1130 தார்மேல் உறைகின்ற தண்மலர் நான்முகன்
பார்மேல் இருப்ப தொருநூறு தானுள
பூமேல் உறைகின்ற போதகம் வந்தனள்
நாமேல் உறைகின்ற நாயகி ஆணையே. 6

1131 ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்
மாணைய மாய் மனத்தை ஒருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை அறிந்தபின்
[1] தாணைய மாய தனுதனன் தானே. 7

1132 தானே எழுந்தஇத் தத்துவ நாயகி
வானோர் எழுந்து மதியை விளக்கினள்
தேனேர் எழுகின்ற தீபத் தொளியுடன்
மானே நடமுடை மன்றறி யீரே. 8

1133 அறிவான [2] மாயையும் ஐம்புலக் கூட்டத்
தறிவான மங்கை அருளது சேரிற்
பிறியா அறிவறி வாருளம் பேணு
நெறியாய சித்த நினைந்திருந் தாளே. 9

1134 இரவும் பகலும் இலாத விடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
அரவஞ்செய் யாமல் அருளுடன் தூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே.[3] 10

1135 பாலனு மாகும் பராசத்தி தன்னொடு
மேலனு காவிந்து நாதங்கள் விட்டிட
மூலமு தாமெனும் முத்திக்கு நேர்படச்
சாலவு மாய்நின்ற தற்பரத் தாளே. 11

1136 நின்ற பராசத்தி நீள்பரன் தன்னொடு
நின்றறி ஞானமும் இச்சையு மாய்நிற்கும்

பா—ம்— [1] தாணைய். [2] மாயை ஐம்புலக். [3] இஃது 1528-ம் பாடலாகவும் வந்துள்ளது.

நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே
மன்றன வற்றுள் மருவிடுந் தானே. 12

1137 மருவொத்த மங்கையுந் தானும் உடனே
உருவொத்து நின்றமை ஒன்றும் [1]உணரார்
கருவொத்து நின்று [2]கலக்கின போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே. 13

1138 சிந்தையின் உள்ளே திரியுஞ் சிவசத்தி
விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்
[3]சந்திர பூமி சடாதரி சாத்தவி
அந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே. 14

1139 ஆறி யிருந்த அமுத பயோதரி
மாறி யிருந்த வழியறி வாரில்லை
தேறி யிருந்துநல் தீபத் தொளியுடன்
ஊறி யிருந்தனள் உள்ளுடை யார்க்கே. 15

1140 உடையவன் அங்கி உருத்திர சோதி
விடையவன் ஏறி விளங்கி யிருக்குங்
கடையவர் போயிடுங் கண்டவர் நெஞ்சத்
தடையது வாகிய சாதகர் தாமே. 16

1141 தாமேல் உறைவிடம் ஆறித மானது
பார்மேல் இதழ்பதி னெட்டிரு நூறுள
பூமேல் உறைகின்ற புண்ணியம் வந்தனள்
பார்மேல் உறைகின்ற பைந்தொடி யாளே. 17

1142 பைந்தொடி யாளும் பரம னிருந்திடத்
திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலாற்
பெண்கொடி யாக நடந்த துலகே. 18

---

பா-ம்— [1]உணராத். [2]கலக்கின்ற. [3]சந்திரப் பூவி.

1143 நடந்தது வம்மலர் நாலுடன் அஞ்சாய்
இருந்தனர் கன்னிகள் எட்டுடன் ஒன்றாய்ப்
படர்ந்தது [1] தன்வழி பங்கயத் துள்ளே
தொடர்ந்தது உள்வழிச் சோதி யடுத்தே. 91

1144 அடுக்குந் தாமரை ஆதி இருப்பிடம்
எடுக்குந் தாமரை இல்லகத் துள்ளது
மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல
முடுக்குந் தாமரை முச்சது ரத்தே. 20

1145 முச்சது ரத்தே எழுந்த முளைச்சுடர்
எச்சது ரத்தும் இடம்பெற ஓடிடக்
கைச்சது ரத்துக் கடந்துள் ஒளிபெற
எச்சது ரத்தும் இருந்தனள் தானே. 21

1146 இருந்தனள் தன்முகம் ஆறொடு நாலாய்ப்
பரந்தன வாயு திசைதிசை தோறுங்
குவிந்தன முத்தின் முகவொளி நோக்கி
நடந்தது தேறல் அதோமுகம் அம்பே. 22

1147 அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மணி
கொம்பன்ன நுண்ணிடை கோதை குலாவிய
செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடோறும்
நம்பனை நோக்கி நவிலுகின் றாளே. 23

1148 நவிலும் பெருந்தெய்வம் நான்மறைச் சத்தி
துகிலுடை யாடை நிலம்பொதி பாதம்
அகிலமும் அண்ட முழுதுஞ்செம் மாந்து
புகலுமுச் சோதி புனையநிற் பாளே. 24

1149 புனையவல் லாள்புவ னத்திறை எங்கள்
வனையவல் லாள்அண்ட கோடிகள் உள்ளே

பா—ம்— [1] தண்வழிப்,

புனையவல் லாள்மண்ட லத்தொளி தன்னைப்
புனையவல் லானையும் போற்றியென் பேனே. 25

1150 போற்றியென் பேன்புவ னாபதி அம்மையென்
ஆற்றலுள் நிற்கும் அருந்தவப் பெண்பிள்ளை
சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை
கூற்றந் துரக்கின்ற கொள்கைந் தொடியே. 26

1151 தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி
வடிவார் திரிபுரை யாமங்கை சங்கைச்
செடியார் வினைகெடச் சேர்வரை என்றென்
அடியார் வினைகெடுத் தாதியு மாமே. 27

1152 மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி
பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி
புல்லிசைப் பாவையைப் போகத் துரந்திட்டு
வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே. 28

1153 தாவித் தவப்பொருள் தானவன் எம்மிறை
பாவித் துலகம் படைக்கின்ற காலத்து
மேவிப் பராசத்தி மேலொடு கீழ்தொடர்ந்
தாவிக்கு மப்பொருள் தானது தானே. 29

1154 அதுவிது என்பார் அவனை அறியார்
கதிவர நின்றதோர் காரணங் காணார்
மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை
இதமது உன்னார்கள் தேர்ந்தறி யாரே. 30

## 8. ஆதாரவாதேயம்

1155 நாவிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு
தானித ழானவை நாற்பத்து நாலுள
பாவித [1]ழானவள் பங்கய மூலமாய்த்
தானித ழாகித் தரித்திருந் தாளே. 1

பா-ம்— [1] ழானஅப்.

1156 தரித்திருந் தாளவள் தன்னொளி நோக்கி
விரித்திருந் தாளவள் வேதப் பொருளைக்
குறித்திருந் தாளவள் கூறிய ஐந்து
மறித்திருந் தாளவள் மாதுநல் லாளே. 2

1157 மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்
பாதிநல் லாளும் [1]பகவனு மானது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. 3

1158 வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க்
கள்ளடை யாரக் கமழ்குழ லார்மன
மள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற
பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே. 4

1159 பெண்ணொருபெண்ணைப்புணர்ந்திடும்பேதைமை
பெண்ணிடை ஆணும் பிறந்து கிடந்தது
பெண்ணுடை ஆணென் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே. 5

1160 பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை
மாச்சற்ற சோதி மனோன்மனி மங்கையாங்
காச்சற்ற [2]சோதி கடவு ளுடன் புணர்ந்
[3]தாச்சற்றெ றனுட்புகுந் தாலிக்குந் தானே. 6

1161 ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மனி
பாலித் துலகிற் [4]பரந்துபெண் ணாகும்
வேலைத் தலைவியை வேத [5]முதல்வியை
ஆலித் தொருவன் உகந்துநின் றானே. 7

1162 உகந்துநின் றான்நம்பி ஒண்ணுதற் கண்ணோ
டுகந்துநின் றான்நம் முழைபுக நோக்கி

---

பா-ம்— [1]பகவரு. [2]சோதிக் கடவு. [3]தாச்சென்றனுட்.
[4]பரந்து பெண் ணாகும். [5]முதல்வியைப், பாலித்.

உகந்துநின் றான்இவ் உலகங்கள் எல்லாம்
உகந்துநின் றான்அவ டன்றோ டொகுந்தே. 8

1163 குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்
துத்தி விரிந்த சுணங்கினள் தூமொழி
புத்தகச் சீறடிப் பாவை [1]புணர்வினைத்
தொத்த [2]கருத்துச் சொல்லகி லேனே. 9

1164 சொல்லவொண் ணாத அழற்பொதி மண்டலஞ்
செல்லவொண் ணாது திகைத்தங் கிருப்பர்கள்
வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி
மல்லவொண் ணாத மனோன்மனி தானே. 10

1165 தானே இருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே வடவரைத் தண்கடற் கண்ணே.* 11

1166 கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்
மண்ணுடை யாரை மனித்தரிற் கூட்டொணாப்
பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்
விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. 12

1167 கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி
பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்
விண்டெண் டிசையும் விரைமலர் கைக்கொண்டு
தொண்டெண் டிசையுந் தொழுநின்ற கன்னியே.

1168 கன்னி ஒளியென நின்றவிச் சந்திரன்
மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறஞ்
சென்னி யிருப்பிடஞ் சேர்பதி னாறுடன்
பன்னி யிருப்பப் பராசத்தி யாமே. 14

பா-ம்— [1]புணர்வினைத். [2]கருத்தது. *இத்துடன் 10-ம் பாடலை ஒப்பிட்டு நோக்குக.

1169 பராசத்தி யென்றென்று பல்வகை யாலுந்
தராசத்தி யான தலைப்பிர மாணி
இராசத்தி யாமள வாகமத் தாளாகுங்
குராசத்தி கோலம் பலவுணர்ந் தேனே. 15

1170 உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி
உணர்ந்துயி ராய்நிற்கும் உன்னதன் ஈசன்
புணர்ந்தொரு காலத்துப் [1]போகம தாதி
இணைந்து பரமென் றிசைந்திது தானே. 16

1171 இதுவப் பெருந்தகை எம்பெரு மானும்
பொதுவக் [2]கல்வியும் [3]போகமு மாகி
மதுவக் குழலி மனோன்மனி மங்கை
அதுவக் [4]கல்வியுள் ஆயுழி யோகமே. 17

1172 யோகநற் சத்தி ஒளிபீடந் தானாகும்
யோகநற் சத்தி ஒளிமுகந் தெற்காகும்
யோகநற் சத்தி உதர நடுவாகும்
யோகநற் சத்திதாள் உத்தரந் தேரே. 18

1173 தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற
வார்ந்தெழு மாயையும் மந்தம தாய்நிற்கும்
ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிடக்
கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே. 19

1174 தானான வாறெட்ட தாம்பரைக் குண்மிசை
தானான வாறுமீ ரேழுஞ் [5]சமகலை
தானான விந்து சகமே பரமெனுந்
தானும் பரவா தனையெனத் தக்கதே. 20

1175 தக்க பராவித்தை தானிரு பானேழிற்
றக்கெழு மோருத் திரஞ்சொல்லச் சொல்லவே

---

பா-ம்— [1]போதம தாகி. [2]கலவியும். [3]போதமு. [4]கலவியுள். [5]சமைகலை.

மிக்கிடும் எண்சத்தி வெண்ணிற முக்கண்ணி
[1]தொக்க கதையோடு [2]தொன்முத்திரை யாளே.

1176 முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தள்
[3]தத்துவ மாயல்ல வாய சகலத்தள்
வைத்த பராபர னுய பராபரை
சத்தியு மானந்த சத்தியுங் கொங்கே. 22

1177 [4]கொங்கின்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி
பொங்கிய குங்குமத் [5]தொளிபொ ருந்தினள்
அங்குச பாச மெனுமகி லங்கனி
தங்கு மவள்மனே தானறி வாயே. 23

1178 வாயு மனமுங் கடந்த மனோன்மனி
பேயுங் கணமும் [6]பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் [7]அறிவுங் கடந்த அரனுக்குத்
தாயும் மகளுநல் தாரமு மாமே. 24

1179 தாரமு மாகுவள் தத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகுங் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடை யாளே. 25

1180 பத்து முகமுடை யாள்நம் பராசத்தி
வைத்தனள் ஆறங்க நாலுடன் மூன்வேதம்
ஒத்தனள் ஆதாரம் ஒன்றுடன் ஓங்கியே
நித்தமாய் நின்றளெம் நேரிழை கூறே. 26

1181 [8]கூறிய கன்னி குலாய புருவத்தள்
[9]சீரிய ளாயுல கேழுந் திகழ்ந்தவள்

---

பா-ம்— [1]தொக்கத்தையோடு. [2]தோள்முத்திரை. [3]அத்துவ. [4]கொங்கின்ற. [5]தோளி புரந்தனள். [6]பிறந்திட்ட. [7]அறிவைக். [8]கூறியல் கன்னி. [9]சீரியு.

ஆரிய நங்கை யமுத பயோதரி
பேருயி ராளி பிறிவறுத் தாளே. 27

1182 பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளே. 28

1183 உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங்
கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்
கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து
வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே. 29

1184 புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி
இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்
பொருந்தி யிருந்த புதல்வி பூவண்ணத்
திருந்த விலக்கில் இனிதிருந் தாளே. 30

1185 இருந்தனள் ஏந்திழை என்னுள மேவித்
திருந்து புணர்ச்சியில் தேர்ந்துணர்ந் துன்னி
நிரந்தர மாகிய நிரதி சயமொடு
பொருந்த விலக்கிற் புணர்ச்சி அதுவே. 31

1186 அதுஇது என்னும் அவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகும்
மதிமல ராள்சொன்ன மண்டல மூன்றே. 32

1187 மூன்றுள மண்டல மோகினி சேர்விடம்
ஏன்றுள ஈரா றெழுகலை உச்சியில்
தோன்று மிலக்குற லாகுதல் மாமாயை
ஏன்றனள் ஏழிரண் டிந்துவொ டன்றே. 33

1188 இந்துவி னின்றெழு நாதம் இரவிபோல்
வந்துபின் நாக்கின் மதித்தெழுங் கண்டத்தில்

உந்திய சோதி இதயத் தெழும்ஒலி
இந்துவின் மேலுற்ற ஈறது தானே. 34

1189 ஈறது தான்முதல் எண்ணிரண் டாயிர
மாறுதல் இன்றி மனோவச மாயெழில்
தூறது செய்யுஞ் சுகந்தச் சுழியது
பேறது செய்து பிறந்திருந் தாளே. 35

1190 இருந்தனள் ஏந்திழை ஈறதி லாகத்
திருந்திய ஆனந்தஞ் செந்நெறி நண்ணிப்
பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி
வருந்த இருந்தனள் மங்கைநல் லாளே. 36

1191 மங்கையும் மாரனுந் தம்மொடு கூடிநின்
றங்குலி [1]கூட்டி அகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல் லாளுங் குமாரர்கள் ஐவரும்
தங்களின் மேவிச் சடங்குசெய் தாரே. 37

1192 சடங்கது செய்து தவம்புரி வார்கள்
கடந்தனி னுள்ளே கருதுவ ராகில்
தொடர்ந்தெழு சோதி துளைவழி ஏறி
அடங்கிடும் அன்பின தாயிழை பாலே. 38

1193 பாலித் திருக்கும் பனிமல ராறினும்
ஆலித் திருக்கும் அவற்றின் அகம்படி
சீலத்தை [2]நீக்கத் திகழ்ந்தெழு மந்திர
மூலத்து மேலது முத்தது வாமே. 39

1194 முத்து [3]வதனத்தி முகந்தொறு முக்கண்ணி
சத்தி சதிரி சகளி சடாதரி
பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி
வித்தகி என்னுள்ள மேவிநின் றாளே. 40

---

பா-ம்— [1]கூடி யகப்புறம். [2]நோக்கித். [3]வனத்தி.

1195 மேவிய மண்டலம் மூன்றுடன் கீழெரி
தாவிய நற்பதத் தண்மதி யங்கதிர்
மூவருங் கூடி முதல்வியாய் முன்னிற்பார்
ஓவினு மேலிடும் உள்ளொளி யாமே. 41

1196 உள்ளொளி மூவிரண் டோங்கிய அங்கங்கள்
வெள்ளொளி அங்கியின் மேவி அவரொடுங்
கள்ளவிழ் [1]கோதைக் கலந்துட னேநிற்குங்
கொள்ள விசுத்திக் கொடியமு தாமே. 42

1197 கொடிய திரேகை குருவுள் இருப்பப்
படியது வாருனைப் பைங்கழ லீசன்
வடிவது வானந்தம் வந்து முறையே
இடுமுதல் ஆறங்கம் ஏந்திழை யாளே. 43

1198 ஏந்திழை யாளும் இறைவர்கள் மூவருங்
காந்தார மாறுங் கலைமுதல் ஈரெட்டு
மாந்த குளத்தியு மந்திர ராயவுஞ்
சார்ந்தனர் ஏத்த இருந்தனள் சத்தியே. 44

1199 சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே. 45

1200 ஆரே [2]திருவின் திருவடி காண்பர்கள்
நேரேநின் றோதி [3]நினையவும்வல் லார்க்குக்
காரேர் குழலி கமல மலரன்ன
சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே. 46

1201 சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து
முந்தையில் வைத்துத் தம்மூலத்திலே வைத்து

---

பா-ம்— [1]கோனைக். [2]குருவின். [3]நினைய.

நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச்
சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே. 47

1202 சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச்
சிவாதியி லாருஞ் சிலைநுத லாளை
நவாதியி லாக நயந்தது ஓதில்
உவாதி அவளுக் குறைவில தாமே. 48

1203 உறைபதி தோறும் முறைமுறை மேவி
நறைகமழ் கோதையை நாடொறு நண்ணி
மறையுட னேநிற்கு மற்றுள்ள நான்கும்
[1]இறைதினைப் போதினில் எய்திட லாமே. 49

1204 எய்திட லாகும் இருவினை யின்பயன்
கொய்தளிர் மேனிக் குமரி குலாங்கன்னி
மைதவழ் கண்ணிநன் [2]மாதுரி கையொடு
கைதவம் இன்றிக் கருத்துறும் வாறே. 50

1205 கருத்துறுங் காலங் கருது மனமுந்
திருத்தி யிருந்தவை சேரு நிலத்து
ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மண்மேல்
இருத்திடும் எண்குணம் எய்தலும் ஆகுமே. 51

1206 ஆமையொன் றேறி அகம்படி யானென
ஓமஎன் றோதிஎம் உள்ளொளி யாய்நிற்கும்
தாம நறுங்குழல் தையலைக் கண்டபின்
சோம நறுமலர் சூடிநின் றாளே. 52

1207 சூடிடும் அங்குச [3]பாசத் துளைவழி
கூடும் இருவளைக் கோலக்கைக் குண்டிகை
நாடும் இருபத நன்னெடு ருத்திரம்
ஆடிடுஞ் சீர்புனை ஆடக மாமே. 53

பா-ம்— [1]இறைதனைப் போற்றிடில். [2]மாரிதுர்க் கையொடு. [3]பாசந்துணைவழி.

1208 ஆமயன் மாலரன் ஈசன் சதாசிவன்
தாமடி சூடிநின் றெய்தினர் தம்பதங்
காமனுஞ் சாமன் இரவி கனலுடன்
சோமனும் வந்தடி [1]சூடநின் றாளே. 54

1209 சூடும் இளம்பிறை சூலி கபாலினி
நீடும் இளங்கொடி நின்மலி நேரிழை
நாடி நடுவிடை ஞான முருவநின்
றாடு மதன்வழி அண்ட முதல்வியே. 55

1210 அண்ட முதலாய் அவனி பரியந்தங்
கண்டதொன் றில்லைக் கனங்குழை யல்லது
கண்டனுங் கண்டியு மாகிய காரணங்
குண்டிகை கோளிகை கண்டத னாலே. 56

1211 ஆலமுண் டானமு தாங்கவர் தம்பதஞ்
சாலவந் தெய்துந் தவத்தின்பந் தான்வருங்
கோலிவந் தெய்துங் குவிந்த பதவையோ
டேலவந் தீண்டி இருந்தனள் மேலே. 57

1212 மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்
காலால் வருந்திக் கழிவர் கணத்திடை
நாலா நளினநின் றேத்திநட் டுச்சிதன்
மேலா மெழுத்தின ளாமத்தி னாளே. 58

1213 ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்
ஓமத்தி லேயும் ஒருத்தி பொருந்தினள்
நாம நமசிவ என்றிருப் பார்க்கு
நேமத் துணைவி நிலாவிநின் றாளே. 59

1214 நிலாமய மாகிய நீள்படி கத்தின்
சிலாமய மாகுஞ் செழுந்த ரளத்தின்

---

பா-ம்— [1] சூடிநின்.

சுலாமய மாகுஞ் சுரிகுழற் கோதை
கலாமய மாகக் கலந்துநின் றாளே. 60

1215 கலந்துநின் றாள்கன்னி காதல னோடுங்
கலந்துநின் றாளுயிர் கற்பனை எல்லாங்
கலந்துநின் றாள்கலை ஞானங்கள் எல்லாங்
கலந்துநின் றாள்கன்னி காலமு மாயே. 61

1216 காலவி எங்குங் கருத்தும் அருத்தியுங்
கூலவி ஒன்றாகுங் [1]கூட இழைத்தனள்
மாலினி மாகுலி மந்திர சண்டிகை
பாலினி பாலவன் பாகம தாமே. 62

1217 பாகம் பராசக்தி பைம்பொன் சடைமுடி
ஏகம் இருதயம் ஈரைந்து திண்புய
மோக முகமைந்து முக்கண் முகந்தொறும்
நாகம் உரித்து நடஞ்செய்யும் [2]நாதர்க்கே. 63

1218 நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின்
றோதிடுங் கூட்டங்கள் ஓரைந் துளஅவை
வேதனும் ஈரொன்ப தின்மரும் மேவிநின்
றோதியும் அந்தமு மாகிநின் றாளே. 64

1219 ஆகின்ற நாள்கலை ஐம்பத் தொருவர்கள்
ஆகிநின் றார்களில் ஆருயி ராமவள்
ஆகிநின் றாளுட னாகிய சக்கரத்
தாகிநின் றானவன் ஆயிழை பாடே. 65

1220 ஆயிழை யாளொடு மாதிப் பரமிடம்
ஆயதொ ரண்டவை யாறும் இரண்டுள
ஆய மனந்தொ றறுமுக மவைதனில்
ஏயவார் குழலி இனிதுநின் றாளே. 66

---

பா—ம்— [1]கூடல். [2]நாதற்கே.

1221 நின்றனள் நேரிழை யோடுடன் நேர்பட
இன்றெ னகம்படி [1]ஏழும் உயிர்ப்பெய்துந்
துன்றிய வோரொன் பதின்மருஞ் சூழலுள்
ஒன்றுயர் வோதி யுணர்ந்துநின் றுளே. 67

1222 உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
மணந்தெழு மாங்கதி யாகிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே.* 68

1223 ஆமது வங்கியும் ஆதியும் ஈசனும்
மாமது மண்டல மாருத மாதியும்
ஏமது சீவன் சிகையங் கிருண்டிடக்
கோமலர்க் கோதையுங் கோதண்ட மாகுமே. 69

1224 ஆகிய கோதண்டத் தாகு மனோன்மனி
ஆகிய ஐம்ப துடனே அடங்கிடும்
ஆகும் பராபரை யோடப் பரையவள்
ஆகு மவள்ஐங் கருமத்தள் தானே. 70

1225 [2]தானிகழ் மோகினி சார்வான யோகினி
போன மயமுடை யாரடி போற்றுவர்
ஆனவ ராவியி னுகிய வச்சிவந்
தானும் பரசிவ மேலது தானே. 71

1226 தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன்
ஆனந்த மோகினி யாம்பொற் [3]றிருவொடு
மோனையில் வைத்து மொழிதரு கூறது
வானவை யோமெனும் அவ்வுயிர் மார்க்கமே. 72

1227 மார்க்கங்கள் ஈன்ற மனோன்மனி மங்கலி
யார்க்கும் அறிய வரியா ளவளாகும்

பா—ம்— [1]எழும். [2]தானிகள். [3]குருவொடு. *இஃது 1306-ம் பாடலாகவும் வந்துள்ளது.

வாக்கு மனமும் மருவியொன் றுய்விட்ட
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே. 73

1228 நுண்ணறி வாகும் [1]நுழைபுலன் மாந்தர்க்குப்
பின்னறி வாகும் பிரானறி வத்தடஞ்
செந்நெறி யாகுஞ் சிவகதி சேர்வார்க்குத்
தன்னெறி யாவது சன்மார்க்க மாமே. 74

1229 சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்
துன்மார்க்க மானவை எல்லாந் துரந்திடும்
நன்மார்க்கத் தேவரும் நன்னெறி யாவதுஞ்
சன்மார்க்கத் தேவியுஞ் சத்தியென் பாளே. 75

1230 சத்தியும் நானுஞ் சயம்புவும் அல்லது
முத்தியை யாரும் முதலறி வாரில்லை
அத்திமேல் வித்திடில் அத்தி பழுத்தக்கான்
மத்தியி லேற வழியது வாமே. 76

1231 அதுவிது வென்றவ மேகழி யாதே
மதுவிரி பூங்குழல் மங்கைநல் லாளைப்
பதிமது மேவிப் பணியவல் லார்க்கு
விதிவழி தன்னையும் வென்றிட லாமே. 77

1232 வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் தன்னையும்
வென்றிடு[2]மங்கைதன்மெய்யுணர்வோர்க்கே. 78

1233 ஓரைம் பதின்மருள் ஒன்றியே நின்றது
பாரம் பரியத்து வந்த பரமிது
மாரங் குழலாளும் அப்பதி தானுமுன்
சாரும் பதமிது சத்திய மாமே. 79

---

பா-ம்— [1]நுழைபுல. [2]மங்கைதான்; மங்கைதாள்.

1234 சத்தியி னோடு சயம்புவும் நேர்படில்
வித்தது வின்றியே எல்லாம் விளைந்தன
அத்தகை யாகிய ஐம்பத் தொருவருஞ்
சித்தது மேவித் திருந்திடு வாரே. 80

1235 திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும்
பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த
அருந்திட அவ்விடம் ஆரமு தாக
இருந்தனள் தானங் கிளம்பிறை என்றே. 81

1236 என்றும் எழுகின்ற வேரினை எய்தினோர்
தன்றது வாகுவர் தார்குழ லாளொடு
மன்றரு கங்கை மதியொடு மாதவர்
துன்றிய தாரகை சோதிநின் றாளே. 82

1237 நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட
ஒன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது
சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய
துன்றிடு ஞானங்கள் தோன்றிடுந் தானே. 83

1238 தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி
ஈன்றிடு மாங்கவள் எய்திய பல்கலை
மான்றரு கண்ணியும் மாரனும் வந்தெதிர்
சான்றது வாகுவர் தாமவ ளாயுமே. 84

1239 ஆயும் அறிவுங் கடந்தணு வாரணி
மாயம தாகி [1]மதோமதி யாயிடுஞ்
சேய அரிவை சிவானந்த சுந்தரி
நேயம தாநெறி யாகிநின் றாளே. 85

1240 நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்
பிறிவது செய்யாது பின்னுக னோடுங்

---

பா-ம்— [1] மனோன்மணி.

குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கும்
அறிவொடும் ஆங்கே அடங்கிட லாமே. 86

1241 ஆமயன் மாலரன் ஈசன்மா லாங்கதி
ஓமய மாகிய ஒன்பதும் ஒன்றிடத்
தேமய ஞானுந் தெனுதென என்றிடும்
மாமய மானது வந்தெய்த லாமே. 87

1242 வந்தடி போற்றுவர் வானவர் தானவர்
இந்து முதலாக எண்டிசை யோர்களுங்
கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும்
வந்தனை செய்யும் வழி[1]நவில் வீரே. 88

1243 நவிற்றுநன் மந்திரம் நன்மலர் தூபங்
கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம்
பயிற்றும் உலகினிற் பார்ப்பதி பூசை
அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனை தானே.

1244 தாங்கி உலகில் தரித்த பராபரன்
ஓங்கிய காலத் தொருவன் உலப்பிலி
பூங்கிளி தங்கும் புரிகுழ லாளென்று
பாங்குடன் [2]ஏற்பப் பராசந்தி போற்றே. 90

1245 பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்
அற்கொடி மாதுமை யார்வந் தலைமகள்
நற்கொடி மாதை நயனங்கண் மூன்றுடை
விற்கொடி மாதை விரும்பி விளங்கே. 91

1246 விளங்கொளி யாய விரிசுடர் மாலை
துளங்கு பராசத்தி தூங்கிருள் நீங்கக்
களங்கொள் மணியுடன் காம விநோதம்
உளங்கொ ளிலம்பியம் ஒன்று தொடரே. 92

பா-ம்— [1] நவிலீரே. [2] நேரப்.

1247 தொடங்கி உலகினிற் சோதி மணாளன்
அடங்கி இருப்பதென் அன்பின் பெருமை
விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங்கை,
ஒடுங்கி யுமையொடும் ஓருரு வாமே. 93

1248 உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி
தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற்
புரிவளைக் கைச்சியெம் [1]பொன்னணி மாதை
மருவி இறைவன் மகிழ்வன மாயமே. 94

1249 மாயம் புணர்க்கும் வளர்சடை யானடித்
தாயம் புணர்க்குஞ் சலந்தி அமலனைக்
காயம் புணர்க்குங் கலவியுள் மாசத்தி
ஆயம் புணர்க்குமவ் வியோனியு மாமே. 95

1250 உணர்ந்தொழிந் தேனவ னுமெங்கள் ஈசனைப்
புணர்ந்தொழிந் தேன்புவ னுபதி யாரை
அணைந்தொழிந் தேனெங்கள் ஆதிதன் பாதம்
பிணைந்தொழிந் தேன்றன் அருள்பெற்ற வாறே.

1251 பெற்றாள் பெருமை பெரிய மனோன்மனி
நற்றாள் இறைவனே [2]நற்பயனே என்பர்
கற்றான் அறியுங் கருத்தறி வார்கட்குப்
பொற்றாள் உலகம் புகல்தனி யாமே. 97

1252 [3]தனிநா யகன்றனோ டென்னெஞ்சம் நாடி
இனியார் இருப்பிடம் ஏழுல கென்பர்
பனியான் மலர்ந்தபைம் போதுகை ஏந்திக்
கனியாய் [4]நினைவதென் காரணம் அம்மையே. 98

1253 அம்மனை அம்மை அரிவை மனோன்மனி
செம்மனை செய்து திருமங்கை யாய்நிற்கும்

---

பா-ம்— [1]பொன்னொளி. [2]நற்பயன். [3]தனியா. [4]நினைத்தென்.

இம்மனை செய்த [1]இந்நில மங்கையும்
அம்மனை யாகி அமர்ந்துநின் றாளே. 99

1254 அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அம்மையும் அத்தனு மாரறி வாரென்னை
அம்மையொ டத்தனும் யானும் உடனிருந்
தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே. 100

---

## 9. ஏரொளிச் சக்கரம்

1255 ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ்
ஏரொளி விந்துவி னாலெழு நாதமாம்
ஏரொளி யக்கலை எங்கும் நிறைந்தபின்
ஏரொளிச் சக்கர [2]மந்நடு வன்னியே. 1

1256 வன்னி யெழுத்தவை மாபலம் உள்ளன
வன்னி யெழுத்தவை வானுற ஓங்கின
வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம்
வன்னி யெழுத்திடு வாறது சொல்லுமே. 2

1257 சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்
சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன
சொல்லிடு நூறொடு நாற்பத்து நாலுரு
சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே. 3

1258 மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடும்
மேல்வரு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவரின்
மேல்வரு சக்கர மாய்வரு ஞாலமே. 4

1259 ஞாலம தாக விரிந்தது சக்கரம்
ஞாலம தாயிடும் விந்துவும் நாதமும்

பா—ம்— [1]இருநில. [2]மன்னிடு.

ஞாலம தாயிடு மப்பதி யோசனை
ஞாலம தாக விரிந்த தெழுத்தே. 5

1260 விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விரிந்த எழுத்தது சக்கர மாக
விரிந்த எழுத்தது மேல்வரும் பூமி
விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே. 6

1261 அப்பது வாக விரிந்தது சக்கரம்
அப்பினில் அப்புறம் அவ்வன லாயிடும்
அப்பினில் அப்புறம் மாருத மாயெழ
அப்பினில் அப்புறம் ஆகாச மாமே. 7

1262 ஆகாச அக்கர மாவது சொல்லிடில்
ஆகாச அக்கரத் துள்ளே எழுத்தவை
ஆகாச அவ்வெழுத் தாகிச் சிவானந்தம்
ஆகாச அக்கர மாவ தறிமினே. 8

1263 அறிந்திடுஞ் சக்கரம் [1]ஐயஞ்சு விந்து
அறிந்திடுஞ் சக்கர நாத முதலா
அறிந்திடும் அவ்வெழுத் தப்பதி யோர்க்கும்
அறிந்திடும் அப்பக லோனிலை யாமே. 9

1264 அம்முதல் ஆறுமவ் வாதி எழுத்தாகும்
அம்முதல் ஆறுமவ் வம்மை எழுத்தாகும்
[2]இம்முதல் நாலும் [3]இருந்திடு வன்னியே
இம்முத லாகும் எழுத்தவை எல்லாம். 10

1265 எழுத்தவை நூற்றொடு நாற்பத்து நாலும்
எழுத்தவை யாறது வந்நடு வன்னி
எழுத்தவை யந்நடு வச்சுட ராகி
எழுத்தவை தான்முதல் அந்தமு மாமே. 11

---

பா-ம்— [1]ஐயைந்து. [2]அம்முதல். [3]இருநடு.

1266 அந்தமும் ஈறு முதலா னவையற
அந்தமும் அப்பதி னெட்டுடன் ஆதலால்
அந்தமும் அப்பதின் மூன்றில் அமர்ந்தபின்
அந்தமும் இந்துகை யாருட மானதே. 12

1267 ஆவின மானவை முந்நூற் றறுபது
மாவின மப்பதி னைந்தின மாயுறு
மாவின மப்பதி னெட்டுட னுயுறு
மாவின மக்கதி ரோன்வர வந்தே. 13

1268 வந்திடும் ஆகாசம் ஆறது நாழிகை
வந்திடும் அக்கரம் முப்பதி ராசியும்
வந்திடு நாளது முந்நூற் றறுபதும்
வந்திடு ஆண்டு வகுத்துறை யவ்வியே. 14

1269 அவ்வின மூன்றுமவ் வாடது வாய்வருங்
[1]கெவ்வின மூன்றுங் கிளர்தரு வேரதாஞ்
சவ்வின மூன்றுந் தழைத்திடுந் தண்டதாம்
இவ்வின மூன்றும் இராசிக ளெல்லாம். 15

1270 இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்
இராசியுட் சக்கர மென்றறி விந்துவாம்
இராசியுட் சக்கர நாதமும் ஒத்தபின்
இராசியுட் சக்கரம் நின்றிடு மாறே. 16

1271 நின்றிடு விந்துவென் றுள்ள எழுத்தெலாம்
நின்றிடு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
நின்றிடு மப்பதி யவ்வெழுத் தேவரில்
நின்றிடு மப்புறந் தாரகை யானதே. 17

1272 தாரகை யாகச் சமைந்தது சக்கரந்
தாரகை மேலோர் தழைத்தது பேரொளி

பா-ம்— [1]எவ்வின.

தாரகை சந்திரன் நற்பக லோன்வரத்
தாரகை தாரகை [1]தாரகை கண்டதே. 18

1273 கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாங்
கண்டிடு நாதமுந் தன்மேல் எழுந்திடக்
கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின்
கண்டிடு மப்புறங் காரொளி யானதே. 19

1274 காரொளி அண்டம் பொதிந்துல கெங்கும்
பாரொளி நீரொளி சாரொளி காலொளி
வானொளி ஒக்க வளர்ந்து கிடந்துபின்
நேரொளி ஒன்றாய் நிறைந்தங்கு நின்றதே. 20

1275 நின்றது அண்டமும் நீளும் புவியெலாம்
நின்றவிவ் வண்ட நிலைபெறக் கண்டிட
நின்றவிவ் வண்டமு மூல மலமொக்கும்
நின்றவிவ் வண்டம் பலமது விந்துவே. 21

1276 விந்துவும் நாதமும் ஒக்க விழுந்திடில்
விந்துவும் நாதமும் ஒக்க விரையதாம்
விந்திற் குறைந்திடு நாதம் எழுந்திடில்
விந்துவை எண்மடி கொண்டது வீசமே. 22

1277 வீசம் இரண்டுள நாதத் தெழுவன
வீசமும் ஒன்று விரைந்திடு மேலுற
வீசமும் நாதமும் எழுந்துடன் ஒத்தபின்
வீசமும் விந்து விரிந்தது காணுமே. 23

1278 விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம்
விரிந்தது விந்துவும் நாதத் தளவினில்
விரிந்தது வுட்கட்ட எட்டெட்டு மாகில்
விரிந்தது விந்து விரையது வாமே. 24

---

பா-ம்— [1]யானது காணுமே.

1279 விரையது விந்து விளைந்தன எல்லாம்
விரையது விந்து விளைந்த உயிரும்
விரையது விந்து விளைந்தவிஞ் [1]ஞாலம்
விரையது விந்து விளைந்தவன் [2]தாளே. 25

1280 விளைந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விளைந்த எழுத்தது சக்கர மாக
விளைந்த எழுத்தவை மெய்யினுள் நிற்கும்
விளைந்த எழுத்தவை மந்திர மாமே. 26

1281 மந்திரஞ் சக்கர மானவை சொல்லிடில்
தந்திரத் துள்ளெழுத் தொன்றெரி வட்டமாம்
தந்திரத் துள்ளு மிரேகையில் ஒன்றில்லை
பந்தம தாகும் பிரணவம் உன்னிடே. 27

1282 உன்னிட்ட வட்டத்தில் ஒத்தெழு மந்திரம்
பின்னிட்ட ரேகை பிழைப்பது தானில்லை
தன்னிட் டெழுந்த தகைப்பறப் பின்னிற்கப்
பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே. 28

1283 பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்
காக்கலு மாகுங் கருத்தில் தடமெங்கும்
நோக்கலு மாகும் நுணுக்கற்ற நுண்பொருள்
ஆக்கலு மாகும் அறிந்துகொள் வார்க்கே. 29

1284 அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து
விரிந்திடுஞ் சக்கர மேலெழுத் தம்மை
பரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி நாலும்
குவிந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே. 30

1285 கூறிய சக்கரத் துள்ளெழு மந்திரம்
மாறியல் பாக அமைந்து விரிந்திடுங்

பா—ம்— [1]ஞானம். [2]தானே.

தேறிய அஞ்சுடன் சேர்ந்தெழு மாரண
மாறியல் பாக மதித்துக்கொள் வார்க்கே. 31

1286 மதித்திடும் அம்மையும் மாமாது மாகும்
மதித்திடும் அம்மையு மங்கனல் ஒக்கும்
மதித்தங் கெழுந்தவை காரண மாகில்
கொதித்தங் கெழுந்தவை கூடகி லாவே. 32

1287 கூடிய தம்பனம் மாரணம் வசியம்
ஆடியல் பாக அமைந்து செறிந்திடும்
பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறூர்
தேடியுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே. 33

1288 தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே
அளிந்த வகாரத்தை யங்நடு வாக்கிக்
[1]குளிர்ந்த வரனைக் கூடியுள் வைத்து
வளிந்தவை யங்கெழு நாடிய காலே. 34

1289 காலரை முக்கால் முழுதெனும் மந்திரம்
ஆலித் தெழுந்தமைந் தூறி எழுந்ததாய்ப்
பாலித் தெழுந்து பகையற நின்றபின்
மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே. 35

1290 கொண்டஇம் மந்திரங் கூத்தன் எழுத்ததாய்ப்
பண்டையுள் நாவிற் பகையற விண்டபின்
[2]மன்றுள் நிறைந்த மணிவிளக் காயிடும்
இன்றும் இதயத் தெழுந்து நமவெனே. 36

## 10. வயிரவச் சக்கரம்

1291 அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு
அறிந்தவச் சத்தமி மேலிவை குற்றம்
அறிந்தவை யொன்றுவிட் டொன்றுபத் தாக
அறிந்த வலமது வாக நடவே. 1

பா—ம்— [1]குளிந்த வரவினைக். [2]மன்று.

1292 நடந்து வயிரவன் சூல கபாலி
கடந்த பகைவனைக் கண்ணது போக்கித்
தொடர்ந்த வுயிரது வுண்ணும் பொழுது
படர்ந்த வுடல்கொடு பந்தாட லாமே. 2

1293 ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவன்
ஆமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங்
காமே தமருக பாசமுங் கையது
வாமே சிரத்தொடு வாளது கையே. 3

1294 கையவை யாறுங் கருத்துற நோக்கிடு
மெய்யது செம்மை விளங்கு வயிரவன்
துய்யரு ளத்தில் துளங்குமெய் யுற்றதாய்ப்
பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே. 4

1295 பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்
பூசனை [1]செய்ய மதுவுட னுடுமால்
பூசனை சாந்து சவாது புழுகுநெய்
பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே. 5

1296 வேண்டிய வாறு கலகமு மாயிடும்
வேண்டிய ஆறினுண் மெய்யது பெற்றபின்
வேண்டிய வாறு வரும்வழி நீநட
வேண்டிய வாறது வாகுங் கருத்தே. 6

---

## 11. சாம்பவி மண்டலச் சக்கரம்*

1297 சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடில்
ஆம்பதம் எட்டாக விட்டிடின் மேலதாங்
காண்பதந் தத்துவ நாலுள் நயனமும்
நாம்பதங் கண்டபின் நாடறிந் தோமே. 1

பா-ம்— [1]செய்யு. *இஃது ஒரு பிரதியில் சாம்பவி மண்டலம் என்று உள்ளது.

1298 [1]நாடறி மண்டலம் நல்லவிக் குண்டத்துக்
கோடற வீதியுங் கொடர்ந்துள் இரண்டழி
பாடறி பத்துடன் ஆறு நடுவீதி
ஏடற நாலைந் திடவகை யாமே. 2

1299 நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டலம்
நாலுநல் வீதியுள் நல்ல இலிங்கமாய்
நாலுநற் கோணமும் நந்நா லிலிங்கமாய்
நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே. 3

1300 ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறி நிருமல சிவாய நமவென்று
கூறுமின் கூறிற் குறைகளும் இல்லையே. 4

1301 குறைவதும் இல்லை குரைகழற் கூடு
மறைவது மாரண மவ்வெழுத் தாகித்
திறமது வாகத் தெளியவல் லார்க்கு
இறவில்லை என்றெறன் றியம்பினர் காணே. 5

1302 காணும் பொருளுங் கருதிய தெய்வமும்
பேணும் பதியும் பெருகிய தீர்த்தமும்
ஊணும் உணர்வும் உறக்கமுந் தானாகக்
காணுங் கனகமுங் காரிகை யாமே. 6

1303 ஆமே எழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்
போமே யதுதானும் போம்வழி யேபோனல்
நாமே நினைத்தன செய்யலு மாகும்
பார்மேல் ஒருவர் பகையில்லை தானே. 7

1304 பகையில்லை என்றும் பணிந்தவர் தம்பால்
நகையில்லை [2]நாணுளும் நன்மைக ளாகும்

---

பா—ம்— [1]நாடரி. [2]நாளும்.

வினையில்லை என்றும் விருத்தமும் இல்லை
தகையில்லை தானுஞ் சலமது வாமே. 8

1305 ஆரும் உரைசெய்ய லாமஞ் செழுத்தாலே
யாரும் அறியாத ஆனந்த ரூபமாம்
பாரும் விசும்பும் பகலும் மதியதி
[1]ஊனும் உயிரும் உணர்வது வாமே. 9

1306 உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
அணைந்தெழு மாங்கத னுதிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாலே.* 10

## 12. புவனாபதி சக்கரம்

1307 ககராதி யோரைந்துங் காணிய பொன்மை
அகராதி யோரா றரத்தமே போலும்
சகராதி யோர்நான்குந் தான்சுத்த வெண்மை
ககராதி மூவித்தை காமிய முத்தியே. 1

1308 ஓரில் இதுவே உரையும்இத் தெய்வத்தைத்
தேரிற் பிறிதில்லை யானென்று செப்பக்கேள்
வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந்
தேரில் அறியுஞ் சிவகாயந் தானே. 2

1309 ஏக பராசத்தி ஈசற்காம் அங்கமே
யாகம் பராவித்தை யாமுத்தி சித்தியே
ஏகம் பராசத்தி யாகச் சிவகுரு
யோகம் பராசத்தி உண்மைஎட் டாமே. 3

1310 எட்டா கிய[2]சத்தி எட்டாகும் யோகத்துக்
[3]கட்டாகு நாதாந்தத் தெட்டுங் கலப்பித்த

பா-ம்—[1]ஊரும். [2]சித்தி. [3]கட்டாதி. *இதனை 1222.ம் செய்யுளோடு ஒப்பு நோக்குக.

தொட்டாத விந்துவுந் தானற் றெழுந்தது
கிட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே. 14

1311 ஏதும் பலமா மியந்திரா சன்னடி
ஓதிக் குருவின் உபதேசம் உட்கொண்டு
நீதங்கும் அங்க நியாசந் தனைப்பண்ணிச்
சாதங்கெடச் செம்பிற் சட்கோணந் தானிட்டே. 15

1312 சட்கோணந் தன்னில் ஸ்ரீம்ஹ்ரீம் தானிட்டு
அக்கோண மாறின் தலையில்ரீங் காரமிட்
டெக்கோண முஞ்சூழ எழில்வட்டம் இட்டுப்பின்
மிக்கிரெட் டக்கர மம்முதன் மேலிடே. 6

1313 இட்ட [1]இதழ்கள் இடையந் தரத்திலே
அட்டஹவ் விட்டதின் மேலே உவ்விட்டுக்
கிட்ட இதழ்களின் மேலே கிரோம்சிரோம்
இட்டுவா மத்தாங் கிரோங்கென்று மேவிடே. 7

1314 மேவிய சக்கர மீது வலத்திலே
கோவையடையவேகுரோங்சிரோங் கென்றிட்டுத்
[2]தாவில்ரீங் காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து
பூவைப் புவனா பதியைப்பின் பூசியே. 8

1315 பூசிக்கும் போது புவனா பதிதன்னை
ஆசற் றகத்தினில் ஆவா கனம்பண்ணிப்
பேசிய பிராணப் பிரதிட்டை யதுசெய்து
தேசுற் றிடவே தியான மதுசெய்யே. 9

1316 செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்
கையிற் படையங் குசபாசத் தோடபய
மெய்யில் அணிகலன் இரத்தின மாமேனி
துய்ய முடியும் அவயவத்தில் தோற்றமே. 10

பா—ம்— [1]இதன்கண். [2]தாவிலிறீங்.

1317 தோற்போர்வை நீக்கித் துதித்தடைவிற் பூசித்துப்
பாற்போ னகமந் திரத்தாற் பயின்றேத்தி
நாற்பால நாரதா யாசுவா காஎன்று
சீர்ப்பாகச் சேடத்தை [1]மாற்றிப்பின் சேவியே. 11

1318 சேவிப் பதன்முன்னே தேவியையுத் வாகனத்தாற்
பாவித் திதய கமலம் பதிவித்தங்
கியாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை
நீவைத்துச் [2]சேமி நினைந்தது தருமே. 12

---

## 13. நவாக்கரி சக்கரம்

1319 நவாக்கரி சக்கர நானுரை செய்யின்
நவாக்கரி ஒன்று நவாக்கரி யாக
நவாக்கரி எண்பத் தொருவகை யாக
நவாக்கரி யக்கிலீ சௌமுத லீறே. 1

1320 சௌமுதல் அவ்வவொடு ஹௌவுட னுங்கிரீம்
கௌவு ளுமையுளுங் கலந்திரீம் சிரீமென்
றெவ்வில் எழுங்கிலீ மந்திர பாதமாச்
[3]செவ்வுள் எழுந்து சிவாய நமவென்னே. 2

1321 நவாக்கரி யாவது நானறி வித்தை
நவாக்கரி யுள்ளெழும் நன்மைகள் எல்லாம்
நவாக்கரி மந்திர நாவுளே ஓத
நவாக்கரி சத்தி நலந்தருந் தானே. 3

1322 நலந்தரு ஞானமுங் கல்வியும் எல்லாம்
உரந்தரு வல்வினை யும்மைவிட் [4]டோடிச்
சிரந்தரு தீவினை செய்வ தகற்றி
வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. 4

---

பா-ம்— [1]மாற்றியபின். [2]சேவி. [3]செவ்வன் [4]டோடுஞ்.

1323 கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை
கொண்டிடும் [1]உள்ளே குறித்த வினைகளை
வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கும்
நின்றிடுஞ் சக்கரம் நினைக்கு மளவே. 5

1324 நினைத்திடு மச்சிரீ மக்கிலீ மீரு
நினைத்திடுஞ் சக்கர மாதியு மீறு
நினைத்திடு நெல்லொடு புல்லினை யுள்ளே
நினைத்திடும் அருச்சனை நேர்தரு வாளே. 6

1325 நேர்தரு மத்திரு நாயகி யானவள்
யாதொரு வண்ணம் அறிந்திடும் பொற்பூவை
கார்தரு வண்ணங் கருதின கைவரும்
நார்தரு வண்ணம் நடத்திடு நீயே. 7

1326 நடந்திடும் பாரினில் நன்மைகள் எல்லாங்
கடந்திடுங் காலனும் எண்ணிய நாளும்
[2]படர்ந்திடு நாமமும் பாய்கதிர் போல
அடைந்திடு வண்ணம் அடைந்திடு நீயே. 8

1327 அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுடன் எல்லாம்
அடைந்திடு மாதி யருளுந் திருவும்
அடைந்திடும் அண்டத் தமரர்கள் வாழ்வும்
அடைந்திடும் வண்ணம் அறிந்திடு நீயே. 9

1328 அறிந்திடு வார்கள் அமரர்க ளாகத்
தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன்
பரிந்திடும் வானவன் பாய்புனல் சூடி
முரிந்திடு வானை முயன்றிடு நீரே. 10

1329 நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்
பாரணி யும்ஹிரீ முன்ஸ்ரீ மீருங்

---

பா-ம்— [1]முன்னே. [2]படைந்திடு.

தாரணி யும்புகழ்த் தையல்நல் லாள்தனைக்
காரணி யும்பொழிற் கண்டுகொள் ளீரே. 11

1330 கண்டுகொள் ளுந்தனி நாயகி தன்னையும்
மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும்
பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர்
நின்றுகொ ளும்நிலை பேறுடை [1]யாளையே 12

1331 பேறுடை யாள்தன் பெருமையை [2]எண்ணிடில்
நாடுடை யார்களும் நம்வச மாகுவர்
மாறுடை யார்களும் வாழ்வது தானிலை
கூறுடை யாளையுங் கூறுமின் நீரே. 13

1332 கூறுமின் எட்டுத் திசைக்குந் தலைவியை
யாறுமின் அண்டத் தமரர்கள் வாழ்வென
மாறுமின் வையம் வரும்வழி தன்னையுந்
தேறுமின் நாயகி சேவடி சேர்ந்தே. 14

1333 சேவடி சேரச் செறிய இருந்தவர்
நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர்
பூவடி யிட்டுப் பொலிய இருந்தவர்
மாவடி காணும் வகையறி வாரே. 15

1334 ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கர
மைம்முத லாக அமர்ந்திரீ மீருகும்
[3]அம்முத லாகி யவர்க்குடை யாடனை
மைம்முத லாக வழுத்திடு நீயே. 16

1335 [4]வழுத்திடு நாவுக் கரசிவள் தன்னைப்
பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந்
தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லானை
முகத்துளும் முன்னெழக் கண்டுகொ ளீரே. 17

---

பா—ம்— [1]யாளே. [2]வேண்டிடில். [3]ஐம்முத. [4]வகுத்திடு.

1336 கண்ட இச் சக்கரம் நாவில் எழுதிடிற்
கொண்ட இம் மந்திரங் கூத்தன் குறியதா
மன்றினுள் வித்தையு மானுடர் கையதாய்
வென்றிடும் வையக மெல்லியல் மேவியே. 18

1337 மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளான்தனைச்
சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்
பல்லிய லாகப் பரந்தெழு நாட்பல
நல்லியல் [1]பாலே நடந்திடுந் தானே. 19

1338 நடந்திடு நாவினுள் நன்மைகள் எல்லாந்
தொடர்ந்திடுஞ் சொல்லொடு சொற்பொருள் [தானும்
கடந்திடுங் கல்விக் கரசிவ ளாகப்
படர்ந்திடும் பாரிற் பகையில்லை தானே. 20

1339 பகையில்லை கௌமுத லையது வீரு
நகையில்லை சக்கர நன்றறி வார்க்கு
மிகையில்லை சொல்லிய [2]பல்லுரு வெல்லாம்
வகையில்லை யாக வணங்கிடுந் தானே. 21

1340 வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை
நலங்கிடு நல்லுயி ரானவை யெல்லாங்
கலங்கிடுங் காம வெகுளி மயக்கந்
துலங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே. 22

1341 தானே கழறித் தணியவும் வல்லனுய்த்
தானே நினைத்தவை சொல்லவும் வல்லனுய்த்
தானே தனிநடங் கண்டவள் தன்னையுந்
தானே வணங்கித் தலைவனு மாமே. 23

1342 ஆமே யனைத்துயி ராகிய அம்மையுந்
தாமே சகலமும் ஈன்றஅத் தையலும்

---

பா-ம்— [1]பாக. [2]பல்லுயி ரெல்லாம்.

ஆமே யவளடி போற்றி வணங்கிடிற்
போமே வினைகளும் புண்ணிய னாகுமே. 24

1343 புண்ணிய னாகிப் பொருந்தி உலகெங்கும்
கண்ணிய னாகிக் கலந்தங் கிருந்திடுந்
தண்ணிய னாகித் தரணி முழுதுக்கும்
[1]அண்ணிய னாகி அமர்ந்திருந் தானே. 25

1344 தானது கம்மிறீக் கௌவது ஈரும்
நானது சக்கர நன்றறி வார்க்கெலாம்
கானது கன்னி கலந்த பராசத்தி
கேளது வையங் கிளரொளி யானதே. 26

1345 ஒளிக்கும் பராசத்தி உள்ளே அமரிற்
களிக்கும்இச் சிந்தையிற் காரணங் காட்டித்
தெளிக்கும் மழையுடன் செல்வமுண் டாக்கும்
அளிக்கும் இவளை அறிந்துகொள் வார்க்கே. 27

1346 அறிந்திடுஞ் சக்கரம் அருச்சனை யோடே
எறிந்திடும் வையத் [2]திடரவை காணின்
மறிந்திடு மன்னனும் வந்தனை செய்யும்
பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே. 28

1347 புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங்
குகையில்லை கொல்வ திலாமையி னாலே
வகையில்லை வாழ்கின்ற மன்னுயிர்க் கெல்லாஞ்
சிகையில்லை சக்கரஞ் சேர்ந்தவர் தாமே. 29

1348 சேர்ந்தவர் என்றுந் திசையொளி யானவர்
காய்ந்தெழு மேல்வினை காணகி லாதவர்
பாய்ந்தெழும் உள்ளொளி பாரிற் பரந்தது
மாய்ந்தது காரிருள் மாறொளி தானே. 30

---

பாட—ம் — [1]புண்ணிய. [2]திடர்வகை.

1849 ஒளியது ஹௌமுன் கிரீமது ஈருங்
களியது சக்கரங் கண்டறி வார்க்குத்
தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப்
[1]பணிவது பஞ்சாக் கரமது வாமே. 81

1850 ஆமே சதாசிவ நாயகி யானவள்
ஆமே அதோமுகத் துள்ளறி வானவள்
ஆமே சுவையொளி யூறோசை [2]கண்டவள்
ஆமே யனைத்துயிர் தன்னுளு மாமே. 82

1851 தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்
டென்னுளு மாகி இடம்பெற நின்றவள்
மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளுங்
கண்ணுளும் மெய்யுளுங் காணலு மாமே. 83

1852 காணலு மாகுங் கலந்துயிர் செய்வன
காணலு மாகுங் கருத்து ளிருந்திடிற்
காணலு மாகுங் கலந்து வழிசெயக்
காணலு மாகுங் கருத்துற நில்லே. 84

1853 நின்றிடும் ஏழு புவனமும் ஒன்றாகக்
கண்டிடும் உள்ளங் கலந்தெங்குந் தானாகக்
கொண்டிடும் வையங் குணம்பல தன்னையும்
விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. 85

1854 மெய்ப்[3]பொரு ளௌமுதல் ஹௌவது ஈருக்
கைப்பொரு ளாகக் கலந்தெழு சக்கரந்
தற்பொரு ளாகச் சமைந்தமு தேஸ்வரி
நற்பொரு ளாக நடுவிருந் தாளே. 86

1855 தாளதி னுள்ளே சமைந்தமு தேஸ்வரி
காலது கொண்டு கலந்துற வீசிடில்

---

பா-ம்— [1]பளியது. [2]தாற்றம். [3]பொருள் வௌமுதல்

நாளது நாளும் புதுமைகள் கண்டபின்
கேளது காயமுங் கேடில்லை காணுமே. 37

1356 கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின்
நாடில்லை காணும் நாண்முத லற்றபின்
மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்
காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே. 38

1357 உற்றிட மெல்லாம் உலப்பில்பா ழாக்கிக்
கற்றிட மெல்லாங் கடுவெளி யானது
மற்றிட மில்லை வழியில்லை தானில்லை
சற்றிட மில்லை சலிப்பற நின்றிடே. 39

1358 நின்றிடும் ஏழ்கடல் ஏழ்புவி எல்லாம்
நின்றிடும் [1]உள்ளம் நினைத்தவை தானொக்கும்
நின்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட்
நின்றிடும் மேலை விளக்கொளி தானே. 40

1359 விளக்கொளி யௌமுத லௌவது ஈறு
விளக்கொளிச் சக்கரம் மெய்ப்பொரு ளாகும்
விளக்கொளி யாகிய மின்கொடி யாளை
விளக்கொளி யாக விளங்கிடு நீயே. 41

1360 விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லின்
விளங்கிடு மெல்லிய லானது வாகும்
விளங்கிடு மெய்ந்நின்ற ஞானப் பொருளை
விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே. 42

1361 தானே வெளியென எங்கும் நிறைந்தவள்
தானே பரம வெளியது வானவள்
தானே சகலமு மாக்கி [2]அழித்தவள்
தானே யனைத்துள அண்ட சகலமே. 43

பா-ம்— [1]முன்னம். [2]அளித்தவள்.

1362 அண்டத்தி னுள்ளே அளப்பரி தானவள்
பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தி னுள்ளே குணம்பல காணினுங்
கண்டத்தில் நின்ற கலப்பறி யார்களே. 44

1363 கலப்பறி யார்கடல் சூழுல கெல்லாம்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் [1] தானே. 45

1364 தானே எழுந்தஅச் சக்கரஞ் சொல்லிடின்
மானே மதிவரை பத்திட்டு வைத்தபின்
தேனே யிரேகை திகைப்பற ஒன்பதில்
தானே கலந்த வரையெண்பத் தொன்றுமே. 46

1365 ஒன்றிய சக்கரம் ஓதிடும் வேளையில்
வென்றிகொள் மேனி மதிவட்டம்பொன்மையாங்
கன்றிய ரேகை கலந்திடுஞ் செம்மையில்
என்றிய லம்மை எழுத்தவை பச்சையே. 47

1366 ஏய்ந்த மரவுரி தன்னில் எழுதிய
வாய்ந்தஇப் பெண்ணெண்பத் தொன்றில் நிரைத்
காய்ந்தவி நெய்யுட் கலந்துடன் ஓமமு [தபின்
[2] மாந்தலத் தாமுயி ராகுதி பண்ணுமே. 48

1367 பண்ணிய பொன்னைப் பரப்பற நீபிடி
எண்ணிய நாட்களில் இன்பமும் எய்திடும்
நண்ணிய நாமமும் நான்முகன் ஓத்தபின்
துண்ணென நேயநற் சேர்க்கலு மாமே. 49

1368 ஆகின்ற சந்தனங் குங்குமங் கத்தூரி
போகின்ற சாந்து சவாது புழுகுநெய்

பா—ம்— [1] தாமே. [2] மாய்ந்த வியாயிர மாகுதி பண்ணே.

ஆகின்ற கற்பூர மாகோ சனநீருஞ்
சேர்கின்ற ஒன்பதுஞ் சேரநீ வைத்திடே. 50

1369 வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற்
கைச்சிறு கொங்கை கலந்தெழு கன்னியைத்
தச்சிது வாகச் சமைந்தஇம் மந்திரம்
அர்ச்சனை யாயிரம் ஆயிரஞ் சிந்தியே. 51

1370 சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியாய்
எந்தை கரங்கள் இருமூன்றும் உள்ளது
பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு
முந்தை கிலீமெழ முன்னிருந் தாளே. 52

1371 இருந்தனர் சத்திகள் அறுபத்து நால்வர்
இருந்தனர் கன்னிகள் எண்வகை எண்மர்
இருந்தனர் சூழ எதிர்[1]சக் கரத்தே
இருந்த கரமிரு வில்லம்பு கொண்டே. 53

1372 கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க்
கண்டஇம் முத்தங் கனல்திரு மேனியாய்ப்
பண்டமர் சோதிப் படரித மானவள்
உண்டங் கொருத்தி உணரவல் லாருக்கே. 54

1373 உணர்ந்திருந் துள்ளே ஒருத்தியை நோக்கிற்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்
மணந்தெழும் ஓசை யொளியது காணுந்
தணந்தெழு சக்கரந் தான்தரு வாளே. 55

1374 தருவழி யாகிய தத்துவ ஞானங்
குருவழி யாகுங் குணங்களுள் நின்று
கருவழி யாகுங் கணக்கை யறுத்துப்
பெருவழி யாக்கும் பேரொளி தானே. 56

பா-ம்— [1] சக்கரமாய்,

1375 பேரொளி யாய பெரிய [1]பெருஞ்சுடர்
சீரொளி யாகித் திகழ்தரு நாயகி
காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்
பாரொளி யாகிப் பரந்துநின் றாளே. 57

1376 பரந்த கரம்இரு பங்கயம் ஏந்திக்
குவிந்த கரமிரு கொய்தளிர்ப் பாணி
பரிந்தருள் கொங்கைகண் முத்தார் பவளம்
இருந்தநல் லாடை மணிபொதிந் தன்றே. 58

1377 மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை
அணிபவ ளன்றி யருளில்லை யாகுந்
தணிபவர் நெஞ்சினுள் தன்னரு ளாகிப்
பணிபவர்க் கன்றோ பரகதி யாமே. 59

1378 பரந்திருந் துள்ளே அறுபது சத்தி
கரந்தன கன்னிகள் அப்படி சூழ
மலர்ந்திரு கையின் மலரவை [2]ஏந்தச்
சிறந்தவர் ஏத்துஞ் சிறீம்தன மாமே. 60

1379 தனமது வாகிய தையலை நோக்கி
மனமது வோடி மரிக்கிலோ ராண்டிற்
கனமவை யற்றுக் கருதிய நெஞ்சந்
தினகர னிட செய்திய தாமே. 61

1380 ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்
போகின்ற பேரொளி யாய மலரதாய்ப்
போகின்ற பூரண மாக நிறைந்தபின்
சேர்கின்ற செந்தழல் மண்டல மானதே. 62

1381 ஆகின்ற மண்டலத் துள்ளே அமர்ந்தவள்
ஆகின்ற ஐம்பத் தறுவகை யானவள்

பா-ம்— [1]மலர்நடுச். [2]ஏந்திச்.

ஆகின்ற ஐம்பத் தறுசத்தி நேர்தரு
ஆகின்ற ஐம்பத் தறுவகை சூழவே. 63

1382 சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமாய்
ஆங்கணி முத்தம் அழகிய மேனியுந்
தாங்கிய கையவை தார்கிளி ஞானமாய்
[1]ஏந்து கரங்கள் எடுத்தமர் பாசமே. 64

1383 பாசம தாகிய வேரை யறுத்திட்டு
நேசம தாக [2]நினைத்திரு மும்முளே
நாசம தெல்லாம் நடந்திடும் ஐயாண்டிற்
காசினி மேலமர் கண்ணுத லாகுமே. 65

1384 கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி
பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்
விண்ணமர் சோதி விளங்க [3]ஹ்ரீங்கார
மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. 66

1385 மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்
கண்டகத் துள்ளே கருதி யிருந்திடும்
விண்டகத் துள்ளே விளங்கி வருதலால்
தண்டகத் துள்ளவை தாங்கலு மாமே. 67

1386 தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்
தோங்கி எழுங்கலைக் குள்ளுணர் [4]வானவள்
ஏங்க வரும்பிறப் பெண்ணி யறுத்திட
வாங்கிய நாதம் வலியுட னாகுமே. 68

1387 நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்
பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம்
பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தள்
ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே. 69

---

பா-ம்— [1]ஏந்துங். [2]நினைந்திடு. [3]றீங்கார. [4]வானவன்.

1388 அன்றிரு கையில் அளந்த பொருள்முறை
இன்றிரு கையில் எடுத்தவெண் குண்டிகை
மன்றது காணும் வழியது வாகவே
கண்டங் கிருந்தவர் காரணி காணுமே. 70

1389 காரணி சத்திகள் ஐம்பத் [1]திரண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத் திருவராய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்குங்
காரணி தன்னரு ளாகிநின் றாளே. 71

1390 நின்றஇச் சத்தி நிலைபெற நின்றிடிற்
கண்டஇவ் வன்னி கலந்திடும் ஓராண்டிற்
கொண்ட விரதநீர் குன்றாமல் நின்றிடின்
மன்றினி லாடு மணியது காணுமே. 72

1391 கண்டஇச் சத்தி இருதய பங்கயங்
கொண்டஇத் தத்துவ நாயகி யானவள்
பண்டையவ் வாயுப் பகையை யறுத்திட
இன்றென் மனத்துள் இனிதிருந் தாளே. 73

1392 இருந்தவிச் சத்தி இருநாலு கையிற்
பரந்தஇப் பூங்கிளி பாச மழுவாள்
கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங்
குரந்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே. 74

1393 உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்
பரந்த பவளமும் பட்டாடை சாத்தி
மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து
தழைந்தங் கிருந்தவள் தான்பச்சை யாமே. 75

1394 பச்சை இவளுக்குப் பாங்கிமார் [2]ஆறெட்டு
கொச்சையார் எண்மர்கள் கூடி வருதலாற்

பாடம்— [1]திரண்டுடன். [2]ஆறெட்டுக்.

கச்சணி கொங்கைகள் கையிரு காப்பதாய்
எச்ச விடைச்சி இனிந்திருந் தாளே. 76

1395 தாளதி னுள்ளே [1]தாங்கிய சோதியைக்
காலது வாகக் கலந்துகொள் என்று
மாலது வாக வழிபாடு செய்துநீ
பாலது போலப் பரந்தெழு விண்ணிலே. 77

1396 விண்ணமர் நாபி இருதய மாங்கிடைக்
கண்ணமர் கூபங் கலந்து வருதலாற்
பண்ணமர்ந் தாதித்த மண்டல மானது
தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே. 78

1397 கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள
தாபத்துச் சத்தி தயங்கி வருதலால்
ஆபத்துக் கைகள் அடைந்தன நாலைந்து
பாசம் அறுக்கப் பரந்தன சூலமே. 79

1398 சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய்
வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு
காலம்பூப் பாசம் மழுகத்தி [2]கைக்கொண்டு
கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே. 80

1399 எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்
எண்ணமர் சத்திகள் நாற்பத்து நால்வராம்
எண்ணிய பூவித ழுள்ளே யிருந்தவள்
எண்ணிய எண்ணங் கடந்துநின் றாளே. 81

1400 கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு
தொடர்ந்தணி முத்து பவளங்கச் சாகப்
படர்ந்தல்குற் பட்டாடை பாதச் சிலம்பு
மடந்தை சிறியவள் வந்துநின் றாளே. 82

---

பா-ம்— [1]தயங்கிய. [2]யைக்கொண்டு.

1401 நின்றஇச் சத்தி நிரந்தர மாகவே
கண்டிடு மேரு வணிமாதி தானாகிப்
பண்டைய வானின் பகட்டை யறுத்திட்
டொன்றிய தீபம் உணர்ந்தார்க் குண்டாமே. 83

1402 [1]உண்டோர் அதோமுகம் உத்தம மானது
கண்டஇச் சத்தி சதாசிவ நாயகி
கொண்ட முகமைந்து கூறுங் கரங்களும்
ஒன்றிரண் டாகவே மூன்றுநா லானதே. 84

1403 நன்மணி சூலங் கபாலங் கிளியுடன்
பன்மணி நாகம் மழுகத்தி பந்தாகுங்
கன்மணி தாமரைக் கையில் தமருகம்
பொன்மணி பூணாரம் பூசனை யானதே. 85

1404 பூசனைச் சத்திகள் எண்ணைவர் சூழவே
நேசவள் கன்னிகள் நாற்பத்து நேரதாய்க்
காசினிச் சக்கரத் துள்ளே கலந்தவள்
மாசடை யாமல் மகிழ்ந்திருந் தார்களே. 86

1405 தாரத்தி னுள்ளே தங்கிய சோதியைப்
பாரத்தி னுள்ளே பரந்துள் எழுந்திட
வேரது வொன்றின் றெண்ணு மனோமயங்
காரது போலக் கலந்தெழு மண்ணிலே. 87

1406 மண்ணில் எழுந்த [2]அகார உகாரங்கள்
விண்ணில் எழுந்து சிவாய நமவென்று
கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்
கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே. 88

1407 என்றங் கிருந்த அமுத கலையிடைச்
சென்றங் கிருந்த அமுத பயோதரி

---

பா—ம்— [1]உண்டா மதோமுகம். [2]மகர வுகரங்கள்.

கண்டங் கரமிரு வெள்ளிபொன் மண்ணடை
கொண்டங் கிருந்தது வண்ணம் அமுதே. 89

1408 அமுதம தாக அழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழு முள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்
கெமுதம தாகிய கேடிலி தானே. 90

1409 கேடிலி சத்திகள் முப்பத் தறுவரும்
நாடிலி கன்னிகள் நாலொன் பதின்மரும்
பூவிலி பூவிதழ் உள்ளே யிருந்தவர்
நாளிலி தன்னை நணுகிநின் றார்களே. 91

1410 நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங்
கண்டது சோதி கருத்துள் இருந்திடக்
கொண்டது வோராண்டு கூடி வருகைக்கு
விண்டவௌ காரம் விளங்கின அன்றே. 92

1411 விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம்
வணங்கிடு மண்டலம் மன்னுயி ராக
நலங்கிளர் நன்மைகள் நாரண னொத்துச்
சுணங்கிடை [1]நின்றிலை சொல்லலு மாமே. 93

1412 ஆமே அதோமுக மேலே அமுதமாயத்
தாமே யுகாரந் தழைத்தெழுஞ் சோமனுங்
காமேல் வருகின்ற கற்பக மானது
பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே. 94

1413 பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட
அக்களி யாகிய ஆங்காரம் [2]போயிடும்
மற்கட மாகிய மண்டலந் தன்னுளே
பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. 95

---

பா-ம்— [1] நின்றவை. [2] போய்விடும்.

1414 பேதை யிவளுக்குப் பெண்மை அழகாகுந்
தாதை யிவளுக்குத் தாணுவு மாய்நிற்கும்
மாதை யவளுக்கு மண்ணுந் திலகமாய்க்
கோதையர் சூழக் குவிந்திடங் காணுமே. 96

1415 குவிந்தனர் சத்திகள் முப்பத் திருவர்
நடந்தனர் [1]கன்னிகள் நாலெண்மர் சூழப்
பரந்தித மாகிய பங்கயத் துள்ளே
இருந்தனள் காணும் இடம்பல கொண்டே. 97

1416 கொண்டங் கிருந்தனர் கூத்தன் ஒளியினைக்
கண்டங் கிருந்தனர் காரணத் துள்ளது
பண்டை மறைகள் பரந்தெங்குந் தேடுமால்
இன்றென் மனத்துளே இல்லடைந் தானுமே. 98

1417 இல்லடைந் தானுக்கும் இல்லாத தொன்றில்லை
இல்லடைந் தானுக் கிரப்பது தானில்லை
இல்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வார்
இல்லடைந் தானுக்கு இல்லாதில் லானையே. 99

1418 ஆனை மயக்கும் அறுபத்து நாற்றறி
ஆனை யிருக்கும் அறுபத்து நாலொளி
ஆனை யிருக்கும் அறுபத்து நாலறை
ஆனையுங் கோடும் அறுபத்து நாலிலே. 100

**நாலாந் தந்திரம் முற்றிற்று.**

---

பா—ம்— [1]சத்திகள்.

# ஐந்தாம் தந்திரம்*

## 1. சுத்த சைவம்

1419 ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற
பேரறி வாளன் பெருமை குறித்திடின்
மேருவும் மூவுல காளி யிலங்கெழுந்
தாரணி நால்வகைச் சைவமு மாமே. 1

1420 சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கண்டு
சித்தும் அசித்துஞ் சேர்வுறா மேநீத்த
சுத்தம் அசுத்தமுந் தோய்வுறா மேநின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே. 2

1421 கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
[1]சொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. 3

1422 வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்த
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்
பூதாந்த போதாந்த மாகப் புனஞ்செய்ய
நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே. 4

## 2. அசுத்த சைவம்

1423 இணையார் திருவடி ஏத்துஞ் சீரங்கத்
திணையார் இணைக்குழை யீரணை முத்திரை
குணமா ரிணைக்கண்ட மாலையுங் குன்றா
தணைவாஞ் சரியை கிரியையி னோர்க்கே. 1

1424 காதுப்பொ னார்ந்த கடுக்கன் இரண்டுசேர்த்
தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன்

பா-ம்— [1]தொல்பத. *இது வாதுளாகமத்தின் சாரம் என்பர்.

சோதனை செய்து துவாதெச மார்க்கராய்
ஓதி யிருப்பார் ஒருசைவ ராகுமே. 2

1425 கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டனர்
கண்டங்கள் ஒன்பதுங் கண்டாய் அரும்பொருள்
கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டமாங்
கண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே. 3

1426 ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்
மோன திசையும் முழுஎண்ணெண் சித்தியும்
ஏனை நிலமும் எழுதா மறையீறுங்
கோனொடு தன்னையுங் காணுங் குணத்தனே. 4

---

## 3. மார்க்க சைவம்

1427 பொன்னுற் சிவசாத னம்பூதி சாதனம்
நன்மார்க்க சாதனம் [1]மாஞான சாதனந்
துன்மார்க்க சாதனந் தோன்றாத சாதனஞ்
சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே. 1

1428 கேடறு ஞானி கிளர்ஞான பூபதி
பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தின்
ஊடுறு ஞானோ தயனுண்மை முத்தியோன்
பாடுறு சுத்தசை வப்பத்த நித்தனே. 2

1429 ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு
மோகமில் நாலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்
றாக முடிந்த வருஞ்சுத்த சைவமே. 3

1430 சுத்தம் அசுத்தந் துரியங்கள் ஒரேழுஞ்
சத்தும் அசத்துந் தணந்த பராபரை

---

பா-ம்— [1]நல்ஞான.

உய்த்த பராபரை யுள்ளாம் பராபரை
அத்தன் அருட்சத்தி யாயெங்கு மாமே. 4

1431 சத்தும் அசத்துந் தணந்தவர் தானாகிச்
சித்தும் அசித்துந் தெரியாச் சிவோகமாய்
முத்தியுள் ஆனந்த சத்தியுள் மூழ்கினார்
சித்தியு மங்கே சிறந்துள தானே. 5

1432 தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை [1]மாசற்ற
முன்னைப் பழமல [2]முன்கட்டை வீட்டினை
உன்னத் தகுஞ்சுத்த சைவர் உபாயமே. 6

1433 பூரணந் தன்னிலே வைத்தற்ற [3]வப்போதே
மாரண மந்த மதித்தானந் தத்தோடு
நேரென ஈராறு நீதி நெடும்போகங்
காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே. 7

1434 மாறாத ஞான மதிப்பற மாயோகந்
தேறாத சிந்தையைத் தேற்றிச் சிவமாக்கிப்
பேறான பாவனை பேணி நெறிநிற்றல்
கூறாகு ஞானி சரிதை குறிக்கிலே. 8

1435 வேதாந்தங் கண்டோர் பிரமமித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த [4]மல்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதா ரணமன்ன சைவர் உபாயமே. 9

1436 விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்
கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிகள்
எண்ணினைச் சென்றணு காம லெணப்படும்
அண்ணலைச் சென்றணு காபசு பாசமே. 10

---

பா-ம்— [1]மாசற. [2]மூழ்கட்டை; மூலத் தைவிட்டு. [3]வப் போதம். [4]மில்லாத.

1437 ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகார நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. 11

---

## 4. கடுஞ்சுத்த சைவம்

1438 வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி
ஆடம் பரமின்றி ஆசாபா சஞ்செற்றுப்
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே. 1

1439 உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்து
மடலான மாமாயை மற்றுள்ள நீவப்
படலான கேவல பாசந் துடைத்துத்
திடமாய்த் தனையுறல் சித்தாந்த மார்க்கமே. 2

1440 சுத்தச் சிவனுரை தானதில் தோயாமல்
முத்தர் பதப்பொருள் முத்திவித் [1] தாமூலம்
அத்தகை யான்மா அரனை அடைந்தற்றாற்
சுத்த சிவமாவ ரேசுத்த சைவரே. 3

1441 நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் [2] தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகில் லேனே. 4

1442 சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. 5

---

பா-ம்— [1] *தார்மூலம்; தாமூலன்,* [2] *தற்பரந்.*

## 5. சரியை

1443 நேர்ந்திடு [1]மூல சரியை நெறியிதென்
றுய்ந்திடுங் காலாங்கி கஞ்ச மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்த சைவத் துயிரதே. 1

1444 உயிர்க்குயி ராய்நிற்றல் ஒண்ஞான பூசை
உயிர்க்கொளி நோக்கல் மகாயோக பூசை
உயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை
செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே. 2

1445 நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே. 3

1446 பத்தர் சரிதை படுவோர் கிரியையோர்
அத்தகு தொண்டர் அருள்வேடத் தாகுவோர்
சுத்த வியமாதி சாதகர் தூயோகர்
சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே. 4

1447 சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ [2]ருயிர்னோர்
சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோர்
ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே. 5

1448 கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை
அரிய சிவனுரு அமரும் அருபந்
தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை
உரியன நேயத் துயர்பூசை யாமே. 6

1449 சரியாதி நான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்

---

பா-ம்— [1]மூலன். [2]ருயற்றோர்.

பொருளா னதுநந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே. 7

1450 சமையம் பலசுத்தித் தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமும் அரன்மந் திரசுத்தி
சமைய நிருவாணங் கலாசுத்தி யாகும்
அமைமன்னு ஞானமார்க் கம்அபி டேகமே. 8

## 6. கிரியை

1451 பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்
டெத்திக் கிலரில்லை என்பதின் அமலர்க்
கொத்துத் திருவடி நீழல் சரணெனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே. 1

1452 கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.* 2

1453 கோனக்கன் றாயே குரைகழல் ஏத்துமின்
ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும்
வானக்கன் றாகிய வானவர் கைதொழு
மானக்கன் றீசன் அருள்வள்ள மாமே. 3

1454 இதுபணிந் தெண்டிசை மண்டலம் எல்லாம்
அதுபணி செய்கின் றவளொரு கூறன்
இதுபணி மானுடர் செய்பணி யீசன்
பதிபணி செய்வது பத்திமை காணே. 4

1455 பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்
உய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே. 5

*இஃது 1848-ம் பாடலாகவும் வந்துள்ளது.

1456 அன்பின் உருகுவ னாளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கருள்
என்பினுட் சோதி இலங்குகின் றானே. 6

---

## 7. யோகம்

1457 நெறிவழி யேசென்று [1]நேர்மையுள் ஒன்றித்
தறியிருந் தாற்போல் தம்மை யிருத்திச்
சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூட லுமாமே. 1

1458 ஊழிதோ றூழி உணர்ந்தவர்க் கல்லால்
ஊழிதோ றூழி யுணரவுந் தாளெட்டான்
ஆழி அமரும் அரியயன் என்றுளார்
ஊழி முயன்றும் ஒருச்சியு ளானே.* 2

1459 **பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது**
ஓவியம் போல [2]உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே. 3

1460 உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை யுறவே தெளிந்திருள் நீங்கினால்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே.** 4

1461 எழுத்தோடு பாடலும் எண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியும் நீங்கா
வழித்தலைச் சோமனோ டங்கி யருக்கன்
வழித்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே. 5

---

பா-ம்— [1]நேர்மையின். [2]உணரவல் லார்கட்கு. *இஃது 1846-ம் பாடலாகவும் வந்துள்ளது. **இஃது 2622-ம் பாடலாகவும் வந்துள்ளது

1462 விரும்பிநின் றேசெயில் மெய்த்தவ ராகும்
விரும்பிநின் றேசெயின் [1]மெய்யுரை யாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்
விரும்பிநின் றேசெயில் விண்ணவ னுக்குமே. 6

1463 பேணிற் பிறவா உலகருள் செய்திடுங்
காணில் தனது கலவியு ளேநிற்கும்
நாணில் நகர நெறிக்கே வழிசெயும்
ஊணிற் சுடுமங்கி யுத்தமன் றானே. 7

1464 ஒத்தசெங் கோலார் உலப்பிலி மாதவர்
எத்தனை யாயிரம் வீழ்ந்தனர் எண்ணிலி
சித்தர்கள் தேவர்கள் மூவர் பெருமையாய்
அத்த னிவனென்றே அன்புறு வார்களே. 8

1465 யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோர்
ஆகத் தகுகிரி யாதி சரியையாந்
தாகத்தை விட்ட சரியையொன் றும்ஒன்றுள்
ஆதித்தன் பத்தியுள் அன்புவைத் தேனே. 9

1466 யோகச் சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே. 10

---

## 8. ஞானம்

1467 ஞானத்தின் மிக்க [2]அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே. 1

பா-ம்— [1]மெய்யுணர்வாகும். [2]தவநெறி.

1468 சத்தமுஞ் சத்த மனனுந் தகுமனம்
உய்த்த வுணர்வு முணர்த்தும் அகங்கையுஞ்
சித்தமென் றிம்மூன்றுஞ் சிந்திக்குஞ்செய்கையுஞ்
சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. 2

1469 தன்பால் உலகுந் தனக்கரு காவதும்
அன்பா லெனக்கரு ளாவது மாவன
என்பார்கள் ஞானமும் எய்துஞ் சிவோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடுந் தானே. 3

1470 இருக்குஞ் சேம இடம்பிரம மாகும்
வருக்கஞ் சராசர மாகும் உலகந்
தருக்கிய ஆசார மெல்லாந் தருமே
[1] திருக்கிலா ஞானத்தைத்தேர்ந்துணர்ந் தோர்க்கே.

1471 அறிவும் அடக்கமும் அன்பும் உடனே
பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்
குறியுங் குணமுங் குரைகழல் நீங்கா
நெறியறி வார்க்கிது [2] நீர்த்தொணி யாமே. 5

1472 ஞானம் விளைந்தெழு கின்றதோர் சிந்தையுள்
ஏனம் விளைந்தெதி ரேகாண் வழிதொறுங்
கூனல் மதிமண் டலத்தெதிர் நீர்கண்டு
ஊனம் அறுத்துநின் றொண்சுட ராகுமே. 6

1473 ஞானிக் குடன்குண ஞானத்தில் நான்குமா
மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து
மேனிற்ற லாஞ்சத்தி வித்தை விளைத்திடுந்
தானிக் குலத்தோர் சரியை கிரியையே. 7

1474 ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நானென தென்னுமல்

பா-ம்— [1] திருக்கமில். [2] நீர்த்தோணி யாமே.

ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே. 8

1475 நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயங் கரைஞானங் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. 9

1476 ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டல்
ஞான விசேடமே [1]நாடு பரோதய
ஞானநிர் வாணமே [2]நன்றறி வானருள்
[3]ஞானாபி டேகமே நற்குரு பாதமே. 10

## 9. சன்மார்க்கம்

1477 சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. 1

1478 சைவப் பெருமைத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்துள் ளார்க்கு வகுத்துவைத் தானே.* 2

1479 தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்திச் சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. 3

1480 தெளிவறி யாதார் சிவனை யறியார்
தெளிவறி யாதார் [4]சீவனு மாகார்

---

பா-ம் — [1]நண்ணும் பரோதயம். [2]நற்சிவோ கம்பாவம். [3]ஞானபி டேகமே. [4]சிவனு. *இஃது 1567-ம் பாடலாகவும் வந்துள்ளது.

தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே. 4

1481 தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று
மோனம தாமொழிப் பான்முத்த ராவது
மீனமில் ஞானானு பூதியில் இன்பமுந்
தானவ னாயுற லானசன் மார்க்கமே. 5

1482 சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்
சன்மார்க்கத் தார்க்கும் இடத்தொடு தெய்வமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தரிசனம்
எம்மார்க்கத் தார்க்கும் இயம்புவன் கேண்மினே.

1483 சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றார்
சன்மார்க்கந் தானவ னாகுஞ்சன் மார்க்கமே. 7

1484 சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்
பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்றால்
நன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே
சொன்மார்க்கமென்னச்சுருதிகைக்கொள்ளுமே. 8

1485 அன்னிய பாசமும் ஆகுங் கருமமும்
முன்னும் அவத்தையும் மூலப் பகுதியும்
பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந்
தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே. 9

1486 பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்
[1]தொசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே. 10

பா-ம்— [1] கசியாத.

1487 மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது
மார்க்கஞ்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை
மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர்
மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே. 11

## 10. சகமார்க்கம்

1488 சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது
மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம்
பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்
துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே. 1

1489 மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்
குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார்
வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகும்
உருவுங் கிளையும் ஒருங்கிழப் பாரே. 2

1490 யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்
யோகச் சமாதியின் உள்ளே யுளரொளி
யோகச் சமாதியின் உள்ளே யுளசத்தி
யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே. 3

1491 யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகஞ் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்திய
தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே. 4

1492 ஆதார சோதனை யானாடி சுத்திகள்
மேதாதி யீரெண் [1]கலாந்தத்து விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்கெட லாஞ்சக மார்க்கமே. 5

பா-ம்— [1]கலந்தது. *இஃது 1707-ம் பாடலாகவும் வந்துள்ளது.

1493 பிணங்கிநிற் கின்றவை ஐந்தையும் பின்னை
அணங்கி யெறிவ னயிர்மன வாளாற்
கணம்பதி னெட்டுங் கருதும் ஒருவன்
வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றனே. 6

1494 வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்
வளங்கனி யொப்பதோர் வாய்மைய னுகும்
உளங்கனிந் துள்ள முகந்திருப் பார்க்குப்
பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றனே. 7

---

## 11. சற்புத்திர மார்க்கம்

1495 மேவிய சற்புத்திர [1]மார்க்க மெய்த்தொழில்
தாவிப்ப தாஞ்சக மார்க்கஞ் சகத்தொழில்
ஆவ திரண்டும் அகன்று சகமார்க்கத்
தேவியோ டொன்றல் சன்மார்க்கத் தெளிவதே. 1

1496 பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித்திட் டன்னமும் [2]நீசுத்தி செய்தன்மற்
[3]றுசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே. 2

1497 அறுகாற் பறவை அலர்தேர்ந் துழலும்
மறுகா நரையன்னந் தாமரை நீலங்
குறுகா நறுமலர் கொய்வன கண்டுஞ்
சிறுகால் [4]அறநெறி சேரகி லாரே. 3

1498 அருங்கரை யாவது அவ்வடி நீழற்
பெருங்கரை யாவது பிஞ்ஞக னுணை
வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லாம்
ஒருங்கரை யாயுல கேழிநைத் தானே. 4

பா—ம்— [1]மார்க்கமே தொழில். [2]நீர்சுத்தி செய்தலும். [3]மாசற்ற. [4]அரனெறி.

1499 உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி
வியந்தும் அரனடிக் கேமுறை செய்மின்
பயந்தும் பிறவிப் பயனது வாகும்
பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே. 5

1500 நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்தன்னை
என்றுந் தொழுவன் எழிற்பரஞ் சோதியைத்
துன்று மலர்தூவித் தொழுமின் தொழுந்தோறுஞ்
சென்று வெளிப்படுந் தேவர் பிரானே. 6

1501 திருமன்னுஞ் சற்புத் திரமார்க்கச் சரியை
உருமன்னி வாழும் உலகத்தீர் கேண்மின்
கருமன்னு பாசங் கைகூம்பத் தொழுது
இருமன்னு நாடோறும் இன்புற் றிருந்தே. 7

## 12. தாச மார்க்கம்

1502 எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே. 1

1503 அதுவிது வாதிப் பரமென் றகல்வர்
இதுவழி யென்றங் கிறைஞ்சின ரில்லை
விதிவழி யேசென்று வேந்தனை நாடு
மதுவிது நெஞ்சில் தணிக்கின்ற வாறே. 2

1504 அந்திப்பன் திங்க ளதன்பின்பு ஞாயிறு
சிந்திப்பன் என்றும் ஒருவன் செறிகழல்
வந்திப்ப வானவர் தேவனை நாடோறும்
வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே. 3

1505 அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி
உன்னுவர் உள்மகிழ்ந் துண்ணின் றடிதொழக்

கண்ணவ னென்று கருது மவர்கட்குப்
பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே. 4

1506 [1]வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்
[2]பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின்
மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை
[3]நேசத் திருந்த நினைவறி [4]யாரே. 5

---

## 13. சாலோகம்

1507 சாலோக மாதி சரியாதி யிற்பெறுஞ்
சாலோகஞ் சாமீபந் தங்குஞ் சரியையால்
மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சாரூபம்
பாலோகம் இல்லாப் பரனுரு வாமே. 1

1508 சமயங் கிரியையிற் றன்மனங் கோயில்
சமய மனுமுறை தானே விசேடஞ்
சமயத்து மூலந் தனைத்தேறன் மூன்றுஞ்
சமயாபி டேகந் தானுஞ் சமாதியே. 2

---

## 14. சாமீபம்

1509 பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்
பாச மருளான தாகும்இச் சாமீபம்
பாசஞ் சிரமான தாகும்இச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச் சியமே.

---

## 15. சாரூபம்

1510 தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந்
தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா

---

பா—ம்— [1]வாசித்துப் பூசித்து மாமலர் கொய்திட்டுப். [2]பாசக் கிணற்றில் வீழ்கின்ற பாவிகாள். [3]நேசித்திருந்த; நேசித்தே வைக்க. [4]யீரே.

அங்கத் துடல்சித்தி சாதன ராகுவர்
இங்கிவ ராக விழிவற்ற யோகமே. 1

1511 சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
சயிலம தாகுஞ் சராசரம் போலப்
பயிலுங் குருவின் பதிபுக்க போதே
கயிலை இறைவன் கதிர்வடி வாமே. 2

## 16. சாயுச்சியம்

1512 சைவஞ் சிவனுடன் சம்பந்த மாகுதல்
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
[1]சைவஞ் [2]சிவந்தன்னைச் சாராமல் [3]நீங்குதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே. 1

1513 சாயுச் சியஞ்சாக் கிராதீதஞ் சாருதல்
சாயுச் சியமுப சாந்தத்துத் தங்குதற்
சாயுச் சியஞ்சிவ மாதல் முடிவிலாச்
சாயுச் சியமனத் தானந்த சத்தியே. 2

## 17. சத்திநிபாதம்

### மந்தம்

1514 இருட்டறை மூலை யிருந்த [4]கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் [5]குணம்பல காட்டி
மருட்டி யவனை [6]மணம்புரிந் தாளே. 1

1515 தீம்புல னான திசையது சிந்திக்கில்
ஆம்புல னாயறி வார்க்கமு தாய்நிற்குந்
தேம்புல னான தெளிவறி வார்கட்குக்
கோம்புல னாடிய கொல்லையு மாமே. 2

பா-ம்— [1]சைவம் பசுபாசம். [2]சிவமன்றிச். [3]நீவுதல். [4]குமரி [5]குணமுதல். [6]மணம்புணர்ந் தாளே.

1516 இருள்நீக்கி எண்ணில் பிறவி கடத்தி
அருள்நீங்கா வண்ணமே யாதி யருளும்
மருள்நீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருள்நீங்கா இன்பம் [1]புலம்பயில் தானே. 3

1517 இருள்சூ ழறையில் இருந்தது நாடிற்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போல்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
அருள்சூழ் இறைவனும் அம்மையு மாமே. 4

மந்ததரம்

1518 மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
[2]அருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே. 5

1519 கன்னித் துறைபடிந் தாடிய ஆடவர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்திலர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்துண்டேற்
பின்னைப் பிறவி பிறிதில்லை தானே. 6

1520 செய்யன் கரியன் வெளியன்நற் பச்சையன்
எய்த வுணர்ந்தவர் எய்வர் இறைவனை
மைவென் றகன்ற பகடுரி போர்த்தவெங்
கைய னிவனென்று [3]காதல்செய் வீரே. 7

1521 எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்
தையலுந் தானுந் தனிநா யகமென்பர்
வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்
கையிற் கருமஞ்செய் காட்டது வாமே. 8

1522 கண்டுகொண்டோமிரண்டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர்

பா-ம்— [1]புணர்ந்தயின் றேனே. [2]அருட்டிரு. [3]காவல் செய்வீரே.

வண்டுகொண் டாடு மலர்வார் சடையண்ணல்
நின்றுகண் டார்க்கிருள் நீக்கிநின் றனே. 9

### தீவிரம்

1523 அண்ணிக்கும் பெண்பிள்ளை அப்பனார் தோட்டத்
எண்ணிக்கும் ஏழேழ் பிறவி யுணர்விக்கும் [தில்
உண்ணிற்ப தெல்லாம் ஒழிய முதல்வனைக்
கண்ணுற்று நின்ற [1]கனியது வாகுமே. 10

1524 பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்
மறப்பை யறுக்கும் வழிபட வைக்குங்
குறப்பெண் குவிமுலை கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே. 11

1525 தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடும்
ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்
தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. 12

1526 நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகிலும் பன்மலர் தூவிப் பணிவன்
அணுகிய தொன்றறி யாத வொருவன்
அணுகும் உலகெங்கு மாவியு மாமே. 13

### தீவிர தரம்

1527 இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனு ஞானத்தால் தன்செய லற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. 14

1528 இரவும் பகலும் [2]இலாத இடத்தே
குரவஞ் செய்கின்ற குழலியை [3]உன்னி

பாடம்— [1]கனியது. [2]இறந்த. [3]நாடி.

அரவஞ்செய் யாமல் அவளுடன் சேரப்
பரிவொன்றி லாளும் பராபரை தானே. 15

1529 மாலை விளக்கும் மதியமும் ஞாயிறுஞ்
சாலை விளக்குந் தனிச்சுடர் அண்ணலுள்
ஞானம் விளக்கிய நாதன்என் உள்புகுந்(து)
ஊனை விளக்கி யுடனிருந் தானே. 16

---

## புறச்சமய தூடணம்

1530 ஆயத்துள் நின்ற[1] அறுசம யங்களுங்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலர்
மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
[2]பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே. 1

1531 உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்
வள்ளல் தலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படுங்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே. 2

1532 உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்
குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே. 3

1533 ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே. 4

1534 சிவமல்ல தில்லை யறையே சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்(கு)

---

பா—ம்— [1]*அறுசமயத் தோரும்.* [2]*பாசத்துள் நின்று; பாசத்துட்பட்டுப்.*

அவமல்ல தில்லை அறுசம யங்கள்
[1]தவம்வல்ல நந்திதாள் சார்ந்துய்யு நீரே. 5

1535 அண்ணலை நாடிய ஆறு சமயமும்
விண்ணவ ராக மிகவும் விரும்பியே
முண்ணின் றழியு முயன்றில ராதலான்
மண்ணின் றொழியும் வகையறி யார்களே. 6

**1536 சிவகதி யேகதி மற்றுள்ள எல்லாம்**
பவகதி பாசப் பிறவியொன் றுண்டு
தவகதி தன்னொடு [2]நேரொன்று தோன்றில்
அவகதி மூவரும் அவ்வகை யாமே. 7

1537 நூறு சமயம் உளவா நுவலுங்கால்
ஆறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா
ஈறு பரநெறி யில்லா நெறியன்றே. 8

1538 கத்துங் கழுதைகள் போலுங் [3]கலதிகள்
சுத்த சிவமெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் [4]தெளியார் குணங்கொண்டு கோதாட்டிப்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே. 9

1539 மயங்குகின் றாரு மதிதெளிந் தாரும்
முயங்கி யிருவினை முழைமுகப் பாச்சி
இயங்கிப் பெறுவரே லீறது காட்டிற்
பயங்கெட் டவர்க்கோர் பரநெறி யாமே. 10

1540 சேயன் அணியன் பிணியிலன் பேர்நந்தி
தூயன் துளக்கற நோக்கவல் லார்கட்கு
மாயன் மயக்கிய மானுட ராமவர்
காயம் விளக்குங் கருத்தறி யார்களே. 11

---

பா-ம்— [1]தவமல்ல, [2]தேரொன்று. [3]கலாதிகள், [4]தெரியாமல்.

1541 வழியிரண் டுக்குமோர் வித்தது வான
[1]பழியது பார்மிசை வாழ்தல் உறுதல்
சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்
றழிவறி வார்நெறி நாடகில் லாரே. 12

1542 மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்
நாதம தாக அறியப் படுநந்தி
பேதஞ்செய் யாதே பிரான்என்று கைதொழில்
ஆதியும் அந்நெறி யாகிநின் றானே. 13

1543 அரனெறி யப்பனை யாதிப் பிரானை
உரநெறி யாகி யுளம்புகுந் தானைப்
பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்
பரனறி யாவிடிற் பல்வகைத் தூரமே. 14

1544 பரிசறி வானவன் பண்பன் பகலோன்
பெரிசறி வானவர் பேற்றில் திகழுந்
துரிசற நீநினை தூய்மணி வண்ணன்
அரிதவன் வைத்த அறநெறி தானே. 15

1545 ஆன சமயம் அதுஇது நன்றெனும்
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த வுருவது வாமே. 16

1546 அந்நெறி [2]நாடி அமரர் முனிவருஞ்
செந்நெறி கண்டார் சிவனெனப் பெற்றார்பின்
முன்னெறி நாடி முதல்வன் அருளிலார்
சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே. 17

1547 உறுமா றறிவதும் உள்நின்ற சோதி
பெறுமா றறியிற் பிணக்கொன்றும் இல்லை

பா-ம்— [1]வழியது. [2]நாடிய.

அறுமா றதுவான வங்கியு ளாங்கே
இறுமா றறிகிலர் ஏழைகள் தாமே. 18

1548 வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையங்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. 19

1549 வழிசென்ற மாதவம் வைகின்ற போது
பழிசெல்லும் வல்வினைப் பற்றறுத் தாங்கே
வழிசெல்லும் வல்வினை யார்திறம் விட்டிட்
டுழிசெல்லில் உம்பர் தலைவன்முன் னாமே. 20

## 19. நிராசாரம்[1]

1550 இமையங்க ளாய்நின்ற தேவர்கள் ஆறு
சமையங்கள் பெற்றனர் சாத்திரம் ஓதி
யமையறிந் தோமென்ப ராதிப் பிரானுங்
கமையறிந் தாருட் கலந்துநின் றானே. 1

1551 பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி
தாங்கு மனிதர் தரணியில் நேரொப்பர்
நீங்கிய வண்ணம் நினைவுசெய் யாதவர்
ஏங்கி உலகில் இருந்தழு வாரே. 2

1552 [2]இருந்தழு வாரும் இயல்புகெட் டாரும்
அருந்தவ மேற்கொண்டங் கண்ணலை எண்ணில்
வருந்தா வகைசெய்து வானவர் கோனும்
பெருந்தன்மை நல்கும் [3]பிறப்பில்லை தானே. 3

1553 தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர்
பாரறி வாளர் படுபயன் றானுண்பர்
காரறி வாளர் கலந்து பிறப்பர்கள்
நீரறி வார்நெடு மாமுகி லாமே. 4

---

பா-ம்— [1]*நிராகாரம்.* [2]*இருந்தழி.* [3]*பிறப்பிலி.*

1554 அறிவுடன் கூடி அழைத்ததோர் தோணி
பறிவுடன் பாரம் பழம்பதி சிந்துங்
குறியது கண்டுங் கொடுவினை யாளர்
செறிய நினைக்கிலர் சேவடி தானே. 5

1555 மன்னும் ஒருவன் மருவு மனோமயன்
என்னின் மனிதர் இகழ்வரிவ் வேழைகள்
துன்னி மனமே தொழுமின் துணையிலி
தன்னையும் அங்கே தலைப்பட லாமே. 6

1556 ஓங்காரத் [1]துள்ளொளி உள்ளே உதயமுற்
றாங்கார மற்ற அனுபவங் கைகூடார்
சாங்கால முன்னார் பிறவாமை சார்வுறார்
நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே. 7

---

## 20. உட்சமயம்

1557 இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்
அமைய வகுத்தவன் ஆதி புராணன்
சமயங்க ளாறுந்தன் றாளிணை நாட
அமையங் குழல்கின்ற ஆதிப் பிரானே. 1

1558 ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை [2]யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே. 2

1559 சைவப் பெருமைத் தனிநா யகன்தன்னை
உய்ய வுயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை இன்பஞ்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. 3

பா-ம்— [1]துள்ளொளிக் குள்ளே, [2]நீதர்கள்; மாந்தர்கள்.

1560 சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற்
பவனவன் வைத்த பழவழி நாடி
இவனவன் என்ப தறியவல் லார்கட்
கவனவ னங்குள தாங்கட னாமே. 4

1561 ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்
போமாறு தானில்லை புண்ணிய மல்லதங்
காமாம் வழியாக்கும் அவ்வே றுயிர்கட்கும்
போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே. 5

1562 அரனெறி யாவ தறிந்தேனும் நானுஞ்
[1]சிலநெறி தேடித் திரிந்தஅந் நாளும்
உரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந்
தரநெறி நின்ற தனிச்சுடர் தானே. 6

1563 தேர்ந்த அரனை அடைந்த சிவநெறி
பேர்ந்தவர் உன்னிப் பெயர்ந்த பெருவழி
ஆர்ந்தவர் அண்டத்துப் [2]புக்க அருள்நெறி
போந்து புனைந்து புணர்நெறி யாமே. 7

1564 ஈரு மனத்தை யிரண்டற வீசுமின்
ஊருஞ் சகாரத்தை ஓதுமின் னோதியே
வாரு மரனெறி மன்னியே முன்னியத்
தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே. 8

1565 மினற்குறி யாளனை வேதியர் வேதத்
தனற்குறி யாளனை ஆதிப் பிரான்தன்னை
நினைக்குறி யாளனை ஞானக் கொழுந்தி
னயக்குறி காணில் அரனெறி யாமே. 9

1566 ஆய்ந்துண ரார்களின் ஆன்மாச் சதுர்பல
வாய்ந்துண ராவகை நின்ற அரனெறி

பா-ம்— [1]சிவநெறி. [2]புக்கவ்.

பாய்ந்துணர் வார்அரன் சேவடி கைதொழு
தேர்ந்துணர் செய்வதோர் இன்பமு மாமே. 10

1567 சைவ சமயத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே.* 11

1568 இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி
எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே. 12

1569 ஆமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்
ஆமே பிரானுக் கதோமுக மாறுள
தாமே பிரானுக்குந் தன்சிர மாலைக்கும்
நாமே பிரானுக்கு நரரியல் பாமே. 13

1570 ஆதிப் பிரானுல கேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களு மாய்நிற்கும்
பேதிப் பிலாமையின் நின்ற பராசத்தி
ஆதிக்கட் டெய்வமும் அந்தமு மாமே. 14

1571 ஆய்ந்தறி வார்கள் அமரர்வித் தியாதரர்
ஆய்ந்தறி யாவண்ணம் நின்ற அரனெறி
ஆய்ந்தறிந் தேனவன் சேவடி கைதொழ
ஆய்ந்தறிந் தேனிம்மை அம்மைகண் டேனே. 15

1572 அறியவொண் ணாதவ் வுடம்பின் பயனை
அறியவொண் ணாத அறுவகை யாக்கி
அறியவொண் ணாத அறுவகைக் கோசத்
தறியவொண் ணாததோர் அண்டம் பதிந்ததே. 16

**ஐந்தாந் தந்திரம் முற்றிற்று**

---

*இத்துடன் 1478-ம் செய்யுளை ஒப்பு நோக்குக.

# ஆறாந் தந்திரம்*

## 1. சிவகுரு தரிசனம்

1573 பத்திப் பணித்துப் [1]பரவு மடிநல்கிச்
சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்துஞ் சதசத்துங் காட்டலாற்
சித்தம் இறையே சிவகுரு வாமே. 1

1574 பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு
நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே
கூசற்ற முத்தியிற் கூட்டலா னாட்டத்த
தாசற்ற சற்குரு அம்பல மாமே. 2

1575 சித்திகள் எட்டொடுந் திண்சிவ மாக்கிய
சுத்தியும் [2]எண்சத்தித் தூய்மையும் யோகத்துச்
சத்தியும் மந்திர சாதக போதமும்
பத்தியும் நாதன் அருளிற் பயிலுமே. 3

1576 எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலாற்
சொல்லார்ந்த நற்குருச் சுத்த சிவமே. 4

1577 தேவனுஞ் சுத்த குருவும் உபாயத்துள்
யாவையும் மூன்று யுனக்கண் டுரையாலே
மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால்
யாவையும் நல்குங் குருபரன் அன்புற்றே. 5

1578 சித்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணு அதிமூடர்

---

பா-ம்— [1]பரவும் படிநல்கிச். [2]எண்முத்தித். *இது வியாமளாகமத்தின் சாரம் என்பர்.

பொய்த்தகு கண்ணான் நமரென்பர் புண்ணியர்
அத்தன் இவனென் றடிபணி வாரே. 6

1579 உண்மையிற் பொய்மை ஒழித்தலும் [1]உண்மைப்
திண்மையும் ஒண்மைச் சிவமாய அவ்வரன் [பார்
வண்மையும் எட்டெட்டுச் சித்தி மயக்கமும்
அண்ணல் அருளன்றி யாரறி வாரே. 7

1580 சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனஅடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே. 8

1581 குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே [2]சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே. 9

1582 சித்தம் யாவையுஞ் சிந்தித் திருந்திடும்
அத்தன் உணர்த்துவ தாகும் அருளாலே
சித்தம் யாவையுந் திண்சிவ மானக்கால்
அத்தனும் அவ்விடத் தேயமர்ந் தானே. 10

1583 தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த
கோனந்தி யெந்தை குறிப்பறி வாரில்லை
வானந்தி யென்று மகிழும் ஒருவற்குத்
தானந்தி யங்கித் தனிச்சுட ராமே. 11

1584 திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை
மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவாய் [3]அருளா விடிலோர வொண்ணாதே. 12

பா-ம்— [1] உண்மைப்பால். [2] சிவமாகிக். [3] வரவிடி.

1585 பத்தியும் ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான்
முத்தியின் ஞான முளைத்தலால் அம்முளை
சத்தி யருள்தரில் தானெளி தாமே. 13

1586 [1]பின்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை எம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு
மன்னெய்த வைத்த மனமது தானே.* 14

1587 சிவமான ஞானந் தெளியவொண் சித்தி
சிவமான ஞானந் தெளிவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத்தே யேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே. 15

1588 அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றுஞ்
செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்
மறந்தொழிந் தேன்மதி [2]மாண்டவர் வாழ்க்கை
பிறிந்தொழிந் தேனிப் பிறவியை நானே. 16

1589 தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்
இருக்கின்ற தன்மையை ஏதும் உணரார்
பிரிக்கின்ற இந்தப் பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே.‡

---

## 2. திருவடிப் பேறு

1590 இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே
பசைந்தெழும் ஈசரைப் பாசத்துள் ஏகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத் துவந்ததே. 1

---

பா-ம்— [1]இன்னெய்த. [2]மாணிடர். *இஃது 1629-ம் பாடலாகவும் வந்துள்ளது. ‡இஃது 1782-ம் பாடலாகவும் வந்துள்ளது.

1591 தாடந்த போதே தலைதந்த எம்மிறை
வாடந்த ஞான வலியையுந் தந்திட்டு
வீடந்த மின்றியே யாள்கென விட்டருட்
பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே. 2

1592 தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு
ஆன சொரூபங்கள் நான்கும் அகற்றின
ஏனைய முத்திரை யீந்தாண்ட நன்னந்தி
தானடி முற்சூட்டித் தாபித்த துண்மையே, 3

1593 உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. 4

1594 குரவன் உயிர்முச் சொரூபமுங் கைக்கொண்
டரிய பொருள்முத் திரையாகக் கொண்டு
பெரிய பிரானடி நந்தி பேச்சற்
றுருகிட என்னையங் குய்யக்கொண் டானே. 5

1595 பேச்சற்ற இன்பத்துப் பேரானந் தத்திலே
மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்துக்
காச்சற்ற சோதி கடன்மூன்றுங் கைக்கொண்டு
வாச்ச புகழ்மாளத் தாள்தந்து மன்னுமே. 6

1596 இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும் மெய்காட் டியவாறும்
விதிவைத்த வாறும் விளம்பவொண் ணாதே. 7

1597 திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்

குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்
[1]கருவழி வாற்றிடக் கண்டுகொண் டேனே. 8

1598 திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்
திருவடி ஞானஞ் சிறைமல [2]மீட்குந்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. 9

1599 மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை
மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்
பால்வைத்த சென்னிப் படரொளி வானவன்
தாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே. 10

1600 கழலார் கமலத் திருவடி என்னும்
நிழல்சேரப் பெற்றேன் நெடுமால் அறியா
அழல்சேரும் அங்கியுள் ஆதிப் பிரானுங்
குழல்சேரும் என்னுயிர்க் கூடுங் குலைத்ததே. 11

1601 முடிமன்ன ராகிமூ வுலகம தாள்வர்
அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்
முடிமன்ன ராய்நின்ற தேவர்கள் ஈசன்
குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. 12

1602 வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே யெரியும் புலன்வழி போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு
மெய்த்தேன் அறிந்தேனவ் வேதத்தின் அந்தமே.

1603 அடிசார லாம்அண்ணல் பாத மிரண்டும்
முடிசார வைத்தனர் முன்னை முனிவர்
படிசார்ந்த இன்பப் பழவடி. வெள்ளக்
குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. 14

பா-ம்— [1]கருவடி மாற்றிடக். [2]நீக்குந்.

1604 மந்திர மாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே. 15

---

## 3. ஞாதுரு ஞான ஞேயம்

1605 நீங்காச் சிவானந்த [1]ஞேயத்தே நின்றிடப்
பாங்கான பாசம் படரா படரினும்
ஆங்கார நீங்கி யதனிலை நிற்கவே
நீங்கா அமுத நிலைபெற லாமே. 1

1606 ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நின்றிடும்
ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகும்
ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை யுற்றவர்
ஆயத்தில் நின்ற அறிவறி வாரே. 2

1607 தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந்
தானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு
தானென்ற பூவை யவனடி சாத்தினால்
நானென் றவனென்கை நல்லதொன் றன்றே, 3

1608 வைச்சன வாறாறு மாற்றி யெனைவைத்து
மெச்சப் பரன்றன் வியாத்துவ மேலிட்டு
நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தால்
அச்சங் கெடுத்தென்னை யாண்டனன் நந்தியே. 4

1609 முன்னை யறிவறி யாதஅம் மூடர்போற்
பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான்
தன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்
தென்னை யறிவித் திருந்தனன் நந்தியே. 5

---

பா-ம்— [1]நேயத்தே.

1610 காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங்
கோணாத போகமுங் கூடாத கூட்டமும்
நாணாத [1]நாணமும் நாதாந்த போதமுங்
காணா யெனவந்து காட்டினன் நந்தியே. 6

1611 மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்நிற்கும்
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே. 7

1612 முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றன்பால்
வைத்த கலைகால் நான்மடங் கான்மாற்றி
உய்த்தவத் தானந்தத் தொண்குரு பாதத்தே
பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே, 8

1613 மேலைச் சொரூபங்கள் மூன்று மிகுசத்தி
பாலித்த முத்திரை பற்றும் [2]பரஞானி
ஆலித்த நட்டமே ஞேயம் புகுந்தற்ற
மூலச் சொரூபன் மொழிஞா துருவனே. 9

---

## 4. துறவு

1614 இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித்
துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்
கறப்பதி காட்டும் அமரர் பிரானே. 1

1615 பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே
மறந்து மலஇருள் நீங்க [3]மறைந்து
சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. 2

---

பா-ம்— [1]நாதமும். [2]பரஞானம். [3]மறைத்துச்.

1616 அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்
உறைவது காட்டகம் உண்பது பிச்சை
துறவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே. 3

1617 நெறியைப்படைத்தான்நெருஞ்சில்படைத்தான்
நெறியில் வழுவின் நெருஞ்சில் முட்பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாயகி லாவே. 4

1618 கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரும்
நாடி வளைந்தது நான்கட வேனலேன்
ஆடல் விடையுடை அண்ணல் திருவடி
கூடுந் தவஞ்செய்த கொள்கையன் றானே. 5

1619 உழவன் உழவுழ வானம் வழங்க
உழவன் உழவினிற் [1]பூத்த குவளை
உழவன் உழத்தியர் கண்ணொக்கும் என்றிட்
டுழவன் அதனை யுழவொழிந் தானே. 6

1620 மேல்துறந் தண்ணல் விளங்கொளி கூற்றுவன்
நாள்துறந் தார்க்கவன் நண்ப னவாவிலி
கார்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்
பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே. 7

1621 நாகமும் ஒன்று படம்ஐந்து நாலது
போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது
ஆக மிரண்டும் படம்விரித் தாட்டொழிந்
தேகப் படஞ்செய் துடம்பிட மாமே. 8

1622 அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரானும்
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்

பா-ம்— [1]பூத்தது வேளை.

சிவன்றாள் பலபல சீவனு மாகும்
நயன்றான் வரும்வழி நாமறி யோமே 9

1623 தூம்பு திறந்தன ஒன்பது வாய்தலும்
ஆம்பற் குழலியின் கஞ்சுளிப் பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே. 10

## 5. தவம்

1624 [1]ஒடுங்கி நிலைபெற்ற வுத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே. 1

1625 எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமுஞ்
செம்மா தவத்தின் செயலின் பெருமையும்
அம்மான் திருவருட் [2]பெற்றவர்க் கல்லா(து)
இம்மா தவத்தின் இயல்பறி யாரே. 2

1626 பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்
மறப்பில ராகிய மாதவஞ் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. 3

1627 இருந்து வருந்தி எழிற்றவஞ் செய்யும்
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே
இருந்திந் திரனே யெவரே வரினுந்
[3]திருந்துந்தஞ் சிந்தை சிவனவன் பாலே. 4

1628 கரந்துங் கரந்திலன் கண்ணுக்குந் தோன்றான்
பரந்த சடையன் பசும்பொன் நிறத்தன்

பா-ம் — [1]ஒடுங்கு [2]பெற்றவ ரல்லால். [3]திருந்துநஞ்.

அருந்தவர்க் கல்லால் அணுகலு மாகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே. 5

1629 பின்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை எம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படும்
மன்னெய்த வைத்த மனமது தானே. 6

1630 அமைச்சரும் ஆனைக் குழாமும் அரசும்
பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே
அமைத்ததோர் ஞானமும் ஆத்தமும் நோக்கி
இமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே. 7

1631 சாத்திரம் ஓதுஞ் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தவப் பார்வை **பசுமரத் தாணிபோல்**
ஆர்த்த பிறவி அகலவிட் டோடுமே. 8

1632 தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டில்
தவம்வேண்டா ஞான சமாதிகை கூடில்
தவம்வேண்டா [1]மச்ச கசமார்க்கத் தோர்க்குத்
தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே. 9

## 6. **தவ நிந்தை

1633 ஓதலும் வேண்டாம் உயிர்க்குயி ருள்ளுற்றுற்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினற்
**போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே.** 1

1634 கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினற்
சத்தமும் வேண்டாஞ் [2]சமாதிகை கூடினற்

*பா—ம்— [1]மச்சகசன் மார்க்கத். [2]சமாதியைக். *இஃது 1586-ம் செய்யுளாகவும் வந்துள்ளது. **சமாதி தூடணம்.*

சுத்தமும் வேண்டாந் துடக்கற்று சிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே. 2

1635 விளைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யுரை செய்வார்
விளைவறி வார்பண்டை [1]மெய்யறஞ் செய்வார்
விளைவறி வார்விண்ணின் மண்ணின்மிக் காரே. 3

1636 கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல்
தேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி
**வாடித் தவஞ்செய்வ தேதவம்** இவைகளைங்
கூாடிற் பலவுல கோரெத் தவரே. 4

1637 மனத்துறை மாகடல் ஏழுங் கைநீந்தித்
தவத்திடை யாளர்தஞ் சார்வத்து வந்தார்
பவத்திடை யாளர் அவர்பணி கேட்கின்
முகத்திடை நந்தியை முந்தலு மாமே. 5

1638 [2]மனத்திடை நின்ற மதிவாள் உருவி
[3]இனத்திடை நீக்கி இரண்டற [4]வீர்த்துப்
[5]புனத்திடை அஞ்சும் போகாமல் மறித்தால்
தவத்திடை யாரொளி தன்னொளி யாமே. 6

1639 ஒத்து மிகவு நின்றானை யுரைப்பது
பத்தி கொடுக்கும் பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுக்கும் முனிவ னெனும்பதஞ்
சத்தான செய்வது தான்தவந் தானே. 7

1640 **இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி**
மலர்தொட்டுக் கொண்டேன் [6]வரும்புனல்
[காணேன்

---

பா—ம் — [1]மெய்யுறஞ். [2]மனத்திலிருந்தீ. [3]மனத்தினை. [4]வீசி. [5]நினைத்த விடத்தே நிலைபெறு மாகில், அனைத்துயிர்க் கெல்லாம் அதிபதி யாமே. [6]வரும்புலன்; வரும்பலன்.

தலைதொட்ட நூல்கண்டு தாழ்ந்ததென் உள்ளந்
தலைதொட்டுக் கண்டேன் தவங்கண்ட வாறே. 8

1641 படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்
கிடரடை யாவண்ணம் ஈசன் அருளும்
இடரடை செய்தவர் மெய்த்தவ நோக்கில்
உடரடை செய்வ தொருமனத் தாமே. 9

1642 ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கும்
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே. 10

1643 பழுக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங்
குழக்கன்று துள்ளியக் கோணியைப் [1] பல்காற்
குழக்கன்று கொட்டிலிற் கட்டவல் லார்க்குள்
இழுக்காது நெஞ்சத் திடவொன்று மாமே. 11

1644 சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்
சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோர் உறவுண்டால்
சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ்
சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே. 12

---

## 7. அருளுடைமையின் ஞானம் வருதல்

1645 பிரானருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையும் உண்டு
பிரானரு ளிற்பெருந் தெய்வமு மாமே. 1

1646 தமிழ்மண் டலம்ஐந்துந் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் [2] திரிவார்

---

பா-ம்— [1] புல்காற். [2] திரிவர்.

அவிழு மனமும்எம் ஆதி யறிவுந்
தமிழ்மண் டலம்ஐந்துந் தத்துவ மாமே. 2

1647 புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதறி வார்சில ஞானிகள்
எண்ணி இரண்டையும் வேரறுத் தப்புறத்
தண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வீரே. 3

1648 முன்னின் றருளு முடிகின்ற காலத்து
நன்னின் றுலகில் நடுவுயி ராய்நிற்கும்
பின்னின் றருளும் பிறவியை நீக்கிடும்
முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே. 4

1649 சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாமை
சிவனருள் [1]கூடின்அச் சிவலோக மாமே. 5

1650 புண்ணியன் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவ ராவதும் வானவ ராவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே. 6

1651 காயத்தே ரேறி மனப்பாகன் கைகூட்ட
மாயத்தே ரேறி மயங்கு மவையுணர்
நேயத்தே ரேறி நிமலன் அருள்பெற்றால்
ஆயத்தே ரேறி யவனிவ னாமே. 7

1652 அவ்வுல கத்தே [2]பிறக்கில் உடலொடும்
அவ்வுல கத்தே [3]யருந்தவர் நாடுவர்
அவ்வுல கத்தே யரனடி கூடுவர்
அவ்வுல கத்தே யருள்பெறு வாரே.* 8

---

*பா—ம்— [1]கூறில். [2]பிறந்தவ். [3]அருந்தவம் *இஃது 1869-ம் பாடலாகவும் வந்துள்ளது.*

1653 கதிர்கண்ட காந்தங் கனலின் வடிவாம்
மதிகண்ட காந்தம் மணிநீர் வடிவாஞ்
சதிகொண்ட சாக்கி யெரியின் வடிவாம்
எரிகொண்ட ஈசன் எழில்வடி வாமே. 9

1654 நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்
தேடுவன் தேடிச் சிவபெரு மானென்று
கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல்ல
வீடு மளவும் விடுகின் றிலேனே. 10

---

## 8. அவவேடம்

1655 ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்
ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் காணீர் சிவனவன் தாள்களே. 1

1656 ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
ஈனம தேசெய் திரந்துண் டிருப்பினும்
மான நலங்கெடும் [1]வையகம் பஞ்சமாம்
ஈனவர் வேடங் கழிப்பித்தல் இன்பமே. 2

1657 இன்பமுந் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்காம்
என்ப இறைநாடி நாடோறும் நாட்டினின்
மன்பதை செப்பஞ் செயின்வையம் வாழுமே. 3

1658 இழிகுலத் தோர்வேடம் பூண்பர்மே லெய்த
வழிகுலத் தோர்வேடம் பூண்பர்தே வாகப்
பழிகுலத் தாகிய பாழ்சண்ட ராஞர்
கழிகுலத் தோர்கள் களையப்பட் டோரே. 4

பாடம்— [1]அப்புவி யாதலால்.

1659 பொய்த்தவஞ் செய்வார் புகுவர் நரகத்துப்
பொய்த்தவஞ் செய்தவர் புண்ணிய ராகாரேற்
பொய்த்தவம்மெய்த்தவம்போகத்துட்பேரக்கியஞ்
சத்திய ஞானத்தால் தங்குந் தவங்களே. 5

1660 பொய்வேடம் பூண்பர் போசித்தல் பயனாக
மெய்வேடம்பூண்போர்மிகுபிச்சைகைக்கொள்வர்
பொய்வேடம் மெய்வேடம் போலவே பூணினும்
உய்வேட மாகும் உணர்ந்தறிந் தோர்க்கே. 6

## 9. தவவேடம்

1661 தவமிக் கவரே தலையான வேடர்
அவமிக் கவரே யதிகொலை வேடர்
அவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந்
தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே. 1

1662 பூதி [1]யணிவது சாதன மாதியிற்
காதணி தாம்பிர குண்டலங் கண்டிகை
ஓதி யவர்க்கும் உருத்திர சாதனந்
தீதில் சிவயோகி சாதனந் தேரிலே. 2

1663 யோகிக் கிடுமது வுட்கட்டுக் கஞ்சுளி
தோகைக்குப் பாசத்துச் சுற்றுஞ் சடையதொன்
றாகத்து நீறணி யாங்கக் கபாலஞ்
சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே. 3

1664 காதணி குண்டலங் கண்டிகை [2]நாதமும்
ஊதுநற் சங்கும் உயர்கட்டி கப்பரை
ஏதமில் பாதுகம் யோகாந்த மாதனம்
ஏதமில் யோகபட் டந்தண்டம் ஈரைந்தே. 4

பா-ம்— [1]யணிந்து. [2]நாகமும்; நீறும்.

## 10. திருநீறு

1665 நூலுஞ் சிகையும் உணரார்நின் மூடர்கள்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
பாலொன்றும் அந்தணர் பார்ப்பார் பரமுயிர்
ஓரொன் றிரண்டெனில் ஓங்காரம் ஓதிலே 1

1666 கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே. 2

1667 அரசுட லுலத்தி யாகும்அக் காரம்
விரவு கனலில் வியனுரு மாறி
நிரவயன் நின்மலன் தாள்பெற்ற நீதர்
உருவம் பிரமன் உயர்குல மாகுமே. 3

---

## 11. ஞான வேடம்

1668 ஞானமி லார்வேடம் பூண்டும் நரகத்தர்
ஞானமுள் ளார்வேடம் இன்றெனில் நன்முத்தர்
ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்பால்
ஞான முளவேட நண்ணிநிற் பாரே[1]. 1

1669 புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை
நன்ஞானத்தோர்வேடம்[2]பூணார்அருள்நண்ணித்
துன்ஞானத் தோர்சம யத்துரி சுள்ளோர்
பின்ஞானத் தோரொன்றும் பேசகில் லாரே. 2

1670 சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கும்
அவமான சாதனம் ஆகாது தேரில்

பா-ம்— [1]நிற்போரே. [2]பூண்பர் அருள் நண்ணத்.

அவமா மவர்க்கது சாதன நான்கும்
உவமான மில்பொருள் உள்ளுற லாமே. 3

1671 சுத்தித் திரிவர் [1]கழுவடி நாய்போற்
கொத்தித் திரிவர் குரக்களி ஞானிகள்
ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே. 4

1672 அடியா ரவரே யடியா ரலாதார்
அடியாரு மாகாரவ் வேடமு மாகார்
அடியார் சிவஞான மானது பெற்ருேர்
அடியா ரலாதார் அடியார்கள் அன்றே. 5

1673 ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாந்
தானுற்ற வேடமுந் தற்சிவ யோகமே
ஆனவவ் வேடம் அருண்ஞான சாதனம்
ஆனது மாமொன்றும் ஆகா தவனுக்கே. 6

1674 ஞானத்தி னுற்பத நண்ணுஞ் சிவஞானி
தானத்தில் வைத்த தனியால யத்தனும்
மோனத்த னுதலின் முத்தனுஞ் சித்தனும்
ஏனைத் தவசி இவனென லாகுமே. 7

1675 [2]தானற்ற தன்மையுந் தானவ னுதலும்
ஏனைய வச்சிவ மான இயற்கையுந்
தானுறு சாதக முத்திரை சாத்தலு
மேனமும் நந்தி பதமுத்தி பெற்றதே. 8

## 12. சிவ வேடம்

1676 அருளால் அரனுக் கடிமைய தாகிப்
[3]பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி

பா-ம்— [1]கழுகடி. [2]தானன்றித். [3]பொருளார்ந் தன்னுடற் பொற்பத னுடி.

இருளான தின்றி யிருஞ்செயல் அற்றோர்
தெருளாம் அடிமைச் சிவவேடத் தோரே. 1

1677 உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா
உடல்கழன் றால்வேடம் உடனே கழலும்
உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள் ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே. 2

1678 மயலற் றிருளற்று மாமன மற்றுக்
கயலுற்ற கண்ணியர் கையிணக் கற்றுத்
தயலற் றவரோடுந் தாமே தாமாகிச்
செயலற் [1]றிருப்பார் சிவவேடத் தாரே. 3

1679 ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின்
வேடங்கொண் டென்செய்வீர் வேண்டா மனிதரே
நாடுமின் நந்தியை நம்பெரு மான்தன்னைத்
தேடும்இன் பப்பொருள் சென்றெய்த லாமே. 4

---

## 13. அபக்குவன்

1680 குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் [2]கொள்வார்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே. 1

1681 மனத்தில் எழுந்ததோர் மாயக்கண் ணாடி
நினைப்பின் அதனின் நிழலையுங் காணார்
வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார்
புறக்கடை இச்சித்துப் போகின்ற வாறே. 2

1682 ஏயெனில் என்னென மாட்டார் பிரசைகள்
வாய்முலை பெய்ய மதுரநின் றூறிடும்

பாடம்— [1] றிருந்தார். [2] கொள்வர்; கொள்வோர்.

தாய்முலை யாவ தறியார் தமருளோர்
ஊனிலை செய்யும் உருவிலி தானே. 3

1683 வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து
நீயொன்று செய்யல் உறுதி நெடுந்தகாய்
தீயென்றிங் குன்னைத் தெளிவன் தெளிந்தபின்
பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரே. 4

1684 பஞ்சத் துரோகத்திப் பாதகர் தம்மை
[1]யஞ்சச் சமயத்தோர் வேந்தன் அருந்தண்டம்
விஞ்சச்செய் திப்புவி வேறே விடாவிடிற்
பஞ்சத்து ளாய்ப்புவி முற்றும்பா ழாகுமே. 5

1685 தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கன்மஞ்
சிவத்திடை நின்றது தேவர் அறியார்
தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்
பவத்திடை நின்றதோர் பாடது வாமே. 6

1686 கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலும்
தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலும்
பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்
என்றிவை இறைபால் இயற்கை அல்லவே, 7

1687 விடிவ தறியார் வெளிகாண மாட்டார்
விடியில் வெளியில் விழிக்கவு மாட்டார்
கடியதோ ருண்ணிமை கட்டுமின் காண்மின்
விடியாமை காக்கும் விளக்கது வாமே. 8

1688 வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப்
பெத்த மறமுத்த னாகிப் பிறழ்வுற்றுத்
தத்துவ முன்னித் தலைப்படா தவ்வாறு
பித்தான சீடனுக் கீயப் பெருதானே. 9

பா-ம்— [1]பஞ்சச்.

1689 மன்னும் மலம்ஐந்தும் மாற்றும் வகையோரான்
துன்னிய காமாதி தோயுந் தொழில்நீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதான்
அன்னிய னாவன் அசற்சீட னாமே. 10

## 14. பக்குவன்

1690 தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியறி வார்நல் வழியறி வாளர்
அழிவறி வார்மற்றை யல்லா தவரே. 1

1691 பதைத்தொழிந் தேன்பர மாவுனை நாடி
யதைத்தொழிந் தேன்இனி யாரொடுங் கூடேன்
சிதைத்தடி யேன்வினை சிந்தனை தீர
உதைத்துடை யாயுகந் தாண்டரு ளாயே. 2

1692 பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை
விதைக்கின்ற வித்தினை மேல்நின்று நோக்கிச்
சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி
இசைக்கின்ற அன்பருக் கீயலு மாமே. 3

1693 கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக
உள்ள [1]பொருளுடல் ஆவி யுடன்ஈக
எள்ளத் தனையும் இடைவிடா தேநின்று
தெள்ளி யறியச் சிவபதந் தானே. 4

1694 சோதி விசாகந் தொடர்ந்திரு தேள்நண்டு
ஓதிய நாளே உணர்வது தானென்று
நீதியுள் நீர்மை நினைந்தவர்க் கல்லது
ஆதியும் ஏதும் அறியகி லானே. 5

பா-ம்— [1]வுடல்பொருள்.

1695 தொழிலார மாமணித் தூய்தான சிந்தை
எழிலால் இறைவன் இடங்கொண்ட போதே
விழலார் விறலாம் வினையது போகக்
கழலார் திருவடி கண்டரு ளாமே. 6

1696 சாத்திக னுய்ப்பர தத்துவந் தானுன்னி
ஆத்திக பேத நெறிதோற்ற மாகியே
ஆர்த்த பிறவியி னஞ்சி யறநெறி
சாத்தவல் லானவன் சற்சீட னாமே. 7

1697 சத்தும் அசத்துமெவ் வாறெனத் தானுன்னிச்
சித்தை யுருக்கிச் சிவனருள் [1]கைகாட்டப்
பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச்
சத்தியில் இச்சைத் தகுவோன்சற் சீடனே. 8

1698 அடிவைத் தருளுதி யாசானின் றுன்னு
அடிவைத்த மாமுடி மாயப் பிறவி
அடிவைத்த காய அருட்சத்தி யாலே
அடிபெற்ற ஞானத்த னுசற்று ளோனே. 9

1699 சீராரு ஞானத்தின் இச்சை செலச்செல்ல
வாராத காதல் குருபரன் பாலாகச்
சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோன்
ஆராயும் ஞானத்த னுமடி வைக்கவே. 10

1700 உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி
இணக்கிற் பராபரத் தெல்லையுள் இட்டுக்
குணக்கொடு தெற்குத் தரபச்சி மங்கொண்
டுணர்த்துமி னுவுடை யாள்தன்னை யுன்னியே. 11

1701 இறையடி தாழ்ந்தை வணக்கமும் எய்திக்
குறையது கூறிக் குணங்கொண்டு [2]போற்றச்

---

பா-ம்— [1]கை காட்டிப். [2]போற்றி.

சிறையுடல் நீயறக் காட்டிச் சிவத்தோ
டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே. 12

1702 வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புனல்வழி மாற்றிச்சித் தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீட ளுமே. 13

1703 சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்தல்
அற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே. 14

ஆருந் தந்திரம் முற்றிற்று.

---

# ஏழாந் தந்திரம்*

## 1. ஆறுஆதாரம்

1704 நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறுங்
கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கண் டாங்கே முடிந்து முதல்இரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே. 1

1705 ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசத்தி
போதா லயத்த விகாரந் தனிற்போத
மேதாதி யாதார மீதான உண்மையே. 2

1706 மேலென்றுங் கீழென் றிரண்டறக் காணுங்கால்
தானென்றும் நானென்றுந் தன்மைகள் ஓராறும்
பாரெங்கு மாகிப் பரந்த பராபரங்
காரொன்று கற்பக மாகிநின் றானே. 3

1707 ஆதார சோதனை யானடி சுத்திகள்
மேதாதி யீரெண் [1]கலாந்தத்து விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்[2]கெட்டான் றன்சக மார்க்கமே. 4

1708 மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி
ஆதார சோதனை [3]அத்துவ சோதனை
தாதார மாகவே தானெழச் சாதித்தால்
ஆதாரஞ் [4]செய்போக மாவது காயமே. 5

1709 ஆறந்த முங்கூடி யாகும் உடம்பினிற்
கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மின்

பா—ம்— [1]கலந்தது. [2]கெட வாஞ்சக. [3]அத்துவா. [4]செல்போக. *இது காலோத்தராகமத்தின் சாரம் என்பர்.

ஆறிய வக்கர மைம்பதின் மேலே
ஊறிய வாதாரத் தோரெழுத் தாமே. 6

1710 ஆகும் உடம்பும் அழிக்கின்ற அவ்வுடல்
போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்
ஆகிய வக்கரம் ஐம்பது தத்துவம்
ஆகும் உடம்புக்கும் ஆறந்த மாமே. 7

1711 ஆயு மலரின் அணிமலர் மேலது
வாய இதழும் பதினாறும் அங்குள
தூய அறிவு சிவானந்த மாகிப்போய்
மேய அறிவாய் விளைந்தது தானே.* 8

---

## 2. அண்ட லிங்கம்

1712 இலிங்கம தாவ தியாரும் அறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக எடுத்த துலகே. 1

1713 உலகில் எடுத்தது சத்தி [1]முதலா
உலகில் எடுத்தது சத்தி வடிவாய்
உலகில் எடுத்தது சத்தி குணமாய்
உலகம் எடுத்த சதாசிவன் தானே. 2

1714 போகமும் முத்தியும் புத்தியுஞ் சித்தியும்
ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலாம்
ஏகமும் நல்கி யிருக்குஞ் சதாசிவம்
ஆகம வத்துவா வாறுஞ் சிவமே. 3

1715 ஏத்தினர் எண்ணிலி தேவரெம் ஈசனை
வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென்

---

பா—ம்— [1]முதலாய். *இஃது 2359-ம் பாடலாகவும் வந்துள்ளது.

முர்த்தனர் அண்டங் கடந்தப் புறநின்று
காத்தனன் என்னுங் கருத்தறி யாரே. 4

1716 ஒண்சுட ரோன்அயன் மால்பிர சாபதி
[1]ஒண்சுட ரான இரவியோ டிந்திரன்
கண்சுட ராகிக் கலந்தெங்குந் தேவர்கள்
தண்சுட ராயெங்குந் தற்பர மாமே. 5

1717 தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்
மாபரத் துண்மை வழிபடு வாரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்கும்
பூவகத் துள்நின்ற பொற்கொடி யாகுமே. 6

1718 [2]தூய விமானமுந் தூலம தாகுமால்
ஆய சதாசிவ மாகுநற் சூக்குமம்
[2]ஆய பலிபீடம் பத்திர லிங்கமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே. 7

1719 முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமும்
கொத்துமக் கொம்பு சிலைநீறு கோமளம்
அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்
உய்த்ததின் சாதனம் பூமண லிங்கமே. 8

1720 துன்றுந் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்
கன்றிய [3]செம்பு கனவிர தஞ்சலம்
வன்திறல் செங்கல் வடிவுடை வில்லம்பொன்
றென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே. 9

1721 மறையவர் அர்ச்சனை வண்படி கந்தான்
இறையவர் அர்ச்சனை யேயபொன் னாகுங்
குறைவிலா [4]வசியர்க்குக் கோமள மாகுந்
துறையுடைச் சூத்திரர் தொல்வாண லிங்கமே. 10

---

பா—ம்— [1]எண்சுட. [2]பாய. [3]செப்புக். [4]வைசியர்க்குக்.

1722 அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி
எதுவுண ராவகை நின்றனன் ஈசன்
புதுவுணர் வான புவனங்கள் எட்டும்
இதுவுணர்ந்தென்னுடல்கோயில்கொண்டானே.

1723 அகலிட மாயறி யாமல் அடங்கும்
உகலிட மாய்நின்ற வூனத னுள்ளே
பகலிட மாமுனம் பாவ விநாசன்
புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே. 12

1724 போது புனைகழல் பூமிய தாவது
மாது புனைமுடி வானக மாவது
நீதியுள் ஈசன் உடல்விசும் பாய்நிற்கும்
ஆதி யுறநின்ற தப்பரி சாமே. 13

1725 தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாந்
திரைபொரு நீரது மஞ்சன சாலை
வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை
கரையற்ற நந்தி கலையுந்திக் காமே. 14

## 3. பிண்ட லிங்கம்

1726 **[1]மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்**
[1]மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
[1]மானுட ராக்கை வடிவு சதாசிவம்
[1]மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே. 1

1727 உலந்திலர் பின்னும் உளரென நிற்பர்
நிலந்தரு நீர்தெளி யூனவை செய்யப்
புலந்தரு பூதங்கள் ஐந்தும்ஒன் றாக
வலந்தரு தேவரை வந்திசெய் யீரே. 2

---

பா—ம்— [1]மானிட.

1728 கோயில்கொண் டன்றே குடிகொண்ட ஐவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்
தாயில்கொண் டாற்போல் தலைவனென் னுட்புக
வாயில்கொண் டீசனு மாளவந் தானே. 3

1729 கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை
வாயில்கொண் டானடி நாடிகள் பத்துள
பூசைகொண் டான்புல னைந்தும் பிறகிட்டு
வாயில்கொண் டானெங்கள் மாநந்தி தானே. 4

---

## 4. சதாசிவ லிங்கம்

1730 கூடிய பாதம் இரண்டும் படிமிசை
பாடிய கையிரண் [1]டெட்டும் பரந்தெழுந்
தேடு முகம்ஐந்து [2]செங்கணின் மூவைந்து
நாடுஞ் சதாசிவ நல்லொளி முத்தே. 1

1731 வேதா நெடுமால் உருத்திரன் மேலீசன்
மீதான ஐம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியு மந்தச் சிவனொடுஞ்
சாதா ரணமாஞ் சதாசிவந் தானே. 2

1732 ஆகின்ற சத்தியின் உள்ளே [3]கலைநிலை
ஆகின்ற சத்தியின் உள்ளே கதிரெழ
ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்
ஆகின்ற சத்தியுள் அத்திசை பத்தே. 3

1733 அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்
அத்திசைக் குள்ளே அமர்ந்தன நால்வேதம்
அத்திசைக் குள்ளே அமர்ந்த சரியையோ
டத்திசைக் குள்ளே அமர்ந்த சமயமே. 4

---

பா-ம்— [1]டெட்டுப். [2]செங்கையின், [3]பல்கலை,

1734 சமயத் தெழுந்த அவத்தையீ ரைந்துள
சமயத் தெழுந்த இராசியீ ராறுள
சமயத் தெழுந்த [1]சதிரீரா றெட்டுள
சமயத் தெழுந்த சதாசிவந் தானே. 5

1735 நடுவு கிழக்குத் தெற்குத் தரமேற்கு
நடுவு படிகநற் குங்கும வன்னம்
அடைவுள அஞ்சனஞ் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை அஞ்சே. 6

1736 அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள
அஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பியென்
நெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே. 7

1737 சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சத்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்
சத்தி சிவதத் துவமுப்பத் தாறே. 8

1738 தத்துவ மாவ தருவஞ் சராசரந்
தத்துவ மாவ துருவஞ் சுகோதயந்
தத்துவம் எல்லாஞ் சகலமு மாய்நிற்குந்
தத்துவ மாகுஞ் சதாசிவன் தானே. 9

1739 கூறுமி னூறு சதாசிவன் எம்மிறை
வேறோர் உரைசெய்து மிகைப்பொரு ளாய்நிற்கு
மேறுரை செய்தொழில் வானவர் தம்மொடு
மாறுசெய் வானென் மனம்புகுந் தானே. 10

1740 இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவுஞ்
சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையும்

பா-ம் — [1] சரீரமா.

அருளார்ந்த சிந்தையெம் ஆதிப் பிரானைத்
தெருளார்ந்தென் உள்ளே தெளிந்திருந் தேனே.

1741 சத்திதான் நிற்கின்ற ஐம்முகஞ் சாற்றிடில்
[1]உத்தமம் வாம [2]முரையத் திருந்திடுந்
[3]தத்துவம் பூருவந் தற்புரு டன்[4]சிர
[5]மத்தகு கோர மகுடத்தீ சானனே. 12

1742 நாணுநல் லீசான நடுவுச்சி தானாகுந்
தாணுவின் றன்முகந் தற்புருட மாகுங்
காணும் அகோரம் இருதயங் குய்யமா
மாணுற வாமமாஞ் சத்திநற் பாதமே. 13

1743 நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவ சங்கண்ணும்
வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாஞ்
செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னாகுஞ்
செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே. 14

1744 எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே. 15

1745 சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடுஞ்
சத்தி அறுகோணஞ் சயனத்தை யுற்றிடுஞ்
சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடுஞ்
சத்தி யுருவாஞ் சதாசிவன் தானே. 16

1746 மானந்தி எத்தனை காலம் அழைக்கினுந்
தானந்தி யஞ்சின் தனிச்சுட ராய்நிற்குங்
கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்
மேனந்தி ஒன்பதின் மேவிநின் றானே. 17

---

பா-ம்— [1]உத்தரம். [2]முரைத்திடும் சத்தி: [3]பச்சிமம். [4]னுரை. [5]தெக்கி லகோரம் தென்கிழக் கீசனே.

1747 ஒன்றிய வாறும் உடலி னுடன்கிடந்
தென்றுமெம் மீச னடக்கும் இயல்பது
தென்றலைக் கேறத் திருந்து சிவனடி
நின்று தொழுதேனென் னெஞ்சத்தி னுள்ளே. 18

1748 உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்
கொணர்ந்தேன் குவலயங் கோயிலென் னெஞ்சம்
புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே
பணிந்தேன் [1]பகலவன் பாட்டு மொலியே. 19

1749 ஆங்கவை மூன்றினும் ஆரழல் வீசிடத்
தாங்கிடும் ஈரேழு தானடு வானதில்
ஓங்கிய ஆதியும் அந்தமு மாமென
ஈங்கிவை தம்முடல் இந்துவு மாமே. 20

1750 தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாந்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே. 21

1751 ஆரும் அறியார் அகார மவனென்று
பாரு முகாரம் பரந்திட்ட நாயகி
தாரம் இரண்டுந் தரணி முழுதுமாய்
மாறி யெழுந்திடும் ஓசைய தாமே. 22

1752 இலிங்கநற் பீடம் இசையும்ஓங் காரம்
இலிங்கநற் கண்ட நிறையு மகாரம்
இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்
இலிங்க மகார நிறைவிந்து நாதமே. 23

---

பா—ம்— [1]பகலவன் றன்.

## 5. ஆத்ம லிங்கம்

1753 அகார முதலா யனைத்துமாய் நிற்கும்
உகார முதலா யுயிர்ப்பெய்து நிற்கும்
அகார வுகாரம் இரண்டு மறியில்
**அகார வுகாரம் இலிங்கம தாமே.** 1

1754 ஆதார மாதேய மாகின்ற விந்துவு
மேதாதி நாதமு மீதே விரிந்தன
ஆதார விந்து அதிபீட நாதமே
போதாவி லிங்கப் புணர்ச்சிய தாமே. 2

1755 **சத்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்**
**சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமஞ்**
சத்தி சிவமாம் இலிங்கஞ் சதாசிவஞ்
சத்தி [1]சிவமாகுந் தாபரந் தானே. 3

1756 தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம்
வானே ரெழுகின்ற ஐம்ப தமர்ந்திடம்
பூநே ரெழுகின்ற பொற்கொடி தன்னுடன்
தானே ரெழுகின்ற வகாரம தாமே. 4

1757 விந்துவும் நாதமும் மேவு மிலிங்கமாம்
விந்துவ தேபீட நாத மிலிங்கமாம்
அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே. 5

1758 சத்திநற் பீடந் தகுநல்ல ஆன்மா
சத்திநற் கண்டந் தகுவித்தை தானுகுஞ்
சத்திநல் லிங்கந் தகுஞ்சிவ தத்துவஞ்
சத்திநல் லான்மாச் சதாசிவந் தானே. 6

1759 மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை
மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது

---

பா-ம்— [1] சிவமாந்.

நலம்புகுந் தென்னொடு நாதனை நாடும்
இலம்புகுந் தாதியு மேற்கொண்ட வாறே. 7

1760 பராபரன் எந்தை பனிமதி சூடி
தராபரன் தன்னடி யார்மனக் கோயிற்
சிராபரன் தேவர்கள் சென்னியின் மன்னு
மராமரன் மன்னி மனத்துறைந் தானே. 8

1761 பிரானல்ல நாமெனிற் பேதை யுலகங்
குராலென்னு மென்மனங் கோயில்கொள் ஈசன்
அராநின்ற செஞ்சடை அங்கியும் நீரும்
பொராநின் றவர்செய்யப் புண்ணியன் தானே. 9

1762 அன்றுநின் றுன்கிடந் தானவன் என்று
சென்றுநின் றெண்டிசை ஏத்துவர் தேவர்கள்
என்றுநின் றேத்துவன் எம்பெரு மான்தன்னை
ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிருந் தானே. 10

---

## 6. ஞான லிங்கம்

1763 உருவும் அருவும் உருவோ டருவும்
மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங்
குருவு மெனநிற்குங் கொள்கைய னுகுந்
தருவென நல்குஞ் சதாசிவன் தானே. 1

1764 நாலான கீழ துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிகநாப்பண்
நாலான ஒன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் தானே. 2

1765 தேவர் பிரானைத் திசைமுக நாதனை
நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை
ஏவர் பிரானென் றிறைஞ்சுவா ரவ்வழி
யாவர் பிரானடி அண்ணலு மாமே. 3

1766 வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற
ஆண்டொரு திங்களும் நாளும் அளக்கின்ற
காண்டகை யானொடுங் கன்னி யுணரினும்
மூண்டகை மாறினும் ஒன்றது வாமே. 4

1767 ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வம்
நீதியுள் மாதெய்வ நின்மலன் எம்மிறை
பாதியுள் மன்னும் பராசத்தி யாமே. 5

1768 சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபதந் தோயாத தூவொளி
அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்
ஒத்தவு மாமீசன் தானான வுண்மையே. 6

1769 கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்றும்
எழுந்திடங் காணில் இருக்கலு மாகும்
பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையு ளானே. 7

1770 எந்தை பரமனும் என்னம்மை கூட்டமும்
முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம்பெருங் கன்னியை
உந்தியின் மேல்வைத் துகந்திருந் தானே. 8

1771 சத்தி சிவன்விளை யாட்டாம் உயிராகி
ஒத்த இருமாயா கூட்டத் திடையூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிறிவித்துச்
சித்தம் புகுந்து சிவமக மாக்குமே. 9

1772 **சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி**
சத்தி சிவமுமாஞ் [1]சிவன்சத் தியுமாகுஞ்

---

பா-ம் — [1] *சத்தி சிவமாகும்.*

சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்திதான் என்றுஞ் சமைந்துரு வாகுமே. 10

---

## 7. சிவ லிங்கம்

1773 குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்
பரக்கின்ற [1]காற்றுப் பயில்கின்ற தீயும்
நிரைக்கின்ற வாறிவை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. 1

1774 வரைத்து வலஞ்செய்யு [2]மாறிங்கொன் றுண்டு
நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி
உரைத்தவன் நாமம் உணரவல் லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே. 2

1775 ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நானவ னைத்தொழ
வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற
அன்றென் றருள்செய்யும் ஆதிப் பிரானே. 3

1776 மலர்ந்த அயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. 4

1777 மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்
றாவி எழுமள வன்றே உடலுற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. 5

---

பா—ம்— [1] காற்றும். [2] மாறு மிங்கொன்.

## 8. சம்பிரதாயம்

1778 உடல்பொருள் ஆவி [1]உதகத்தால் கொண்டு
[2]படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே. 1

1779 உயிருஞ் சரீரமும் ஒண்பொரு ளான
வியவார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமுஞ் சிற்சத்தி யாதிக்கே
உயலார் குருபரன் உய்யக்கொண் டானே. 2

1780 பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற வப்பொருள்
[3]உச்சிக்குங் கீழது வுண்ணாக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. 3

1781 [4]பிட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை
[5]யொட்டடித் துள்ளமர் மாசெலாம் [6]வாங்கித்
தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே. 4

1782 தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்
இருக்கின்ற தன்மையை யேதும் உணரார்
பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே. 5

1783 கூடும் உடல்பொருள் ஆவி குறிக்கொண்டு
நாடி யடிவைத் தருண்ஞான சத்தியால்
பாடல் உடலினிற் பற்றற நீக்கியே
கூடிய தானவ னுங்குளிக் கொண்டே. 6

---

பா-ம்— [1]உலகத்தார். [2]படர்வினைப். [3]உச்சிக்குக். [4]பெட்டடித். [5]பொட்டடித்துள்ளமால் சொல்லாமல். [6]வாங்கிப்பின்.

1784 கொண்டா னடியேன் அடிமை குறிக்கொள்ளக்
கொண்டான் உயிர்பொருள் காயக் குழாத்தினைக்
கொண்டான் பலமுற்றுந் தந்தவன் கோடலாற்
கொண்டா னெனவொன்றுங் கூறகி லேனே. 7

1785 குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி
நெறிக்கும் பிராணன் நிலைபெற்ற சீவன்
பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை
[1]பிறக்க அறியாதார் பேயுடன் ஒப்பரே. 8

1786 உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே.* 9

1787 காயப் பரப்பில் அலைந்து துரியத்துச்
[2]சால விரிந்து குவிந்து சகலத்தில்
ஆயவவ் வாறு யடைந்து திரிந்தோர்க்குத்
தூய அருள்தந்த நந்திக்கென் சொல்வதே. 10

1788 நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென வூனுயிர் என்ன வுடனின்று
வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென இன்பந் திளைக்கின்ற வாறே. 11

1789 அவனும் அவனும் அவனை யறியார்
அவனை யறியில் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை யறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே. 12

1790 நானிது தானென நின்றிவ னாடோறும்
ஊனிது தானுயிர் போலுணர் வானுளன்

பா—ம்— [1]பிறிக்க. [2]சாய. *இஃது 2938-ம் பாடலாகவும் வந்துள்ளது.

வானிரு மாமுகில் போற்பொழி வானுளன்
நானிது வம்பர நாதனு மாமே. 13

1791 பெருந்தன்மை தானென யானென வேறாய்
இருந்தது மில்லைய தீசன் அறியும்
பொருந்தும் உடலுயிர் போலுமை மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே. 14

## 9. திருவருள் வைப்பு

1792 இருபத மாவ திரவும் பகலும்
உருவது வாவ [1] துயிரும் உடலும்
அருளது வாவ தறமுந் தவமும்
பொருளது வுள்நின்ற போகம தாமே. 1

1793 காண்டற் கரியன் கருத்திலன் நந்தியுந்
தீண்டற்குஞ் சார்தற்குஞ் சேயனுத் தோன்றிடும்
வேண்டிக் கிடந்து விளக்கொளி யானெஞ்சம்
ஈண்டுக் கிடந்தங் கிருளறு மாமே. 2

1794 குறிப்பினின் உள்ளே குவலயந் தோன்றும்
வெறுப்பிருள் நீங்கில் விகிர்தனும் நிற்குஞ்
செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடில்
அறிப்புறு காட்சி அமரரு மாமே. 3

1795 தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞகன் எம்மிறை
ஆர்ந்தறி வாரறி வேதுணை யாமெனச்
சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே. 4

1796 தானே யறியும் வினைகள் அழிந்தபின்
நானே யறிகிலன் நந்தி யறியுங்கொல்

பா—ம்— [1] துடலும் உயிரும்.

ஊனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின்
தேனே யனையனந் தேவர் பிரானே. 5

1797 நானறிந் தன்றே யிருக்கின்ற [1]ஈசனை
வானறிந் தாரறி யாது மயங்கினர்
ஊனறிந் துள்ளே யுயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறி யான்பின்னை யாரறி வாரே. 6

1798 அருளெங்கு மான அளவை யறியார்
அருளை நுகரமு தானதுந் தேரார்
அருளெங் கருமத் ததிருக்க முன்னோர்
அருளெங்குங் கண்ணான தாரறி வாரே. 7

1799 அறிவில் அணுக அறிவது நல்கிப்
பொறிவழி யாசை புகுத்திப் புணர்ந்திட்
டறிவது வாக்கி அடியருள் நல்குஞ்
செறிவொடு நின்றார் சிவமாயி னாரே. 8

1800 அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளில் [2]அழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால் என்நந்தி யகம்புகுந் தானே. 9

1801 அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி
அருளால் அடிபுனைந் தார்வமுந் தந்திட்
டருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால் என்நந்தி யகம்புகுந் தானே. 10

1802 பாசத்தை விட்ட தருளந்தப் பாசத்தின்
நேசத்தை விட்ட தருளந்த நேசத்திற்
கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலையரு ளாமே. 11

---

*பா-ம்— [1] ஈசனை. [2] இழிந்திளைப் பாற்றி.*

1803 பிறவா நெறிதந்த பேரரு ளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி
அறவாழி அந்தணன் ஆதிப் பராபரன்
உறவாகி வந்தென் உளம்புகுந் தானே. 12

1804 அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே
அகம்புகுந் துந்தெரி யானரு ளில்லோர்க்
ககம்புகுந் தானந்த மாக்கிச் சிவமாய்
அகம்புகுந் தானந்தி யானந்தி யாமே. 13

1805 ஆயும் அறிவோ டறியாத மாமாயை
ஆய கரணம் படைக்கும்ஐம் பூதமு
மாய பலவிந் திரிய மவற்றுடன்
ஆய வருளைந்து மாமருட் செய்கையே. 14

1806 அருளே சகலமு மாய பவுதிகம்
அருளே சராசர மாய வமலமே
இருளே வெளியே யெனுமெங்கும் ஈசன்
அருளே சகளத்த னன்றியின் றாமே. 15

1807 சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறு
நவமவை யாகி நடிப்பவன் தானே. 16

1808 **அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா
அருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்றும் அரனே**
இருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்றாத்
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே.

1809 தானே படைத்திடுந் தானே அளித்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனு மாமே. 18

1810 தலையான நான்குந் தனதரு வாகும்
அலையா வருவுரு வாகுஞ் சதாசிவம்
நிலையான கீழ்நான்கு நீடுரு வாகுந்
துலையா இவைமுற்று மாயல்ல தொன்றே. 19

1811 ஒன்றது வாலே உலப்பிலி தானாகி
நின்றது தான்போல் உயிர்க்குயி ராய்நிலை
துன்றி யவையல்ல வாகுந் துணையென்ன
நின்றது தான்விளை யாட்டென் றுள்நேயமே. 20

1812 நேயத்தே நின்றிடும் நின்மலன் சத்தியோ
டாயக் குடிலையுள் நாதம் அடைந்திட்டுப்
போயக் கலைபல வாகப் புணர்ந்திட்டு
வீயத் தகாவிந்து வாக விளையுமே. 21

1813 விளையும் பரவிந்து தானே வியாபி
விளையுந் தனிமாயை மிக்கமா மாயை
கிளையொன்று தேவர் கிளர்மனு வேதம்
அளவொன் றிலாவண்ட கோடிக ளாமே. 22

---

## 10. அருளொளி

1814 அருளிற் றலைநின் றறிந்தழுந் தாதார்
அருளிற் றலைநில்லார் ஐம்பாச நீங்கார்
அருளிற் பெருமை யறியார் செறியார்
அருளிற் பிறந்திட் டறிந்தறி வாரே. 1

1815 வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி
ஆரா அமுதளித் தானந்தி பேர்நந்தி
பேரா யிரமுடைப் பெம்மான்பே ரொன்றினில்
ஆரா அருட்கடல் ஆடுகென் றானே. 2

1816 ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்
கூடிய வாறே குறியாக் குறிதந்தென்
ஊடுநின் றானவன் தன்னரு ளாற்றே. 3

1817 உற்ற பிறப்பும் உறுமல மானதும்
பற்றிய மாயாப் படல மெனப்பண்ணி
அத்தனை நீயென் றடிவைத்தான் பேர்நந்தி
கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே. 4

1818 விளக்கினை யேற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே. 5

1819 ஒளியும் இருளும் ஒருகாலுந் தீரா
ஒளியுளோர்க் கன்றோ ஒழியா தொளியும்
ஒளியிருள் கண்டகண் போலவே றாயுள்
ஒளியிருள் நீங்க வுயிர்சிவ மாமே. 6

1820 புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி
நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி
அறமே புகுந்தெனக் காரமு தீந்த
திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே. 7

1821 அருளது வென்ற அகலிடம் ஒன்றும்
பொருளது வென்ற புகலிடம் ஒன்றும்
மருளது நீங்க மனம்புகுந் தானைத்
தெருளுறும் பின்னைச் சிவகதி யாமே. 8

1822 கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை
வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொருள் நீக்கிடும்
பாறணி யும்முடல் வீழவிட் டாருயிர்
தேறணி வோமிது செப்பவல் லீரே. 9

## 11. சிவபூசை

1823 உள்ளம் பெருங்கோயில் [1]ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
[2]தெள்ளித் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே. 1

1824 வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாகுமே. 2

1825 பான்மொழி பாகன் பராபரன் தானாகு
மான சதாசிவன் தன்னையா வாகித்து
மேன்முகம் ஈசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னாகுமே. 3

1826 நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழல் ஈசனைக் காண வரிதாங்
கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே. 4

1827 மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈசன் நிலைபெறு காரணம்
அஞ்சமு தாம்உப சாரம்எட் டெட்டொடும்
அஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே. 5

1828 புண்ணியஞ் செய்வார்க்குப் [3]பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. 6

---

பா—ம்— [1]ஊனுடம்பு சுற்றாலை [2]தெள்ளத் தெளிந்தார்க்குச். [3]பூவுள நீருள.

1829 அத்த னவதீர்த்த மாடும் பரிசுகேள்
ஒத்தமெய்ஞ் ஞானத் துயர்ந்தார் பதத்தைச்
சுத்தம தாக விளக்கித் தெளிக்கவே
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. 7

1830 மறப்புற்று விவ்வழி மன்னிநின் றாலுஞ்
சிறப்பொடு பூநீர் திருந்தமுன் ஏந்தி
மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே. 8

1831 ஆரா தனையும் அமரர் குழாங்களுந்
தீராக் கடலும் நிலத்தும தாய்நிற்கும்
பேரா யிரமும் பிரான்திரு நாமமும்
ஆரா வழியெங்கள் ஆதிப் பிரானே. 9

1832 ஆனைந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்
தானந்த மில்லாத் தலைவன் அருளது
தேனுந்து மாமலர் உள்ளே [1]தெளிந்ததோர்
பாரைங் குணமும் படைத்துநின் றானே. 10

1833 உழைக்கொண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி
மழைக்கொண்டமாமுகின்மேற்சென்றுவானோர்
தழைக்கொண்ட பாசந் தயங்கிநின் றேத்தப்
பிழைப்பின்றி எம்பெரு மானரு ளாமே. 11

1834 வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு
உள்ளக் கடற்புக்கு வார்சுமை பூக்கொண்டு
கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதார்
அள்ளற் கடலுள் அழுந்துகின் றாரே. 12

1835 கழிப்படுந் தண்கடற் கௌவை யுடைத்து
வழிப்படு வார்மலர் மொட்டறி யார்கள்

பா-ம் — [1] தெளிந்தோர்.

பழிப்படு வார்பல ரும்பழி வீழ
வெளிப்படு வோருச்சி மேவிநின் றானே. 13

1836 பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்
பயனறி வார்க்கரன் தானே பயிலும்
நயனங்கள் மூன்றுடை யானடி சேர
வயனங்க ளாலென்றும் வந்துநின் றானே. 14

1837 ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்
றார்த்தெம தீசன் அருட்சே வடியென்றன்
மூர்த்தியை மூவா முதலுரு வாய்நின்ற
தீர்த்தனை யாருந் துதித்துண ராரே. 15

1838 தேவர்க ளோடிசை வந்துமண் ணோடுறும்
பூவொடு நீர்சுமந் தேத்திப் புனிதனை
மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றருள்
நீர்மையை யாவர் நினைக்கவல் லாரே. 16

1839 உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்
பிழைப்பின்றி யீசன் பெருந்தவம் பேணி
இழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே. 17

1840 வென்று விரைந்து[*] விரைப்பணி யென்றனர்
நின்று பொருந்த[*] இறைபணி நேர்படத்
துன்று சலமலர் தூவித் தொழுதிடிற்
கொண்டிடு நித்தலுங் கூறிய வன்றே. 18

1841 சாத்தியும் வைத்துஞ்[*] சயம்புவென் றேத்தியும்
ஏத்திய நாளு மிறையை யறிகிலார்
ஆத்தி மலக்கிட் டகத்திழுக் கற்றக்கால்
மாத்திக்கே செல்லும் வழியது வாமே. 19

1842 ஆவிக் கமலத்தின் அப்புறத் தின்புற
மேவித் திரியும் விரிசடை நந்தியைக்

கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்
தாவிக்கு மந்திரந் தாமறி யாரே. 20

1843 சாணுகத் துள்ளே அழுந்திய மாணிக்கங்
காணு மளவுங் கருத்தறி வாரில்லை
பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந் தானே. 21

1844 பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி
இருந்தன்மை யாலுமென் நெஞ்சிடங் கொள்ள
வருந்தன்மை யாளனை வானவர் தேவர்
திருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே. 22

1845 சமைய மலசுத்தி தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமு மானமந் திரசுத்தி
சமையநிர் வாணங் கலாசுத்தி யாகும்
அமைமன்னு ஞான மாணூர்க் கபிடேகமே. 23

1846 ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது
ஊழில் உயிரை யுணரவுந் தாமொட்டா
ஆழி யமரும் அரியயன் என்றுளோர்
ஊழி கடந்துமோ ருச்சியு ளானே.* 24

---

## 12. குரு பூசை

1847 ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதார மாறு றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் யானே. 1

1848 கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
[1]வானுற மாமல ரிட்டு வணங்கினும்

பா—ம்— [1]வானுறு. *இஃது 1458-ம் செய்யுளாகவும் வந்துளது.

[1]ஊனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
[2]தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.* 2

1849 மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஆவயின் ஞான நெறிநிற்றல் அர்ச்சனை
**ஓவற வுட்பூ சனைசெய்யில் உத்தமஞ்
சேவடி சேரல் செயலறல் தானே.** 3

1850 உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை
**விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்**
நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே. 4

1851 புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்
பண்ணிய மேனியும் பத்துநூ றாகுமாம்
**எண்ணிலிக் கைய மிடிற்கோடி யாகுமாற்**
பண்ணிடில் ஞானியூண் பார்க்கில் விசேடமே. 5

1852 இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை
[3]வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவும் [4]இலங்காத் தலத்திடை
[5]வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே. 6

1853 இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீ தானத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே. 7

1854 மனபவ னங்களை மூலத்தான் மாற்றி
அனித வுடற்பூத மாக்கி யகற்றிப்
புனிதன் அருள்தனிற் புக்கிருந் தின்பத்
தனியுறு பூசை சதாசிவற் காமே. 8

---

பா-ம்— [1]*ஊனற நோக்கி.* [2]*வானவர் நாடு வழிதிற வாதே.* [3]*வந்திப்ப.* [4]*இயங்காத்.* [5]*வந்திக்க நந்திக்கு மாமல ராமே.*
****இது 1452-ம் செய்யுளாகவும் வந்துள்ளது.***

1855 பகலும் இரவும் பயில்கின்ற பூசை
இயல்புடை யீசர்க் கிணைமல ராகப்
பகலும் இரவும் பயிலாத பூசை
சகலமுந் தான்கொள்வன் தாழ்சடை யோனே. 9

1856 இராப்பகல் அற்ற இடத்தே யிருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் [1]பருகி
இராப்பக லற்ற இறையடி யின்பத்
திராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. 10

---

## 13. மகேசுவர பூசை

1857 [2]படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
[3]நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
[4]நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
[5]படமாடக் கோயிற் பகவற்க தாமே. 1

1858 தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி எடுத்துரைத் தானே. 2

1859 மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை
யாத்தனுக் கீந்த அரும்பொரு ளானது
மூர்த்திகள் மூவர்க்கு மூவேழ் குரவர்க்குந்
தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரே. 3

1860 அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம் ஆயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயந் தானே. 4

---

பா-ம்— [1]பருகார். [2]படமாடும். [3]நடமாடும். [4]நடமாடும். [5]படமாடும்.

1861 [1]ஆறிடும் வேள்வி அருமறை நூலவர்
கூறிடும் அந்தணர் கோடிபே ருண்பதில்
நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை
பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே. 5

1862 ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை யண்ண லிவரென்று
வேறணி வார்க்கு வினையில்லை தானே,* 6

1863 சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட
பேர்நந்தி யென்னும் பிறங்கு சடையனை
நாவொன்று நொந்து வருமள வுஞ்சொல்லப்
பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே. 7

1864 அழிதக வில்லா அரனடி யாரைத்
தொழுதகை ஞாலத்துத் தூங்கிருள் நீங்கும்
பழுது படாவண்ணம் பண்பனை நாடித்
தொழுதெழ வையகத் தோரின்ப மாமே. 8

1865 பகவற்கே தாகிலும் பண்பில ராகிப்
புகுமத்த ராய்நின்று பூசனை செய்யும்
முகமத்தோ டொத்துநின் றூழிதோ றூழி
அகமத்த ராகிநின் றுய்ந்தொழிந் தாரே. 9

1866 வித்தக மாகிய வேடத்தர் உண்டவூண்
அத்தன் அயன்மால் அருந்திய வண்ணமாஞ்
சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. 10

1867 தாழ்விலர் பின்னும் முயல்வ ருந்தவம்
ஆழ்வினை யாழ அவர்க்கே அறஞ்செய்யும்

பா—ம்— [1]ஆடடும். *இஃது 2111-ம் பாடலாகவும் வந்துள்ளது.

ஆழ்வினை நீக்கி அருவினை தன்னொடும்
போழ்வினை தீர்க்கும்அப் பொன்னுல காமே. 11

---

## 14. அடியார் பெருமை

1868 [1]திகைக்குரி யாரொரு தேவனை நாடும்
வகைக்குரி யாரொரு வாதி யிருக்கிற்
பகைக்குரி யாரில்லைப் பார்மழை பெய்யும்
அகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே. 1

1869 அவ்வுல கத்தே பிறந்தவ் வுடலொடும்
அவ்வுல கத்தே [2]அருந்தவ நாடுவர்
அவ்வுல கத்தே அரனடி கூடுவர்
அவ்வுல கத்தே அருள்பெறு வாரே. 2

1870 கொண்ட குறியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தமரரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்தினுள்
உண்டெனில் நாமினி உய்ந்தொழிந் தோமே. 3

1871 அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியுங்
கொண்ட சராசர முற்றுங் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப் பாதியுங்
கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே. 4

1872 பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல [3]மூடத்துள்
உள்நின்ற [4]சோதி ஒருவர்க் கறியொண்ணாக்
கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக் [5]கேட்டிடும்
அண்ணல் பெருமையை [6]ஆய்ந்தது மூப்பே. 5

1873 இயங்கும் உலகினில் ஈசன் அடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்

---

பா-ம்— [1]சிகைக்குரிய. [2]அருந்தவர் நாடுவார். [3]மூடகம். [4]சோதியை உற்றறி வாரில்லைக், [5]கேட்கும். [6]ஆய்ந்தவர்.

புயங்களு மெண்டிசை போதுபா தாள
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே. 6

1874 அகம்படி கின்றநம் ஐயனை யோரும்
அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்
அகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்சம்
அகம்படி கண்டாம் அழிக்கலும் எட்டே. 7

1875 கழிவு முதலுங் காதற் றுணையும்
அழிவும தாய்நின்ற ஆதிப் பிரானைப்
பழியும் புகழும் படுபொருள் முற்றும்
ஒழியுமென் னுவி யுழவுகொண் டானே. 8

1876 என்தாயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்
ஒன்று யுலகம் படைத்தான் எழுதினான்
நின்றான் முகில் வண்ணன் [1] ஏரெழுந் தாயே. 9

1877 துணிந்தா ரகம்படி துன்னி உறையும்
பணிந்தா ரகம்படி பாற்பட் டொழுகும்
அணிந்தா ரகம்படி யாதிப் பிரானைக்
கணிந்தா ரொருவர்க்குக் கைவிட லாமே. 10

1878 தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி
மிலைமிசை வைத்தனன் மெய்ப்பணி செய்யப்
புலைமிசை நீங்கிய பொன்னுல காளும்
பலமிசை செய்யும் படர்சடை யோனே. 11

1879 அறியாப் பருவத் தரனடி யாரைக்
குறியால் அறிந்தின்பங் கொண்ட தடிமை
குறியார் சடைமுடி கட்டி நடப்பார்
மறியார் புனல்மூழ்க மாதவ மாமே. 12

---

*பா-ம்— [1] நேரெழுத் தாயே: நேரெழுத் தாமே.*

1880 அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்
சிவன்பால் அணுகுதல் செய்யவும் வல்லன்
அவன்பால் அணுகியே நாடு மடியார்
இவன்பாற் பெருமை இலயம தாமே. 13

1881 [1]முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்கள்
எண்ணிறந் தன்பால் வருவர் இருநிலத்
தெண்ணிரு நாலு திசையந் தரமொக்கப்
பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே. 14

1882 சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்
அவயோகம் இன்றி அறிவோருண் டாகும்
நவயோகங் கைகூடு நல்லியல் காணும்
பவயோகம் இன்றிப் பரலோக மாமே. 15

1883 மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
மேலுணர் வான்மிகு ஞாலம் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே. 16

---

## 15. போசன விதி

1884 எட்டுத் திசையும் இறைவ னடியவர்க்
கட்ட அடிசில் அமுதென் றெதிர்கொள்வர்
ஒட்டி யொருநிலம் ஆள்பவர் அந்நிலம்
விட்டுக் கிடக்கில் விருப்பறி யாரே. 1

1885 அச்சிவன் உள்நின்ற அருளை அறிந்தவர்
உச்சியம் போதாக வுள்ளமர் கோவிற்குப்
பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்
திச்சைவிட் டேகாந்தத் தேறி யிருப்பரே. 2

---

பா-ம்— [1]இன்னிருந்தார்முழு தெண்குணத் தேவர்கள்.

## 16. பிட்சா விதி

1886 விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு
உச்சிக்கு முன்னே யுழவு சமைந்தது
அச்சங்கெட் டச்செய் அறுத்துண்ணமாட்டாதார்
இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே. 1

1887 பிச்சைய தேற்றான் பிரமன் தலைதன்னில்
பிச்சைய தேற்றான் பிரியா அறஞ்செய்யப்
பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப்
பிச்சைய தேற்றான் பிரமன் பரமாகவே. 2

1888 பரந்துல கேழும் படைத்த பிரானை
இரந்துணி என்பர்கள் எற்றுக் கிரக்கும்
நிரந்தர மாக நினையும் அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச்செய் தானே. 3

1889 வரவிருந் தான்வழி நின்றிடும் ஈசன்
தரவிருந் தான்தன்னை நல்லவர்க் கின்பம்
பொரவிருந் தான்புக லேபுக லாக
வரவிருந் தாலறி யானென்ப தாமே. 4

1890 அங்கார் பசியும் அவாவும் வெகுளியுந்
தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்
பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்துந்
தங்கார் சிவனைத் தலைப்படு வாரே. 5

1891 மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங்
கையக நீண்டார் கடைத்தலைக் கேசெல்வர்
ஐயம் புகாமல் இருந்த தவசியார்
வையகம் எல்லாம் வரவிருந் தாரே. 6

## 17. முத்திரை பேதம்

1892 நாலேழு மாறவே நண்ணிய முத்திரை
பாலான மோன மொழியிற் பதிவித்து
மேலான நந்தி திருவடி மீதுய்யக்
கோலா கலங்கெட்டுக் கூடுநன் முத்தியே. 1

1893 துரியங்கண் மூன்றுஞ் சொருகிட ளாகி
அரிய வுரைத்தார மங்கே யடக்கி
மருவிய சாம்பவி கேசரி யுண்மை
பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே. 2

1894 சாம்பவி நந்தி தன்னருட் பார்வையாம்
ஆம்பவ மில்லா அருட்பாணி முத்திரை
ஓம்பயில் ஓங்கிய வுண்மைய கேசரி
நாம்பயில் நாதன்மெய்ஞ் ஞானமுத் திரையே. 3

1895 தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடும்
ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலால்
ஏனைச் சிவமாஞ் சொரூப மறைந்திட்ட
மோனத்து முத்திரை முத்தாந்த முத்தியே. 4

1896 வாக்கு மனமும் இரண்டு மவுனமாம்
வாக்கு மவுனத்து வந்தாலு மூங்கையாம்
வாக்கு மனமும் மவுனமாஞ் சுத்தரே
ஆக்குமச் சுத்தத்தை யாரறி வார்களே. 5

1897 யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியாம்
ஏகத்த ஞானத்து முத்திரை எண்ணுங்கால்
ஆகத் தகுவேத கேசரி சாம்பவி
யோகத்துக் கேசரி யோகமுத் திரையே. 6

1898 யோகியெண் சித்தி அருளொளி வாதனே
போகிதன் புத்தி புருடார்த்த நன்னெறி

யாகுநன் சத்தியும் ஆதார சோதனை
ஏகமுங் கண்டொன்றில் எய்தநின் றானே. 7

1899 துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமாம்
அவாவறு மீரை வகையங்க மாறுந்
தவாவறு வேதாந்த சித்தாந்தத் தன்மை
நவாவக மோடுன்ன னற்சுத்த சைவமே 8

1900 மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை
ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை
தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை
கானிக்கு முத்திரை கண்ட சமயமே. 9

1901 தூநெறி கண்ட சுவடு நடுவெழும்
பூநெறி கண்டது பொன்னக மாய்நிற்கும்
மேனெறி கண்டது வெண்மதி மேதினி
நீனெறி கண்டுள நின்மல னாமே. 10

## 18. பூரணக்குகைநெறிச் சமாதி

1902 வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி
உளரொளி பானுவின் உள்ளே யொடுங்கித்
தளர்விற் பிதிர்பதந் தங்கிச் சசியுள்
உளதுறும் யோகி யுடல்விட்டாற் றானே. 1

1903 தானிவை யொக்குஞ் சமாதிகை கூடாது
போன வியோகி புகலிடம் போந்துபின்
ஆனவை தீர நிரந்தர மாயோகம்
ஆனவை சேர்வார் அருளின்சார் வாகியே. 2

1904 தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி
ஆன சிவயோகத் தாமாரு மவ்விந்து
தானதி லந்தச் சிவயோகி யாகுமுன்
ஊனத்தோர் சித்திவந் தோர்காய மாகுமே, 3

1905 சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்
தவலோகஞ் சேர்ந்துபின் றுன்வந்து கூடிச்
சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்
புவலோகம் [1]போற்றுநர் புண்ணியத் தோரே. 4

1906 ஊனமின் ஞானிநல் யோகி [2]யுடல்விட்டால்
தானற மோனச் சமாதியுள் தங்கியே
தானவ னாகும் பரகாயஞ் சாராதே
ஊனமின் முத்தராய் மீளார் உணர்வுற்றே. 5

1907 செத்தார் பெறும்பய னாவது ஏதெனில்
செத்துநீர் சேர்வது சித்தினைக் கூடிடில்
செத்தா ரிருந்தார் செகத்தில் திரிமலஞ்
செத்தார் சிவமாகி யேசித்தர் தாமே. 6

1908 உன்னக் கருவிட் டுரவோ னரனருள்
பன்னப் பரனே யருட்குலம் பாலிப்பன்
என்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடுஞானி
தன்னிச்சைக் கீச னுருச்செய்யுந் தானே. 7

1909 எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்
தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பரம்
அங்காங் கெனநின்று சகமுண்ட வான்தோய்தல்
இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே. 8

---

## 19. சமாதிக் கிரியை

1910 அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் [3]வெப்புத் தீயினில்
நொந்தது நாய்நரி நுகரி னுண்செரு
வந்துநாய் நரிக்குண வாகும்வை யகமே. 1

பா—ம்— [1]போற்றுநற். [2]யுடல்பட்டால். [3]வெம்புந்.

1911 எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணல்தங் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பார் அரசே. 2

1912 புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல்கோக்கில் நாட்டில் அழிவாகும்
மண்ணி லழியில் அலங்கார பங்கமாம்
மண்ணுல கெல்லா மயங்குமனல் மண்டியே. 3

1913 அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த வுடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப அருள்பெறு வாரே. 4

1914 நவமிகு சாலே நல்லாழஞ் செய்து
குவைமிகு சூழவைஞ் சாணுகக் கோட்டித்
தவமிகு குகைமுக் கோணமுச் சாணுக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே. 5

1915 தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்
இங்கிலந் தான்குகைக் கெய்தும் இடங்களே. 6

1916 நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழப்
பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செய்யும் நேர்மைய தாமே. 7

1917 பஞ்ச லோகங்கள் நவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலா சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேலே
பொன்செய்த நற்சுண்ணம் பொதியலு மாமே. 8

1918 நள்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புழுகுபன் னீர்சேர்த்து
ஒள்ளிய தூபம் உவந்திடு வீரே. 9

1919 ஓதிடும் வெண்ணீற்றால் உத்தூளங் குப்பாய
மீதினி லிட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமும் நீறும் பொலிவித்து
மீதி லிருத்தி விரித்திடு வீரே. 10

1920 விரித்தபின் றற்சாரு மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகமிள நீருங்
குருத்தலம் வைத்தோர் [1]குழைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே. 11

1921 மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைபுல் வில்வமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே. 12

1922 ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
[2]போதும் இரண்டினில் ஒன்றைத்தா பித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வங்
காதலிற் சோடசங் காணுப சாரமே. 13

---

## 20. விந்துற்பனம்

1923 உதயத்தில் விந்துவில் [3]ஓங்குகுண் டலியும்
உதயக் குடிலில் வயிந்தவம் ஒன்பான்
விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி
கதியிற் கரணங் கலைவை கரியே. 1

---

பா-ம்— [1]குகைமுகம். [2]ஏதும். [3]ஓமுதற் குண்டலி.

1924 செய்திடும் விந்துபே தத்திறன் ஐயைந்துஞ்
செய்திடு நாதபே தத்திற னுலாறுஞ்
செய்திடு மற்றவை யீரிரண் டிற்றிறஞ்
செய்திடு மாருது சேர்தத் துவங்களே. 2

1925 வந்திடு பேத மெலாம்பர விந்து
தந்திடு மாமாயை வாகேசி தற்பரை
உந்து குடிலையோ டேமுறு குண்டலி
விந்துவில் இந்நான்கு மேவா விளங்குமே. 3

1926 விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி
வளங்கொள் உகார மகாரத் துள்விந்து
களங்கமில் நாதாந்தங் கண்ணினுள் நண்ணி
உளங்கொள் மறுதியுள் அந்தமு மாமே. 4

1927 அந்தமும் ஆதியு மாகிப் பராபரன்
வந்த வியாபி யெனலாய வந்நெறி
கந்தம தாகிய காரண காரியந்
தந்தைங் கருமமுந் தான்செய்யும் வீயமே. 5

1928 வீயம தாகிய விந்துவின் சத்தியால்
ஆய வகண்டமும் அண்டமும் பாரிப்பக்
காயமும் பூதமுங் [1]காரிய மாயையில்
ஆயிட விந்து அகம்புற மாகுமே. 6

1929 புறமகம் எங்கும் புகுந்தொளிர் விந்து
நிறமது வெண்மை நிகழ்நாதஞ் செம்மை
உறமகிழ் சத்தி சிவபாத மாயுட்
டிறனெடு வீடளிக் குஞ்செயற் கொண்டே. 7

1930 கொண்டஇவ் விந்து பரமம்போற் கோதற
நின்ற [2]படங்கட மாய்நிலை நிற்றலிற்

பா-ம்— [1]காரண மாயையால். [2]படங்குடிலையாய்நிலை.

கண்டக லாதியின் காரண காரியத்
தண்டம் அனைத்துமாய் மாமாயை யாகுமே. 8

1931 அதுவித்தி லேநின் றங் கண்ணிக்கு நந்தி
இதுவித்தி லேயுள வாற்றை யுணரார்
மதுவித்தி லேமல ரன்னம தாகிப்
பொதுவித்தி லேநின்ற புண்ணியன் தானே. 9

1932 வித்தினி லன்றி முளையில்லை அம்முளை
வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
**அத்தன்மை யாகும் அரனெறி காணுமே.** 10

1933 அருந்திய வன்ன மவைமூன்று கூறும்
பொருந்து முடன்மனம் போமல மென்னத்
திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட்
டிருந்தன முன்னுள் இரதம தாகுமே. 11

1934 இரத முதலான ஏழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரிய துளிவிந்து வாகுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே. 12

1935 காயத்தி [1]லேமூன்று நாளிற் கலந்திட்டுக்
காயத்துட் டன்மன மாகுங் கலாவிந்து
நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடாமையின்
மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே. 13

1936 அழிகின்ற விந்து அளவை யறியார்
கழிகின்ற தன்னையுட் காக்கலுந் தேரார்
அழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோர்
அழிகின்ற தன்மை யறிந்தொழி யாரே. 14

---

பா-ம்— [1] லேழ் மூன்றும்,

## 21. விந்துசயம்-போகசரவோட்டம்

1937 பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்
ஓர்க்கின்ற வுள்ளம் உருக அழல்மூட்டிப்
பார்க்கின்ற கண்ணுளை பாழ்பட மூலத்தே
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே. 1

1938 தானே யருளாற் சிவயோகந் தங்காது
தானேயக் காமாதி தங்குவோ னும்முட்குந்
தானே யதிகாரந் தங்கிற் சடங்கெடும்
ஊனே யவற்றுள் ளுயிரோம்பா மாயுமே. 2

1939 மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டில்
ஓயா இருபக்கத் துள்வளர் பக்கத்துள்
ஏயாவெண் ணுளின்ப மேற்பனி மூன்றிரண்
டாயா அபரத்து ளாதிநாள் ஆறுமே. 3

1940 ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்
வேறன்பு வேண்டுவோர் பூவரிற் பின்னந்தோ
டேறும் இருபத் தொருநா ளிடைத்தோங்கும்
ஆறின் மிகுத்தோங்கும் அக்காலஞ் செய்யவே. 4

1941 செய்யும் அளவில் திருநான் முகூர்த்தமே
எய்யுங் கலைகாலம் இந்து பருதிகால்
நையுமிடத் தோடி னன்காம நூல்நெறி
செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே. 5

1942 விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போல்
நடுங்கா திருப்பானும் ஐயைந்து நண்ணப்
படுங்காதன் மாதின்பாற் பற்றற விட்டுக்
கடுங்காற் கரணங் கருத்துறக் கொண்டே. 6

1943 கொண்ட குணனே நலனேநற் [1]கோமளம்
பண்டை யுருவே பகர்வாய் பவளமே

---

பா-ம்— [1]கோமளப்.

மீண்டு தனமே மிடைய விடும்போதிற்
கண்ட கரணமுட் செல்லக்கண் டேவிடே. 7

1944 விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே
தொட்டுறுங் காலங்கள் தோன்றக் கருதிய
கட்டிய வாளுள்சா நாள்குணங் கீழ்மைசீர்ப்
பட்ட நெறியிதென் றெண்ணியும் பார்க்கவே. 8

1945 பார்த்திட்டு [1]வைத்துப் பரப்பற் றுருப்பெற்று
வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே
சேர்த்துற் றிருதிங்கள் சேரா தகலினும்
மூப்புற்றே பின்னுளி லாமெல்லா முள்ளவே. 9

1946 வித்திடு வோர்க்கன்றி மேலோர் வினையில்லை
வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை
வித்தினில் வித்தை விதற வுணர்வரேல்
மத்தி லிருந்ததோர் மாங்கனி யாமே. 10

1947 கருத்தினில் அக்கர மாயுவு மியாவுங்
கருத்துளான் ஈசன் கருவுயி ரோடுங்
கருத்தது வித்தாய்க் காரண காரியங்
[2]கருத்துறு மாறிவை கற்பனை தானே. 11

1948 ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலஞ் சத்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே. 12

1949 வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற [3]சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே. 13

---

பா-ம்— [1]வையத்துப். [2]கருத்துற. [3]சுழுனைச் சொருகச்.

1950 யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்
[1]யோகியும் ஞான புரந்தர னாவோனும்
மோக முறினு முரையமிர் துண்போனும்
ஆகிய விந்து அழியாத அண்ணலே. 14

1951 அண்ணல் உடலாகி யவ்வனல் விந்துவும்
மண்ணிடை மாய்க்கும் பிராணனும் விந்துவுங்
கண்ணுங் கனலிடைக் கட்டிக் கலந்தெரித்
துண்ணில் அமிர்தாகி யோகிக் கறிவாமே. 15

1952 அறியா தழிகின்ற வாதலால் நாளும்
பொறியால் அழிந்து புலம்புகின் றார்கள்
அறிவாய் நனவி லதீதம் புரியச்
செறிவா யிருந்து சேரவே மாயுமே. 16

1953 மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்
காதல தாகிய காமங் கழிந்திடுஞ்
சாதலு மில்லை சதகோடி யாண்டினுஞ்
சோதியி னுள்ளே துரிசறுங் காலமே, 17

1954 காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்
காலங் [2]கடந்தழிந் தான்விந்து செற்றவன்
காலங் களின்விந்து செற்றுற்ற காரிகை
காலின்கண் வந்த கலப்பறி யாரே. 18

1955 கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்
நலத்தக வேண்டில்அந் நாரி யுதரக்
கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை
விலக்கு வனசெய்து மேலணை வீரே. 19

1956 மேலா நிலத்தெழு விந்துவும் நாதமுங்
கோலால் நடத்திக் குறிவழி யேசென்று

---

பா-ம்— [1]போகியும். [2]கடந்தவழி விந்துச்.

பாலரம் அமிர்துண்டு பற்றறப் பற்றினால்
மாலா னதுமாள மாளுமவ் விந்துவே. 20

1957 விந்து விளையும் விளைவின் பயன்முற்றும்
அந்த வழிவும் அடக்கத்தில் ஆக்கமும்
நந்திய [1]நாதமும் நாதத்தாற் பேதமுந்
தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே. 21

1958 விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து
நந்திய அங்கியி னாலே நயந்தெரித்
தந்தமில் பானு அதிகண்ட மேலேற்றிச்
சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே. 22

1959 அமுதச் சசிவிந்து வாம்விந்து மாள
அமுதப் புனலோடி அங்கியின் மாள
அமுதச் [2]சிவபோகம் ஆதலாற் சித்தி
அமுதப் பலாவன மாங்குறும் யோகிக்கே. 23

1960 யோகமவ் விந்து [3]ஒழியா வகைபுணர்ந்
தாகம் இரண்டுங் கலந்தாலு மாங்குருப்
போகஞ் சிவபோகம் போகிநற் போகமா
மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே. 24

1961 மாத ரிடத்தே செலுத்தினும் அவ்விந்து
காதலி னால்விடார் யோகங் கலந்தவர்
மாதர் உயிராசை கைக்கொண்டே வாடுவர்
காதலர் போன்றங்ஙன் காதலாஞ் சாற்றிலே. 25

1962 சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியால்
ஏற்றிய மூலத் தழலை யெழமூட்டி
நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ
டாற்றி யமுதம் அருந்தவிந் தாமே. 26

பா-ம்— [1]*நாசமும்.* [2]*சிவயோகம்.* [3]*ஒழிய.*

1963 விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல
வந்த வனன்மயிர்க் கால்தோறும் மன்னிடச்
சிந்தனை [1]மாறச் சிவமக மாகவே
விந்துவு மாளுமெய்க் காயத்தில் வித்திலே. 27

1964 வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துச்சுட் டுண்பவன்
வித்துக்குற் றுண்பானில் வேறல னீற்றவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துவித் தானன்றே. 28

1965 அன்னத்தில் விந்து அடங்கும் படிகண்டு
மன்னப் பிராணனும் விந்து மறித்திட்டு
மின்னொத்த விந்துநா தாந்தத்து விட்டிட
வன்னத் திருவிந்து மாயுங்கா யத்திலே. 29

1966 அன்னம் பிராணனென் றூர்க்கு மிருவிந்து
தன்னை யறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்
சொன்ன மாமுருத் தோன்றும்எண் சித்தியாம்
அன்னவ ரெல்லாம் அழிவற நின்றதே. 30

1967 நின்ற சிகாரம் நினைக்கும் பிராணனாய்
ஒன்று மகாரம் ஒருமூன்றோ டொன்றவை
சென்று பராசத்தி விந்து சயந்தன்னை
ஒன்ற வுரைக்க வுபதேசந் தானே. 31

1968 தானே யுபதேசந் தானல்லா தொன்றில்லை
வானே யுயர்விந்து வந்த பதினொன்கு
மானே ரடங்க அதன்பின்பு புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே. 32

1969 விந்துவும் நாதமும் விளைய விளைந்தது
வந்தஇப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்

பா-ம்— [1] *மாற்றிச்.*

அந்தமும் ஆதியு மாமந் திரங்களும்
விந்து அடங்க விளையுஞ் [1] சிவோகமே. 33

1970 வறுக்கின்ற வாறு மனந்தலை வெற்றி
நிறுக்கின்ற வாறுமந் நீள்வரை யொட்டிப்
பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை
அறுக்கின்ற நாள்வரும் அத்திப் பழமே. 34

1971 விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாகுமே. 35

1972 மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன
இனத்தெழு வார்கள் இசைந்தன நாடி
மனத்தில் எழுகின்ற வாக்கு வசனங்
கனத்த இரதமக் காமத்தை நாடிலே. 36

1973 சத்தமுஞ் சத்த மனமும் மனக்கருத்
தொத்தறி கின்ற விடமும் அறிகிலர்
[2] மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
அத்தன் இருப்பிடம் அவ்விடந் தானே. 37

1974 உரமடி மேதினி யுந்தியி லப்பாம்
விரவிய தன்மூலை மேவியகீ ழங்கி
கருமூலை மீமிசை [3] கைக்கீழிற் காலாம்
விரவிய கந்தர மேல்வெளி யாமே. 38

---

## 22. ஆதித்தநிலை-அண்டாதித்தன்

1975 செஞ்சுடர் ரோன்முத லாகிய தேவர்கள்
மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்

---

பா-ம்—[1] சிவபோகமே. [2] மொய்த்தறி. [3] கைக்கீழ்க் காற்றும்.

எஞ்சுட ரீசன் இறைவன் இணையடி
தஞ்சுட ராக வணங்குந் தவமே. 1

1976 பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னய்நின்ற புண்ணிய நாதன்
[1]இகலற ஏழுல கும்முற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே. 2

1977 ஆதித்தன் அன்பினே டாயிர நாமமுஞ்
சோதியி லுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும்
ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே. 3

1978 தானே யுலகுக்குத் தத்துவ னய்நிற்குந்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே. 4

1979 வலையமுக் கோணம் [2]வட்டம் அறுகோணந்
துலையிரு வட்டந் துய்ய விதமெட்டில்
அலையுற்ற வட்டத்தில் ஈரெட் டிதழா
மலைவற் றுதித்தனன் ஆதித்த னுமே. 5

1980 ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற்
சோதித் திலங்குநற் சூரிய னலாங்
கேத முறுங்கேணி சூரிய னெட்டிற்
சோதிதன் வீட்டிற் சோடசந் தானே. 6

1981 ஆதித்த னேடே அவனி யிருண்டது
பேதித்த [3]நாலும் பிதற்றிக் கழிந்தது
சோதிக்குள் நின்று துடியிடை செய்கின்ற
வேதப் பொருளை விளங்குகி லீரே. 7

பா—ம்— [1]இகலவன். [2]விட்டம். [3]நாலும்.

1982 பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணாத அரும்பொருள்
நீருக்குந் தீக்கும் நடுவே யுதிப்பவன்
[1]ஆருக்கும் [2]எட்டாத ஆதித்தன் தானே. 8

1983 மண்ணை யிடந்[3]ததின் கீழொடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து [4]வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து [5]களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்[6]துநின் றானே. 9

1984 பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தாரே. 10

---

## 23. பிண்டாதித்தன்

1985 நின்றும் இருந்துங் கிடந்தும் [7]நடந்தும்
கன்றாய நந்திக் கருத்துள் இருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. 1

1986 ஆதித்தன் ஓடி யடங்கும் [8]இடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்
ஆதித்த னோடே [9]யடங்குகின் றாரே. 2

1987 உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை

---

பா-ம்— [1]ஊருக்கு மேற்கே ஒடுங்குகின் றானே. [2]எட்டா; எட்டாதம். [3]து வருகின்ற மாமணி. [4]வருகின்ற மெய்ச்சுடர். [5]கனிதரு மானந்தம். [6]திடுந் தானே. [7]நடந்தேதும். [8]தலமறிந்து. [9]அடங்கின வாறே.

சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்
குருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே. 3

## 24. மனவாதித்தன்

1988 எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்
எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே வியங்குமென் ஆவி
ஒருகதி ராகில் உவாவது வாமே. 1

1989 [1]சந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. 2

1990 ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி
ஆகுங் கலையிடை நான்கென லாமென்பார்
ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற
ஆகுமப் பூரணை யாமென் றறியுமே. 3

1991 ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வொளி
ஓரண்டத் தார்க்கும் உணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே. 4

1992 ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்
ஒன்பது மீசன் [2]இயலறி வாரில்லை
முன்பதின் மேவி முதல்வன் அருளிலார்
இன்ப மிலாரிருள் சூழநின் றாரே. 5

## 25. ஞானுதித்தன்

1993 விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்
தந்த அபரம் பரநாத மாகியே

---

பா-ம்— [1]சந்திர னிற்சூரி யன்வரிற் பூரணை. [2]இயல்பறி; நிலையறி.

வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்
துந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே. 1

1994 உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன ஐங்கலைக் கொன்றும் உதயமே. 2

1995 தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்
மூவர் பிரானென முன்னொரு காலத்து
நால்வர் பிரான்நடு வாயுரை யாநிற்கும்
மேவு பிரான்என்பர் விண்ணவர் தாமே. 3

1996 பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மையிருள் நீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிருள் நீக்குந் திருவுடை நந்தியென்
கையிருள் நீங்கக் கலந்தெழுந் தானே. 4

1997 தனிச்சுடர் ரெற்றித் தயங்கிருள் நீங்க
அனித்திடு மேலை யருங்கனி யூறல்
கனிச்சுட ராய்நின்ற கயிலையில் ஈசன்
நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே. 5

1998 நேரறி வாக நிரம்பிய பேரொளி
[1]போரறி யாது புவனங்கள் போய்வரும்
தேரறி யாத திசையொளி யாயிடும்
ஆரறி வாரிது நாயக மாமே. 6

1999 மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்
[2]கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடுஞ்
[3]சென்றிடத் தெட்டுத் திசையெங்கும்போய்வரும்
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே. 7

---

பா—ம்— [1]பேரறி. [2]பிண்டத்தி லுள்ளே பேரொளி. [3]சென்றெடுத் திட்டுத் திசைதொறும்.

2000 நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்
தாபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக வுணர்ந்திருந் தாரே. 8

## 26. சிவாதித்தன்

2001 அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ளோதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே. 1

2002 கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே. 2

2003 தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் [1]வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. 3

2004 தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே. 4

## 27. பசுவிலக்கணம்-பிராணன்

2005 உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்
பன்னு மறைகள் பயிலும் பரமனை
என்னுள் இருக்கும் [2]இளையா விளக்கினை
அன்ன மயமென் றறிந்துகொண் டேனே. 1

*பா-ம்— [1]வேறொன்ற; வேறொன்றாய். [2]இறையாம்.*

2006 அன்ன [1]மிரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி யிரண்டுந் துணைப்பிரி [2]யாதன்னந்
[3]தன்னிலை யன்னந் தனி[4]யொன்ற தென்றக்கால்
[5]பின்ன மடவன்னம் [6]பேறணு காதே. 2

## 28. புருடன்

2007 வைகரி யாதியு மாயா மலாதியும்
பொய்கரி யான புருடாதி பேதமும்
மெய்கரி ஞானங் கிரியா [7]விசேடத்துச்
செய்கரி யீசன் அருதியே செய்ததே. 1

2008 அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்
டணுவில் அணுவை அணுகவல் லார்கட்
கணுவில் அணுவை அணுகலு மாமே. 2

2009 படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
இடர்கொண்ட பாச இருளற வோட்டி
நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே. 3

2010 அணுவுள் [8]அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற [9]நின்றான் சராசரந் தானே. 4

## 29. சீவன்

2011 மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு

பா-ம்— [1]மிரண்டு மாற்றங். [2]யாதென்க. [3]அந்நிலை. [4]யொன்று போனக்கால். [5]பின்னை. [6]கூடுகிலாவே. [7]விசேடத்தாற். [8]அணுவனும் அணுவுள். [9]நின்ற.

மேவிய கூறது ஆயிர மாயினுல்
ஆவியின் கூறுநூ ருயிரத் தொன்றே. 1

2012 ஏனோர் பெருமைய [1]னுயினும் எம்மிறை
ஊனே [2]சிறுமையின் உட்கலந் தங்குளன்
வானோர் அறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே. 2

2013 உண்டு தெளிவன் உரைக்க வியோகமே
கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும்
பண்டு பயிலும் பயில்சீவ ஞர்பின்னைக்
கண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே. 3

2014 மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவரு ளாலே யதில்தூண்ட
ஓயும் உபாதியோ டொன்றினென் ருதுயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே. 4

---

## 30. பசு

2015 கற்ற பசுக்கள் கதறித் [3]திரியினுங்
கொற்ற பசுக்கள் குறிகட்டி [4]மேயினு
முற்ற பசுக்கள் ஒருகுடம் பால்போது
மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. 1

2016 கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென்
எல்லை கடப்பித் திறைவ [5]னடிகூட்டி
வல்லசெய் தாற்ற மதித்தபின் அல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறிப்பறி யாதே.* 2

---

பா—ம்— [1]னுகிலும். [2]சிறுமையுள். [3]திரியின். [4]மேயின். [5]னடிக்கூட்டி *இஃது 2903—ம் பாடலாகவும் வந்துள்ளது.

## 31. போதன்

2017 சீவ னெனச்சிவ னென்னவே றில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே. 1

2018 குணவிளக் காகிய கூத்தப் பிரானும்
மணவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்
பணவிளக் காகிய பல்தலை நாகங்
கணவிளக் காகிய கண்காணி யாகுமே. 2

2019 அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்குந் தானான போதன்
அறிவா யவற்றினுட் டானா யறிவன்
செறிவாகி நின்றஅச் சீவனு மாகுமே. 3

2020 ஆறாறின் தன்மை அறியா திருந்தேனுக்
காறாறின் தன்மை அறிவித்தான் பேர்நந்தி
ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்
ஆறாறுக் கப்புற மாகிநின் றானே. 4

2021 சிவமா கியஅருள் நின்றறிந் தோரார்
அவமா மலமைந்து மாவ [1]தறியா
தவமான செய்து தலைப்பறி கின்றார்
நவமான தத்துவ நாடகி லாரே. 5

2022 நாடோறும் ஈசன் நடத்துந் தொழில்உன்னார்
நாடோறும் ஈசன் நயந்தூட்டல் நாடிடார்
நாடோறும் ஈசன்நல் லோர்க்கருள் நல்கலால்
நாடோறும் நாடார்கள் நாள்வினை யாளரே. 6

---

பா-ம்— [1] தறியார்.

## 32. ஐந்திந்திரிய மடக்கும் அருமை

2023 ஆக மதத்தன ஐந்து களிறுள
ஆக மதத்தறி யோடணை கின்றில
பாகனு மெய்த்தவை தாமும் இளைத்தபின்
யோகு திருந்துதல் ஒன்றறி யோமே. 1

2024 கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்
திருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா
எருத்துற வேறி யிருக்கிலு மாங்கே
வருத்தினும் அம்மா வழிநட வாதே. 2

2025 புலமைந்து [1]புள்ளைந்து புட்சென்று மேயும்
நிலமைந்து நீரைந்து நீர்மையும் ஐந்து
குலமொன்றுகோல்கொண்டுமேய்ப்பான்ஒருவன்
[2]உலம்வந்து போம்வழி யொன்பது தானே. 3

2026 அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
[3]அஞ்சும்போய் மேய்ந்ததும் அஞ்சுக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலு மாமே. 4

2027 [4]ஐவர் அமைச்சருள் தொண்ணூற் றறுவர்கள்
[5]ஐவரு மைந்தரு மாளக் கருதுவர்
ஐவரு மைந்து சினத்தொடே நின்றிடில்
ஐவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே. 5

2028 சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடோறுஞ்
சொல்லகில் லேன்திரு மங்கையும் அங்குள
வெல்லகில் லேன்புலன் ஐந்துடன் தன்னையுங்
கொல்லநின் றோடுங் குதிரையொத் தேனே. 6

---

பா-ம்— [1]உளமைந்து. [2]உலமந்து. [3]அஞ்சும்பொய் அஞ்சுந்தம். [4]ஐவர் அரசர் அமைச்சர் தொண்ணூற்றுவர். [5]ஐவர் அமர்ந்திட மாளக் கருதுவர்.

2029 எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை
எண்ணிலி யில்லியோ டேகிற் பிழைதரும்
எண்ணிலி யில்லியோ டேகாமை காக்குமேல்
எண்ணிலி யில்லதோர் இன்பம தாமே. 7

2030 விதியின் பெருவலி வேலைசூழ் வையந்
துதியின் பெருவலி தொல்வான் உலகம்
மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை
நிதியின் பெருவலி நீர்வலி தானே. 8

## 33 ஐந்திந்திரியம் அடக்கு முறைமை

2031 குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன
பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்
திட்டனன் யாமினி யேதமி லோமே. 1

2032 கிடக்கும் உடலிற் கிளரிந் திரியம்
அடக்க லுறுமவன் தானே யமரன்
விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை
நடக்கின் நடக்கும் நடக்கு மளவே. 2

2033 அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சு மடக்கில் அசேதன மாமென்றிட்
டஞ்சு மடக்கா அறிவறிந் தேனே. 3

2034 முழக்கி யெழுவன மும்மத வேழம்
அடக்கஅறிவென்னுங் [1]கோட்டையைவைத்தேன்
பிழைத்தன வோடிப் பெருங்கேடு மண்டிக்
கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே. 4

பா-ம்— [1]தோட்டியை.

2035 ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே. 5

2036 பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் [1]சுருக்கும்
அருத்தமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. 6

2037 இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த
கிளைக்கொன்று மீசனைக் கேடில் புகழோன்
தளைக்கொன்ற நாகமஞ் சாடல் ஒடுக்கத்
துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே. 7

2038 பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி
சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு
வாய்ந்துகொள் ஆனந்த மென்னும்அருள்செய்யில்
வேய்ந்துகொள் மேலை விதியது தானே. 8

2039 நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில்
படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. 9

2040 சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழவதில் தாங்கலு மாமே. 10

2041 போற்றிசைத் [2]துப்புனி தன்திரு மேனியைப்
போற்றிசெய் மீட்டே புலனைந்தும் [3]புத்தியால்

பா-ம்— [1]சுருங்கும், [2]தும்புனி. [3]புத்தியாம்.

நாற்றிசைக் கும்பின்னை யாருக்கு நாதனை
ஊற்றுகை யுள்ளத் தொருங்கலு மாமே. 11

2042 தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே
அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்
சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே. 12

2043 கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்
எய்தி யவனை யிசையினால் ஏத்துமின்
ஐவ ருடைய அவாவினில் தோன்றிய
பொய்வ ருடைய புலன்களும் ஐந்தே. 13

---

## 34. அசற்குரு நெறி

2044 உணர்வொன் றிலாமூடன்உண்மையோராதோன்
கணுவின்றி வேதா கமநெறி காணான்
பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோன்
அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே. 1

2045 மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் வீடுந் தரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தூண்பொருட்
டந்தக ராவோர் அசற்குரு வாமே. 2

2046 ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்
காமாதி நீங்காக் கலதி கலதிகட்
காமா றசத்தறி விப்போன் அறிவிலோன்
கோமா [1]னலசனத் தாகுங் குரவனே. 3

2047 கற்பாய கற்பங்கள் நீக்காமற் கற்பித்தால்
தற்பாவங் குன்றுந் தனக்கே பகையாகும்

---

பா-ம்— [1]னலனசத்,

நற்பால் அரசுக்கு நாட்டுக்கும் கேடென்றே
முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே 4

2048 குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
[1]முரணும் பழங்குழி [2]வீழ்வர்கள் முன்பின்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே. 5

## 35. சற்குரு நெறி

2049 தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து [3]தன்னை யறியத் தரவல்லோன்
தாடந்து [4]தத்துவா தீதத்துச் சார்சீவன்
தாடந்து பாசந் தணிக்கு மவன்சத்தே. 1

2050 தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோள்
தவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதந்
தவிரவைத் தான்நமன் தூதுவர் கூட்டந்
தவிரவைத் தான்பிற வித்துயர் தானே. 2

2051 கறுத்த இரும்பே கனகம தானான்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தஅப் போதே குருவருள் பெற்றான்
மறித்துப் பிறவியில் வந்தணு கானே. 3

2052 பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையும்
நேசத்து நாடி மலமற நீக்குவோர்
ஆசற்ற சற்குரு வாவோர் அறிவற்றுப்
பூசற் கிரங்குவோர் போதக் குருவன்றே. 4

2053 நேயத்தே நிற்கும் நிமலன் [5]மலமற்ற
நேயத்தை நல்கவல் லோனித்தன் சுத்தனே

---

பா—ம்— [1]முரளும், [2]வீழ்வரா. [3]தன்னைச் சிவனைத். [4]தத்துவா தீதச் சதாசிவன். [5]மலமற: மனமற்ற.

[1]ஆயத்த வர்தத் துவமுணர்ந் தாங்கற்ற
நேயர்க் களிப்பவன் நீடுங் குரவனே. 5

2054 பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
குருபரி சித்த குவலயம் எல்லாந்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. 6

2055 தானே யெனநின்ற சற்குரு சந்நிதி
தானே யெனநின்ற தன்மை வெளிப்படில்
தானே தனைப்பெற வேண்டுஞ் சதுர்பெற
ஊனே யெனநினைந் தோர்ந்துகொள் உன்னிலே. 7

2056 வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழி கண்டவர் காணு வழியைப்
பெரும்வழி யாநந்தி பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே. 8

2057 குருவென் பவனே வேதாக மங்கூறும்
பரவின்ப னாகிச் சிவயோகம் பாவித்
தொருசிந்தை யின்றி உயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே. 9

2058 சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்
சித்தும் அசித்துஞ் சிவபரத் தேசேர்த்துச்
சுத்த மசுத்த மறச்சுக மானசொல்
அத்தன் அருட்குரு வாமவன் கூறிலே. 10

2059 உற்றிடும் ஐம்மலம் பாச வுணர்வினாற்
பற்றறு நாதன் அடியிற் பணிதலாற்
சுற்றிய பேதந் துரியமூன் றுல்வாட்டித்
தற்பர மேவுவோர் சாதக ராமே. 11

பா-ம்— [1]*ஆயத்து வாதத்.*

2060 எல்லாம் இறைவன் இறைவி யுடனின்பம்
[1]வல்லார் புலனும் வருங்கால் உயிர்தோன்றிச்
சொல்லா மலமைந் தடங்கியிட் டோங்கியே
செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே. 12

2061 ஈனப் பிறவியில் இட்டது மீட்டுட்டித்
தானத்து ளிட்டுத தனையூட்டித் தாழ்த்தலும்
ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று
மோனத்துள்வைத்தலும்மூத்தன்றன் செய்கையே

2062 அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தொ டசித்தறத் [2]தெளிவித்த சீவனைச்
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சத்துட னேங்கரு மத்திடுந் தன்மையே. 14

2063 ஈசத்து வங்கடந் தில்லையென் றப்புறம்
பாசத்து ளேயென்றும் பாவியும் அண்ணலை
நேசத்து ளேநின்ற நின்மலன் எம்மிறை
தேசத்தை யெல்லாந் தெளியவைத் தானே. 15

2064 மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டலம்
ஆணிப்பொன் னின்றங் கமுதம் விளைந்தது
பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் [3]றிருந்தார்
ஊணுக் கிருந்தார் உணராத மாக்களே. 16

2065 அசத்தொடு சத்தும் அசத்சத்து நீங்க
இசைத்திடு பாசப்பற் றீங்கறு மாறே
அசைத்திரு மாயை அணுத்தானு மாங்கே
இசைத்தானு மொன்றறி விப்போன் இறையே.

2066 ஏறு நெறியே மலத்தை எரித்தலால்
ஈறில் உரையால் இருளை யறுத்தலான்

பா—ம்— [1]மல்லார் புல்ல வருங்கால் உயிர்த்தொன்றிச். [2]தெளிவித்துச். [3]றிருந்தார்கள்.

மாறில் பசுபாசம் வாட்டலால் [1]வீடுக
கூறு பரனே குருவாம் இயம்பிலே. 18

## 36. கூடாவொழுக்கம்

2067 கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி [2]யில்லா விடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக்*கலந்தெங்கு நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந் தாரே. 1

2068 செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பும் மனிதர்கள்
மெய்தான்உரைக்கில்விண்ணோர்தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே. 2

2069 [3]பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு
மத்தகர்க் கன்றோ மறுபிறப் புள்ளது
வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும்
பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே. 3

2070 வடக்கு வடக்கென்பர் வைத்ததொன் றில்லை
நடக்க வுறுவரே ஞானமி லாதார்
வடக்கில் அடங்கிய வையகம் எல்லாம்
அகத்தில் அடங்கும் அறிவுடை யோர்க்கே. 4

2071 காயக் [4]குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்துள் நின்ற கருத்தறி யாரே.* 5

2072 கண்காணி யாகவே கையகத் தேயெழுங்
கண்காணி யாகக் கருத்து ளிருந்திடுங்

பா—ம்— [1]வீடுகள்—வேறு. [2]யில்லை யிடமில்லை. [3]பத்திவித் துண்டு. [4]குழம்பனைக். *இஃது 2550-ம் பாடலாகவும் வந்துள்ளது.

கண்காணி யாகக் கலந்து வழிசெய்யுங்
கண்காணி யாகிய காதலன் தானே. 6

2073 கன்னி யொருசிறை கற்றோர் ஒருசிறை
மன்னிய மாதவஞ் செய்வோர் ஒருசிறை
தன்னியல் புன்னி யுணர்ந்தோர் ஒருசிறை
என்னிது ஈசன் இயல்பறி யாரே. 7

2074 காணாத கண்ணிற் படலமே கண்ணொளி
காணாத வர்கட்குங் காணாத வவ்வொளி
காணாத வர்கட்குங் கண்ணாம் பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே. 8

2075 பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி
[1]உய்த்தோன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி
அத்தன்மை யாதல்போல் நந்தி அருள்தரச்
சித்தம் தெளிந்தேன் செயலொழிந் தேனே. 9

2076 பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்
பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார்
சுராமய முன்னிய சூழ்வினை யாளர்
நிராமய மாக நினைப்பொழிந் தாரே. 10

2077 ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றாயினோர்க்
கொன்றும் இரண்டும் ஒருகாலுங் கூடிடா
ஒன்றிரண் [2]டென்றே யுரைதரு வோர்க்கெலாம்
ஒன்றிரண் டாய்நிற்கும் ஒன்றேயொன் றானதே.

2078 உயிரது [3]நின்றால் உணர்வெங்கு நிற்கும்
அயரறி வில்லையா லாருடல் வீழும்
உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்
பயிருங் கிடந்துள்ளப் பாங்கறி யாரே. 12

பா—ம்— [1]உய்த்துத் தோன்று. [2]டன்றே. [3]வென்றால்.

2079 உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்
உயிரை யறியில் உணர்வறி வாகும்
உயிரன் றுடலை விழுங்கு முணர்வை
அயரும் பெரும்பொரு ளாங்கறி யாரே. 13

2080 உலகாணி யொண்சுடர் உத்தம சித்தன்
நிலவாணி [1]ஐந்தினுள் நேருற நிற்குஞ்
சிலவாணி யாகிய தேவர் பிரானைத்
தலைவாணி செய்வது தன்னை யறிவதே. 14

2081 தானந்த மாமென நின்ற தனிச்சுடர்
ஊனந்த மாயுல காய்நின்ற வொண்சுடர்
தேனந்த மாய்நின்ற சிற்றின்ப நீயொழி
கோனந்த மில்லாக் குணத்தரு ளாமே. 15

2082 உன்முத லாகிய வூனுயிர் [2]உண்டெனுங்
கன்முத லீசன் கருத்தறி வாரில்லை
நன்முத லேறிய நாம மறநின்றால்
தன்முத லாகிய [3]தத்துவ மாமே. 16

2083 இந்தியம் அந்தக் கரண மிவையுயிர்
வந்தன சூக்க வுடலன்று மானது
தந்திடும் [4]ஐவிதத் தால்தற் புருடனு
முந்துள மன்னு மாறாறு முடிவிலே. 17

## 37. கேடு கண்டிரங்கல்

2084 வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாணாள் அறிகிலாப் பாவிகள்
உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்
முற்றெரி தீயின் முனிகின்ற வாறே. 1

பா—ம்— [1]ஐந்துடன். [2]கொண்டேனுங். [3]சத்தது வாமே. [4]ஐயவியத்.

2085 போது சடக்கெனப் போகின் றதுகண்டும்
வாதுசெய் தென்றோ மனிதர் பெறுவது
நீதியு ளேநின்று நின்மலன் [1] தாள்பணிந்
தாதியை அன்பில் அறியகில் லார்களே. 2

2086 கடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி
உடம்பினை யோம்பி உயிராத் திரிவார்
தடங்கொண்ட சாரல் தழல்முரு டேறி
இடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே. 3

2087 விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லால்நிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை யோராப் [2] பழிமொழி யாளர்
உரந்தன்மை யாக வொருங்கிநின் றார்களே. 4

2088 நின்ற புகழும் நிறைதவத் துண்மையும்
என்றும்எம் மீசன் அடியவர்க் கேநல்கும்
அன்றி யுலக மதுவிது தேவென்று
குன்றுகை யாலே குறைப்பட்ட வாறே. 5

2089 இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந்
தின்பத்து ளேநினைக் கின்ற திதுமறந்
துன்பத்து ளேசிலர் சோறொடு கூறையென்
துன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே. 6

2090 பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. 7

2091 ஆர்வ மனமும் அளவில் இளமையும்
ஈரமும் [3] நல்லவென் றின்புறு காலத்துத்

---

பா—ம்— [1] *தாளணிந்.* [2] *பழமொழி.* [3] *நல்லரென்.*

தீர வருவதோர் காமத் தொழில்நின்று
மாதவன் இன்ப மறந்தொழிந் தார்களே. 8

2092 இப்பரி சேயிள ஞாயிறு போலுரு
அப்பரி சங்கியின் உள்ளுறை யம்மானை
இப்பரி சேகம லத்துறை யீசனை
மெய்ப்பரி சேவின வாதிருந் தோமே. 9

2093 கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்
தாடவல் லாரவர் [1]பேறெது வாமே* 10

2094 நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்
நஞ்செம் பிரானென்று நாதனை நாடொறுந்
துஞ்சு மளவுந் தொழுமின் தொழாவிடில்
அஞ்சற்று விட்டதோர் ஆனையு மாமே. 11

2095 மிருக மனிதர் மிக்கோர் பறவை
ஒருவர்செய் தன்புவைத் துன்னுத லில்லை
பருகுவ ரோடுவர் பார்ப்பயன் கொள்வர்
திருமரு மாதவஞ் சேர்ந்துணர்ந் தாரே. 12

2096 நீதியி லோர்பெற்ற பொன்போல் இறைவனைச்
சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை
ஆதி [2]பயனென் றமரர் பிரானென்று
நாதியே வைத்தது நாடுகின் றேனே. 13

2097 இருந்தேன் [3]மலரளைந் தின்புற வண்டு
பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை யோரார்
வருந்தேன் நுகராது வாய்புகு தேனை
அருந்தேனை யாரும் அறியகி லாரே. 14

---

பா—ம்— [1]பேறிது; பேரிது. [2]யயனென். [3]மலர்களைந். *இஃது 2559-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2098 கருத்தறி யாது கழிந்தன காலம்
அருத்தியுள் ளான்அம ராபதி நாதன்
ஒருத்தனுள் ளானுல கத்துயிர்க் கெல்லாம்
வருத்திநில் லாது வழுக்குகின் றுரே. 15

2099 குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய்
விதித்தன நாட்களும் வீழ்ந்து கழிந்த
[1]வதிர்த்திருந் தென்செய்தி ராறுதி ராகிற்
கொதிக்கின்ற கூழில் துடுப்பிட் டாமே. 16

2100 கரையரு காருக் கழனி விளைந்த
திரையரு காமுன்னம் சேர்ந்தின்பம் எய்தும்
வரையரு கூறிய மாதவ நோக்கின்
நரையுரு வாச்செல்லு நாளில வாமே. 17

2101 வரவறி வானை மயங்கிருண் ஞாலத்
திரவறி வானை [2]யெழுஞ்சுடர்ச் சோதியை
அரவறி வார்முன் னொருதெய்வ மென்று
விரவறி யாமலே மேல்வைத்த வாறே. 18

---

## 38. இதோபதேசம்

2102 மறந்தொழி மண்மிசை மன்னுப் பிறவி
இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்
பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்
சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரே. 1

2103 செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீரே. 2

---

பா-ம்— [1]விதிர்த்திருந். [2]ச் செழுஞ்சுடர்ச்.

2104 ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை [1]நாணுமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. 3

2105 போற்றிசெ யந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் குந்நடு வாய்நின்ற நம்பனைக்
காற்றிசைக்குங்கமழ் ஆக்கையைக்கைக்கொண்டு
கூற்றுதைத் தான்றனைக் கூறிநின் றுய்மினே. 4

2106 இக்காய நீக்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன அருள்பெற லாமே. 5

2107 போகின்ற வாறே புகுகின்ற அப்பொருள்
ஆகின்ற போது மரனறி வானுளன்
சாகின்ற போதுந் தலைவனை நாடுமின்
ஆகின்ற அப்பொருள் அக்கரை யாகுமே. 6

2108 பறக்கின்ற வொன்று பயனுற வேண்டின்
இறக்கின்ற காலத்தும் ஈசனை யுள்குஞ்
சிறப்பொடு சேருஞ் சிவகதி பின்னைப்
பிறப்பொன் றிலாமையும் பேருல காமே. 7

2109 கூடியும் நின்றுந் தொழுதெம் மிறைவனைப்
பாடியு ளேநின்று பாதம் பணிமின்கள்
ஆடியு ளேநின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய வீற்றுப் பசுவது வாமே. 8

2110 விடுகின்ற சீவனார் மேலெழும் போது
நடுநின்று நாடுமின் நாதன்தன் பாதங்

பா—ம்— [1]நாளுமே.

கெடுகின்ற வல்வினை கேடில் புகழோன்
[1]இடுகின்றான் உம்மை இமையவ ரோடே. 9

2111 ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று
**நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்**
ஆறணி செஞ்சடை யண்ணல் [2]திருவடி
வேறணி வார்க்கு வினையில்லை தானே. 10

2112 இன்புறு வீர்அறிந் தேஎம் இறைவனை
அன்புறு வீர்தவஞ் செய்யுமெய்ஞ் ஞானத்துப்
பண்புறு வீர்பிற வித்தொழி லேநின்று
துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரே. 11

2113 மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு
மேற்கொள்ளலாவதோர் மெய்த்தாளும்ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி ஒன்றுண்டு
மேற்கொள்ள லாம்வண்ணம் வேண்டி நின்
[றோர்க்கே 12

2114 **சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்**
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடுங்
கூர்ந்தவர்க் கங்கே குறைகழல் [3]காட்டிடுஞ்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. 13

2115 [4]முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை
எத்தனை காலமும் ஏத்துவர் ஈசனை
நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்
அத்தகு சோதி யதுவிரும் பாரே. 14

2116 நியமத்த னாகிய நின்மலன் வைத்த
உகமெத் தனையென் றொருவருந் தேறார்

---

பா-ம்— [1]இடுகின்ற தும்மை. [2]இவரென்று. [3]காட்டுஞ். [4]முத்திரைஞானமுழுத்தமிழ்.

பவமத்தி லேவந்து பாய்கின்ற தல்லாற்
சிவமத்தை யொன்றுந் தெளியகில் லாரே. 15

2117 இங்கித்தை வாழ்வு மெனைத்தோ ரகிதமுந்
துஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை
விஞ்சத் துறையும் விகிர்தா எனநின்னை
[1]நஞ்சற் றவர்க்கன்றி நாடவொண் ணாதே. 16

2118 பஞ்சமு மாம்புவி சற்குரு பால்முன்னி
வஞ்சக ரானவர் வைகில் அவர்தம்மை
அஞ்சுவன் நாதன் அருநர கத்திடுஞ்
செஞ்சநிற் போரைத் தெரிசிக்கச் சித்தியே. 17

2119 சிவனை வழிபட்டார் [2]எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே. 18

2120 நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக்
கருமங்க ளாலே கழிதலிற் கண்டு
குருவென் பவன்ஞானி கோதில னாற்
பரமென் றல் அன்றிப் பகர்வொன்று மின்றே. 19

2121 ஆட்கொண் டவர்தனி நாயகன் அன்புற
மேற்கொண் டவர்வினை போயற நாடொறும்
நீர்க்கின்ற செஞ்சடை நீளன் உருவத்தின்
மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே. 20

ஏழாந் தந்திரம் முற்றிற்று.

---

பா-ம்— [1]நஞ்சத் தவர்க். [2]எண்ணிலி.

# எட்டாந் தந்திரம்*

## 1. உடலிற் பஞ்சபேதம்

2122 காயப்பை யொன்று சரக்குப் பலவுள
[1]மாயப்பை ஒன்றுண்டு மற்றுமோர் பையுண்டு
காயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டால்
மாயப்பை மண்ணு மயங்கிய வாறே. 1

2123 அத்தன் அமைத்த உடலிரு கூறினிற்
சுத்தம தாகிய சூக்குமஞ் சொல்லுங்காற்
சத்த பரிச ரூப ரசகந்தம்
புத்திமா னங்காரம் புரியட்ட காயமே. 2

2124 எட்டினில் ஐந்தாகும் இந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாயிடும்
ஒட்டிய பாசம் உணர்வது வாகவே
கட்டி யவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. 3

2125 இரதம் உதிரம் இறைச்சிதோல் மேதை
மருவிய வத்தி வழும்பொடு மச்சை
பரவிய சுக்கிலம் பாழாம் உபாதி
உருவம லாலுடல் ஒன்றென லாமே. 4

2126 ஆரே அறிவார் அடியின் பெருமையை
யாரே அறிவார் அங்கவர் நின்றது
யாரே அறிவார் [2]அறுபத்தெட் டாக்கையை
யாரே அறிவார் அடிக்காவ லானதே. 5

2127 எண்சா ணளவால் எடுத்த வுடம்புக்குட்
கண்கால் உடலிற் கரக்கின்ற கைகளிற்

---

பா-ம்— [1] *மாயப் படைதனில் மற்றுமோர்.* [2] *அறுபத்தோ.*

* *இது சுப்பிர பேதாகமத்தின் சாரம் என்பர்.*

புண்கால் அறுபத்தெட் டாக்கை புணர்க்கின்ற
நண்பால் உடம்புதன் னுலுடம் பாமே 6

2128 [1]உடம்புக்கும் நாலுக்கும் உயிராய சீவன்
ஒடுங்கும் பரனோ டொழியாப் பிரமங்
கடந்தொறு நின்ற கணக்கது காட்டி
அடங்கியே அற்றது ஆரறி வாரே. 7

2129 ஆறந்த மாகி நடுவுடன் கூடினல்
தேறிய மூவாறுஞ் சிக்கென் றிருந்திடுங்
கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியே
ஊறும் உடம்பை உயிருடம் பெண்ணுமே. 8

2130 மெய்யினில் தூல மிகுத்த முகத்தையும்
பொய்யினிற் சூக்கம் பொருந்தும் உடலையுங்
கையினில் துல்லியங் காட்டும் உடலையுங்
ஐயன் அடிக்குள் அடங்கும் உடம்பே. 9

2131 **காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்**
சேய விடமண்மை செல்லவும் வல்லது
**காயத் துகிர்போர்வை யொன்றுவிட் டாங்கொன்றிட்**
டேயு மவரென்ன ஏய்ந்திடுங் காயமே. 10

2132 நாக முடலுரி போலுநல் லண்டச
மாக நனுவிற் கனுமறந் தல்லது
போகலு மாகும் அரனரு ளாலேசென்
றேகு மிடஞ்சென் றிருபயன் உண்ணுமே. 11

2133 உண்டு நரக சுவர்க்கத்தில் உள்ளன
கண்டு விடுஞ்சூக்கங் காரண மாச்செலப்
பண்டு தொடரப் பரகாய யோகிபோற்
பிண்டம் எடுக்கும் பிறப்பிறப் பெய்தியே. 12

பா—ம்— [1]உடம்புகள்.

2134 தானவ னாகிய தற்பரந் தாங்கினேன்
ஆனவை மாற்றிப் பரமத் தடைந்திடும்
ஏனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானும் நிலனும் புகுந்தும் வருந்துமே. 13

2135 ஞானிக்குக் காயஞ் [1]சிவமாகும் நாட்டிடில்
ஞானிக்குக் காயம் உடம்பே யதுவாகும்
மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்
மோனிக்குக் காயமுப் பாழ்கெட்ட முத்தியே. 14

2136 விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதனு
[2]எஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்மந் தனுவாகும்
மெஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே. 15

2137 மலமென் றுடம்பை மதியாத ஊமர்
தலமென்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென் றிதனையே நாடி யிருக்கிற்
பலமுள்ள காயத்திற் பற்றுமிவ் வண்டத்தே. 16

2138 நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்
மெல்ல விளையாடும் விமலன் அகத்திலே
அல்ல செவிசத்த மாதி மனத்தையும்
மெல்லத் தரித்தார் முகத்தார் பசித்தே. 17

---

## 2. உடல் விடல்

2139 பண்ணாகுங் காமம் பயிலும் வசனமும்
விண்ணாம் பிராணன் விளங்கிய சத்தமும்
புண்ணாம் உடலிற் பொருந்து மனத்தையும்
அண்ணாந்து பார்க்க அழியும் உடம்பே. 1

பா-ம்— [1]சிவமே தனுவாகும். [2]தஞ்ஞானத்.

2140 அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிகண்
கழிகின்ற [1]காலவ் விரதங்கள் தானம்
மொழிகின்ற வாக்கு முடிகின்ற நாடி
ஒழிகின்ற வூனுக் குறுதுணை யில்லையே. 2

2141 இலையா மிடையில் எழுகின்ற காம
[2]முலைவாய நெஞ்சத்து மூழ்கும் உளத்துத்
தலையாய மின்னுடல் தாங்கித் திரியுஞ்
சிலையாய சித்தஞ் சிவமுன் னிடைக்கே. 3

---

### 3. அவத்தைபேதம் – கீழாலவத்தை

2142 ஐயைந்து [3]மத்திமை யானது சாக்கிரங்
கைகண்ட பன்னான்கிற் கண்டங் கனவென்பர்
பொய்கண் டிலாத புருடனித யஞ்சுழுனை
மெய்கண் டவனுந்தி யாகுந் துரியமே. 1

2143 முப்பதோ டாறின் முதல்நனா ஐந்தாகச்
செப்பதி னான்காய்த் திகழ்ந்திரண் டொன்றாகி
அப்பதி யாகும் நியதி முதலாகச்
செப்புஞ் சிவமீறாய்த் தேர்ந்துகொள் ளீரே. 2

2144 இந்திய மீரைந் தீரைந்து மாத்திரை
மந்திர மாய்நின்ற மாருதம் ஈரைந்தும்
அந்தக் கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்
பந்தவச் சக்கரப் பாலது வாகுமே. 3

2145 பாரது பொன்மை பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதங் கருப்பை யுடையது
வானகந் தூம மறைந்துநின் றாரே. 4

---

பா-ம்— [1]காலம். [2]முலைவாய். [3]மத்திமமானது.

2146 பூதங்கள் ஐந்தும் பொறியவை [1]ஐந்துளும்
ஏதம் படஞ்செய் திருந்த புறநிலை
ஓது மலங்குண மாகுமா தாரமோ
டாதி யவத்தைக் கருவிதொண் ணூற்றாறே. 5

2147 இடவகை சொல்லில் இருபத்தஞ் சானை
படுபர சேனையும் பாய்பரி ஐந்தும்
உடையவன் மத்திமை யுள்ளுறு நால்வர்
அடைய நெடுங்கடை ஐந்தொடு நான்கே. 6

2148 உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற உயிரை அறியார்
[2]உடம்பொ டுயிரிடை நட்பறி யாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின் றாரே. 7

2149 இருக்கின்ற வாறொன் றறிகிலர் ஏழைகள்
முருக்கு மசபையை மாற்றி முகந்து
கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந்
தருக்கொண்டு தொக்க உடலொழி யாதே. 8

2150 ஒளித்திட் டிருக்கும் ஒருபதி னாலை
அளித்தனன் என்னுள்ளே ஆரியன் வந்து
அளிக்குங் கலைகளி னாலறு பத்து
ஒளித்திட்டு வைத்தான் ஒடுங்கிய சித்தே. 9

2151 மண்ணினில் ஒன்று மலர்நீரு மருங்காகும்
பொன்னினில் அங்கி புகழ்வளி யாகாயம்
மன்னு மனோபுத்தி யாங்காரம் ஓரொன்றாய்
[3]உன்னின் முடிந்த தொருபூத சயமே. 10

2152 முன்னிக் கொருமகன் [4]மூர்த்திக் கிருவர்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்

---

பா-ம்—[1]ஐத்தும்; ஐயைந்தும். [2]உடம்போ டுயிரின் உடம்பறி, [3]உன்னி முடிந்தது பூத சயமே. [4]முத்திக் கிருவராம்.

கன்னிக்கு[1]ப் பிள்ளைகள் ஐவர்மு ளில்லை
[2]கன்னியைக் கன்னியே காதலித் தாளே. 11

2153 கண்டகன வைந்துங் கலந்தன தானைந்துஞ்சென்
றுண்டன நான்கும் ஒருங்கே உணர்ந்தபின்
பண்டைய தாகிப் பரந்த வியாக்கிரத்
தண்டமுந் தானும் அமர்ந்துநின் றானே. 12

2154 நின்றவன் [3]நிற்கப் பதினலிற் பத்துநீத்
தொன்றிய அந்தக் கரணங்கள் நான்குடன்
மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை
கன்றிய கண்டத்திற் கண்டான் கனவதே. 13

2155 தான மிழந்து தனிபுக் கிதயத்து
மான மழிந்து மதிகெட்டு மாலாகி
ஆன விரிவறி யாவவ் வியத்தத்தின்
மேனி யழிந்து சுழுத்திய தாமே. 14

2156 சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி
கெழுமிய சித்தம் பிராணன்றன் [4]காட்சி
ஒழுகக் கமலத்தின் உள்ளே யிருந்து
விழுமப் பொருளுடன் மேவிநின் றானே. 15

2157 தானத் தெழுந்து தருக்குந் துரியத்தின்
வானத் தெழுந்துபோய் வையம் பிறகிட்டுக்
கானத் தெழுந்த கருத்தின் தலையிலே
ஊனத் தவித்தைவிட் டுமேனின் றானே. 16

2158 ஊமை யெழுத்தொடு பேசும் எழுத்துறில்
ஆமை [5]யகத்தினில் அஞ்சும் [6]அடங்கிடும்

பாடம்— [1]ஐவர்மின் ளில்லை கன்னியை [2]கன்னிக்குக் கன்னி. [3]நிற்பப். [4]போதம். [5]யகத்துடன். [6]ஒடுங்கிடும்.

[1] ஓமய முற்றது வுள்ளொளி பெற்றது
[2] நாமய மற்றது நாமறி யோமே. 17

2159 துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே
நரிகள் பதினலு நஞ்சுண்டு செத்தன
பரிய புரவியும் [3] பாறிப் பறந்தது
துரிய [4] மிறந்திடஞ் சொல்லவொண் ணாதே. 18

2160 மாறா மலமைந்தான் மன்னு மவத்தையின்
வேறாய மாயா தநுகர ணாதிக்கிங்
கீறாகா தேஎவ் வுயிரும் பிறந்திருந்
தாறாத வல்வினை யாலடி யுண்ணுமே. 19

2161 உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையும்
அண்ணல் அருள்பெற்ற முத்திய தாவது
நண்ண லிலாவுயிர் ஞானத்தி னற்பிறந்
தொண்ணுறு ஞானத்தின் நேர்முத்தி எய்துமே.

2162 அதிமூட நித்திரை யாணவ நந்த
அதனை லுணர்வோ னருங்கன்ம முன்னித்
திதமான கேவல மித்திறஞ் சென்று
பரமாகா வையவத் தைப்படு வானே. 21

2163 ஆசான்முன் னேதுயில் மாண வகரைத்
தேசாய தண்டால் எழுப்புஞ் செயல்போல்
நேசாய வீசனு நீடாண வத்தரை
ஏசாத மாயாடன் னாலே எழுப்புமே. 22

2164 மஞ்சொடு மந்தா கினிகுட மாமென
விஞ்சறி வில்லோன் விளம்பு மிகுமதி
எஞ்சலி லொன்றெனு மாறென இவ்வுடல்
அஞ்சுணு மன்னனன் றேபோ மளவே. 23

பா-ம்— [1] ஊமைய மற்றது. [2] நமைய. [3] பாரிற் பரந்தது. [4] மிருந்திடம்.

2165 படியுடை மன்னவன் பாய்பரி ஏறி
வடிவுடை மாநகர் தான்வரும் போது
[1]அடியுடை ஐவரும் அங்குறை வோருந்
துடியில்லம் பற்றித் துயின்றனர் தாமே. 24

2166 நேரா மலத்தை நீடைந் தவத்தையின்
நேரான வாறுன்னி நீடு நனவினில்
நேரா மலமைந்து நேரே தரிசித்து
நேராம் பரத்துடன் நிற்பது நித்தமே. 25

---

## 4. மத்திய சாக்கிராவத்தை

2167 சாக்கிர சாக்கிரந் தன்னில் திரோதாயி
சாக்கிர சொப்பனந் தன்னிடை மாமாயை
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியஞ்
சாக்கிரந் தன்னில் துரியத்து மாயையே. 1

2168 மாயை எழுப்புங் கலாதியை மற்றதின்
நேய விராகாதி ஏய்ந்த துரியத்துத்
தோயுஞ் சுழுனை கனுநனு வுந்துன்னி
ஆயின னந்தச் சகலத்து ளானே. 2

2169 மேவிய அந்தகன் விழிகட் குருடனு
மாவயின் முன்னடிக் காணு மதுகண்டு
மேவுந் தடிகொண்டு [2]சொல்லும் விழிபெற
மூவயி னுன்மா முயலுங் கருமமே. 3

2170 மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்
ஒத்தங் கிருந்து உயிருண்ணு மாறுபோல்
அத்தனும் ஐம்பொறி யாடகத் துள்நின்று
சத்த முதல்ஐந்துந் தானுண்ணு மாறே. 4

---

பா—ம்— [1]வடியுடை; படியடை. [2]செல்லும்.

2171 வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு
முச்சு முடனணை வாரொரு வன்னுளன்
பிச்சன் பெரியன் பிறப்பிலி என்றென்று
நச்சி யவனருள் நானுய்ந்த வாறே. 5

2172 நாலா றுடன்புருட னற்றத் துவமுடன்
வேறான ஐயைந்து மெய்ப்புரு டன்பரங்
கூறா வியோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்வமே. 6

2173 ஏலங்கொண் டாங்கே இடையொடு பிங்கலை
கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு
மூலங்கொண் டாங்கே முறுக்கிமுக் கோணிலுங்
காலங்கொண் டானடி காணலு மாமே. 7

2174 நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்
ஓடிய காலில் ஒடுங்கி யிருந்திடுங்
கூடிய காமங் குளிக்கும் இரதமும்
நாடிய நல்ல மனமும் உடலிலே. 8

2175 ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
[1]ஏவன செய்யும் [2]இலங்கிழை யோனே. 9

2176 பத்தொடு பத்துமோர் மூன்றும் பகுதியும்
உய்த்த துரியமும் உள்ளுணர் காலமும்
மெய்த்த வியோமமு மேலைத் துரியமுந்
தத்துவ நாலே ழெனவுன்னத் தக்கதே. 10

2177 விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொருபான்
தளங்கொ ளிரட்டிய தாறு நடந்தால்

---

பா-ம்— [1]ஏவனெவன். [2]இளங்கிளை.

வணங்கிடு மைம்மலம் வாயு வெழுந்து
விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே. 11

2178 நாலொரு கோடியே நாற்பத்தெண் ணாயிர
மேலுமோ ரைந்நூறு வேறா யடங்கிடும்
பாலவை தொண்ணூற்றோ டாறுட் படுமவை
கோலிய ஐயைந்து ளாகுங் குறிக்கிலே. 12

2179 ஆகின்ற தொண்ணூற்றோ டாறும் பொதுஎன்பர்
ஆகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி [1]வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே. 13

2180 தத்துவ மானது தன்வழி நின்றிடில்
வித்தக னாகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி
**தத்துவ மாவ தகார எழுத்தே.** 14

2181 அறிவொன் றிலாதன ஐயேழு மொன்றும்
அறிகின்ற என்னை அறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தார் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. 15

2182 சாக்கிர சாக்கிர மாதி [2]தனில்ஐந்தும்
ஆக்கு மலாவத்தை யைந்து நனவாதி
போக்கி யிவற்றொடும் பொய்யான வாறாறு
நீக்கி நெறிநின்றொன் றாகியே நிற்குமே. 16

2183 ஆணவ மாதி மலமைந் தலரோனுக்
காணவ மாதிநான் காமாற் கரனுக்கு
ஆணவ மாதிமூன் றீசர்க் கிரண்டென்ப
ஆணவ மொன்றே சதாசிவற் காவதே. 17

---

பா-ம்— [1]வைணவர்க். [2]நிலையைந்தும்.

## 5. அத்துவாக்கள்

2184 தத்துவம் ஆறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னம்ஐம் பாளென்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பான்நான்கெண் பாளென்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்தவே. 1

2185 நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்
தோடு மவரோ டுள்ளிரு பத்தைஞ்சுங்
கூடுவர் கூடிக் குறிவழி யேசென்று
தேடிய பின்னர்த் திகைத்திருந் தார்களே. 2

2186 சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
ஆக்கிய தூல மளவாக்கி அதீதத்துத்
தாக்கிய [1]வன்பான தாண்டவஞ் சார்ந்தது
தேக்குஞ் சிவமாதல் ஐந்துஞ் சிவாயமே. 3

---

## 6. சுத்த நனவாதி பருவம்

2187 நனவாதி தூலமே சூக்கப் பகுதி
அனதான ஐயைந்தும் விந்துவின் சத்தி
தனதா முயிர்விந்து தானின்று போந்து
கனவா நனவிற் கலந்ததிவ் வாறே. 1

2188 நனவில் அதீதம் பிறந்தார் கிடந்தார்
நனவில் துரியம் [2]நிகழ்ந்தார் தவழ்ந்தார்
நனவிற் [3]சுழுத்தி நடந்தார் வளர்ந்தார்
நனவிற் கனவோட னன்செய்தி யானதே. 2

2189 செறியுங் கிரியை சிவதத் துவமாம்
பிறிவிற் சுகயோகம் பேரருள் கல்வி

பா-ம்— [1]வன்பான். [2]நகர்ந்தார். [3]சுழுனை.

குறிதற் றிருமேனி குணம்பல வாகும்
அறிவில் சராசரம் அண்டத் தளவே. 3

2190 ஆதி பரஞ்சிவஞ் சத்தி சதாசிவம்
ஏதமில் ஈசன்நல் வித்தியா தத்துவம்
போதங் கலைகால நியதிமா மாயை
நீதியீ ருக நிறுத்தினன் என்னே. 4

2191 தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவம்
ஈசன் அனல்வித்தை இராகங் கலைகால
மாசகல் வித்தை நியதி மகாமாயை
ஆசில் புருடாதி ஆன்மாவீ [1]ருறே. 5

2192 ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
[2]காணு முளைக்குத் தவுடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. 6

2193 பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன் ஒருவண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடிற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே. 7

2194 உடலிந் தியமனம் ஒண்புத்தி சித்தம்
அடலொன் றகந்தை அறியாமை மன்னிக்
கெடுமவ் வுயிர்மயல் மேலுங் கிளைத்தால்
அடைவது தானேழ் நரகத்து ளாயே. 8

2195 தற்றெரி யாத வதீதந்தற் காணவஞ்
சொற்றெரி கின்ற துரியஞ்சொற் காமியம்
பெற்ற சுழுத்திப்பின் பேசுறுங் காதலா
மற்றது வுண்டிக் கனநன வாதலே. 9

பா-ம்— [1]ராறே. [2]காண முளையும் தவிடு.

2196 நனவிற் கனவில்லை ஐந்து நனவிற்
கனவிலாச் சூக்குமங் காணுஞ் சுழுத்தி
தனலுண் பகுதியே தற்கூட்டு மாயை
நனவிற் றுரிய ததீதந் தலைவந்தே. 10

2197 ஆறாறில் ஐயைந் தகல நனாநனா
வாறா மவைவிட வாகு நனாக்கனா
வேறான ஐந்தும் விடவே நனாவினில்
ஈறாஞ் சுழுத்தி யிதின்மாயை தானே. 11

2198 மாயையில் வந்த புருடன் துரியத்தில்
ஆய முறைவிட் டதுவுந்தா னன்றாகிச்
சேயகே வலவிந் துடன்செல்லச் சென்றக்கால்
ஆய தனுவின் பயனில்லை யாமே. 12

2199 அதீதத் துரியத் தறிவனாம் ஆன்மா
அதீதத் துரிய மதனாற் புரிந்தால்
அதீதத் தெழுந்தறி வாகிய மானன்
முதிய அனலிற் றுரியத்து முற்றுமே. 13

2200 ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரங்
கைகண்ட ஐயைந்திற் கண்டங் கனாஎன்பர்
பொய்கண்ட மூவர் புருடர் சுழுனையின்
மெய்கண் டவனுந்தி மேவல் இருவரே. 14

2201 புரியட் டகமே பொருந்தல் நனவு
புரியட் டகந்தன்னின் மூன்று கனவு
புரியட் டகத்தில் இரண்டு சுழுத்தி
புரியட் டகத்தொன்று புக்கல் துரியமே. 15

2202 நனவின் நனவு புலனில் வழக்கம்
நனவிற் கனவு நினைத்தல் மறத்தல்
நனவிற் சுழுத்தியுண் ணாடல் இலாமை
நனவில் துரிய மதீதத்து நந்தியே. 16

2203 கனவின் நனவுபோற் காண்டல் நனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் கனவாங்
கனவிற் சுழுத்தியுங் காணாமை காணல்
அனுமாதி செய்தலி லான துரியமே. 17

2204 சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவதன் உண்மை சுழுத்தியிற்
சுழுத்தி யறிவறி வாலே [1]யழிகை
சுழுத்தி துரியமாஞ் சொல்லறும் பாழே. 18

2205 துரிய நனவா [2]மிதமுணர் போதந்
துரியக் கனவா மகமுணர்போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமெனத் தோன்றிடுந் தானே. 19

2206 அறிவறி கின்ற அறிவு நனவாம்
அறிவறி யாமை யடையக் கனவாம்
அறிவறி யவ்வறி யாமை சுழுத்தி
அறிவறி வாகு மான துரியமே. 20

2207 தானெங்கு மாயவ னைம்மலந் தான்விட்டு
ஞானந் தனதுரு வாகி நயந்தபின்
தானெங்கு மாய்நெறி நின்றது தான்விட்டு
மேனந்தச் சூக்க மவைவன்ன மேவிட்டே. 21

2208 ஐயைந்து மாறுமோ ரைந்து நனுவினில்
எய்யு நனவு கனவு சுழுத்தியா
மெய்யும்பின் சூக்கமும் மெய்ப்பகுதி மாயை
ஐயமுந் தானவ னத்துரி யத்தனே. 22

2209 ஈதென் றறிந்திலன் இத்தனை காலமும்
ஈதென் றறிந்தபின் ஏதும் அறிந்திலேன்

---

பா-ம்— [1]யறிகை. [2]மிதமுரை.

ஈதென் றறியும் அறிவை அறிந்தபின்
ஈதென் றறியும் இயல்புடை [1]யோனே. 23

2210 உயிர்க்குயி ராகி யுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருண்மூட மாமே. 24

2211 சத்தி [2]யிராகத்திற் றூனல் லுயிராகி
ஒத்துறு பாச மலமைந்தோ டாறுறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தனன் ஈசன் [3]மலமறு மாறே. 25

2212 சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை
சாக்கிரா தீதந் துரியத்திற் றூனுறச்
சாக்கிரா தீதத்தில் ஆணவந் தான்விடாச்
சாக்கிரா தீதம் பரனுண்மை தங்குமே. 26

2213 மலக்கலப் பாலே மறைந்தது சத்தி
மலக்கலப் பாலே மறைந்தது ஞானம்
மலக்கலப் பாலே மறைந்தனன் தானு
மலக்கலப் பற்றூன் மதியொளி யாமே. 27

2214 திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு
[4]வகைக்கின்ற நெஞ்சினுள் [5]ஆனைக்கன் றைந்து
பகைக்கின்ற [6]நெஞ்சுக்குப் பாலிரண் டாமே. 28

2215 கதறு பதினெட்டுக் [7]கண்களும் போகச்
சிதறி எழுந்திடுஞ் சிந்தையை நீரும்

பா-ம்— [1]யோரே. [2]யராகத்திற்; விராகத்திற் [3]மயமறு. [4]அசைக்கின்ற. [5]ஆனைக ளைந்தும். [6]நெஞ்சிற் பகையிவ ராமே. [7]கணங்களும்

விதறு படாமுன்னம் மெய்வழி நின்றால்
அதிர வருவதோர் ஆனையு மாமே. 29

2216 நனவகத் தேயொரு நாலைந்தும் வீடக்
கனவகத் தேயுட் கரணங்க ளோடு
முனவகத் தேநின் றுதறியுட் புக்கு
நினைவகத் தின்றிச் சுழுத்திநின் றானே. 30

2217 நின்றவன் ஆசான் நிகழ்துரி யத்தனாய்
ஒன்றி யுலகின் நியமாதிக ளுற்றுச்
சென்று துரியாதீ தத்தே சிலகாலம்
நின்று பரனாய் நின்மல னாமே. 31

2218 ஆனவவ் வீசன் அதீதத்தில் வித்தையாத்
தானுல குண்டு சதாசிவ மாசத்தி
மேனிகள் ஐந்தும்போய் விட்டுச் சிவமாகி
மோன மடைந்தொளி மூலத்த னாமே. 32

2219 மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக்
கண்டுகொண் டுள்ளே கருதிக் கழிகின்ற
விண்டலர் தாமரை மேலொன்றுங் கீழாகத்
தண்டமுந் தானா யகத்தினுள் ளாமே. 33

2220 போதறி யாது புலம்பின புள்ளின
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவணம் நின்றனன் எம்மிறை
சூதறி வாருச்சி சூடிநின் றாரே. 34

2221 கருத்தறிந் தொன்பது கண்டமும் ஆங்கே
பொருத்தறிந் தோன்புவ னாபதி நாடித்
திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரானை
வருத்தறிந் தேன்மன மன்னிநின் றானே. 35

2222 ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்
தான விளக்கொளி யாமூல சாதனத்
தான விதிமூலத் தானத்தில் அவ்விளக்
கேனை மதிமண்ட லங்கொண் டெரியுமே. 36

2223 உண்ணுடும் ஐவர்க்கு மண்டை யொதுங்கிய
விண்ணுட நின்ற வெளியை வினவுறில்
அண்ணுந்து பார்த்தைவர் கூடிய சந்தியிற்
கண்ணுடி காணுங் கருத்ததென் ருனே. 37

2224 அறியாத [1]வற்றை அறிவான் அறிவான்
அறிவான் அறியாதான் தன்னறி வாகான்
அறியா தவத்தை அறிவானைக் கூட்டி
அறியா தறிவானை யாரறி வாரே. 38

2225 துரிய தரிசனஞ் சொற்ரும் [2]வியோமம்
அரியன தூடண மங்நன வாதி
பெரியன கால பரம்பிற் றுரியம்
அரிய அதீதம் அதீதத்த தாமே. 39

2226 மாயையிற் சேதனன் மன்னும் பகுதியோன்
மாயையின் மற்றது நீவுதன் மாயையாங்
கேவல மாகுஞ் [3]சகலமா யோனியுள்
தோயும் மனிதர் துரியத்துட் சீவனே. 40

---

## 7. கேவல சகல சுத்தம்

2227 தன்னை யறிசுத்தன் றற்கேவ லன்றனும்
பின்ன முறநின்ற பேத சகலனும்
மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்
துன்னுவர் தத்தந் தொழிற்கள வாகவே. 1

---

பா-ம்— [1]வத்தை. [2]யார்க்கும். வியாத்தம். [3]சகலமாம்.

2228 தானே தனக்குப் பகைவனும் நட்டானுந்
தானே தனக்கு மறுமையும் இம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே. 2

2229 ஆமுயிர் கேவல மாமாயை இன்னடந்
தாமுயிர் மாயை [1]எறிப்ப அறிவுற்றுக்
காமிய மாயேய முங்கல வாசிற்பத்
தாமுறு பாசஞ் சகலத்த தாமே. 3

2230 சகல அவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்
நிகரின் மலரோன்மா னீடுபல் தேவர்கள்
நிகழ்நரர் கீட மந்தமு மாமே. 4

2231 தாவிய மாயையில் தங்கும் பிரளய
மேவிய மற்ற துடம்பாய்மிக் குள்ளன
ஓவல் இலக்கணர் ஒன்றிய சீகண்டர்
ஆவயி னூற்றெட் டுருத்திர ராமே. 5

2232 ஆகின்ற கேவலத் தாணவத் தானவ
ராகின்ற வித்தேச ராமனந் தாதிய
ராகின்ற எண்மர் எழுகோடி மந்திர
ராகின்ற ஈசர் அநேகரு மாமே. 6

2233 ஆமவ ரிற்சிவ ஞரருள் பெற்றுளோர்
போமலந் தன்னுற் புகழ்விந்து நாதம்விட்
டோமய மாகி யொடுங்கலி னின்மலந்
தோமறு சுத்தா வவத்தைத் தொழிலே. 7

2234 ஓரினு மூவகை நால்வகை யும்முள
தேரி லிவைகே வலமாயை சேரிச்சை

பா-ம்— [1]எழுப்ப அறிவுறக்.

சாரிய லாயவை [1]தாமே தணப்பவை
வாரிவைத் தீசன் மலமறுத் தானே. 8

2235 [2]பொய்யான போதாந்த மாறாறும் விட்டகன்
றெய்யாமை நீங்கவே [3]எய்தவன் தானாகி
மெய்யாஞ் சராசர மாய்வெளி தன்னுட்புக்
கெய்தாம லெய்துஞ்சுத் தாவத்தை யென்பதே. 9

2236 அனாதி பசுவியாத்தி யாகு மிவனை
அனாதியில் வந்த மலம்ஐந்தால் ஆட்டி
அனாதியிற் கேவல மச்சக லத்திட்டு
அனாதி பிறப்பறச் சுத்தத்து ளாகுமே, 10

2237 அந்தரஞ் சுத்தாவத் தைகே வலத்தாறு
தந்தோர்தஞ் சுத்தகே வலத்தற்ற தற்பரத்
தின்பால் துரியத் திடையே யறிவுறத்
தன்பால் தனையறி தத்துவந் தானே. 11

2238 ஐயைந் தொடுங்கும் ஆன்மாவில் ஆன்மாவும்
மெய்கண்டு சுத்த அவத்தையில் வீடாகுந்
துய்யவவ் வித்தை முதன்மூன்றுந் தொல்சத்தி
ஐய [4]சிவஞ்சித்தி யாந்தோற்ற மவ்வாறே. 12

2239 ஐயைந்து [5]மான்மாவில் ஆறோ டடங்கிடு
மெய்கண்ட மேன்மூன்று மேவுமெய் யோகத்தில்
கைகண்ட சத்தி சிவபாகத் தேகாண
[6]எய்யும் படியடங் குந்நாலேழ் எய்தியே. 13

2240 ஆணவத் தாரொன் றறியாத கேவலர்
பேணிய மாயைப் பிரளயா கலராகுந்

---

பா-ம்— [1]தானே. [2]மெய்யான. [3]வெய்யவன்; ஏதவன். [4]சிவஞ்சத்தி, [5]மானவில். [6]எய்தும்,

[1]காணும் உருவினர் காணுமை காண்பவே
பூணுஞ் சகலர்முப் பாசமும் புக்கோரே. 14

2241 ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயா கலருக்கே
ஆணவ மாயையுங் கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே. 15

2242 கேவலந் தன்னிற் கிளர்ந்தவிஞ் ஞாகலர்
கேவலந் தன்னிற் கிளர்விந்து சத்தியால்
ஆவயிற் கேவலத் தச்சக லத்தையும்
மேவிய மந்திர மாமாயை மெய்ம்மையே. 16

2243 மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து
மாயையுந் தோன்று வகைநிற்க ஆணவ
மாய சகலத்துக் காமிய மாமாயை
ஏயமன் னூற்றெட் டுருத்திரர் என்பவே. 17

2244 [2]மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர் தேவர் சுரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமிகு கீடாந்தத்
தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே. 18

2245 சுத்த அவத்தையில் தோய்ந்தவர் மும்மலச்
சத்தசத் தோடத் [3]தனித்தனி பாசமும்
மத்த இருள்சிவ னான கதிராலே
தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே. 19

2246 தற்கே வலம்முத்தி தானே தனிமையாம்
பிற்பாற் சகலங் கலாதிப் பிறிவதாஞ்
சொற்பாற் புரிசுத்த கேவலஞ் சாக்கிரந்
தற்பாற் புரிவது தற்சுத்த மாமே. 20

---

பா-ம்— [1]*காணம்.* [2]*மும்மல மைம்மலங் கூடி முயங்குவோர்.* [3]*தனித்தனே.*

2247 அறிவின்றி [1]முத்தன் அராகாதி சேரான்
குறியொன்றி [2]லாநித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றினங்கற்ற வல்லோன்
கிறியன் மலவியாபி கேவலந் தானே. 21

2248 விந்துவும் மாயையும் மேவுங் கிரியையுஞ்
சந்தத ஞான பரையுந் தனுச்சத்தி
விந்துவின் மெய்ஞ்ஞான மேவும் பிரளயர்
வந்த சகலசுத் தான்மாக்கள் வையத்தே. 22

2249 கேவல மாதியிற் பேதங் கிளக்குறிற்
கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்துள்
ஆவயின் மூன்று மதிசுத்த மூடவே
ஓவலில் லாவொன்பா னுற்றுணர் வோர்கட்கே. 23

2250 கேவலத் திற்கேவலம் அதீதா தீதங்
கேவலத் திற்சக லங்கள் வயிந்தவங்
கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் [3]ஞாகலர்க்
காவயி னுதன் அருண்மூர்த்தி தானே. 24

2251 சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ்
சகல சகலமே சாக்கிர சாக்கிரஞ்
சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை
சகலத்தில் இம்மூன்று தன்மையு மாமே. 25

2252 சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல்
சுத்தத்திற் கேவலந் தொல்லுப சாந்தமாஞ்
சுத்த சகலந் துரிய விலாசமாஞ்
சுத்தத்தில் இம்மூன்றுஞ் சொல்லலு மாமே. 26

2253 சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ்
சாக்கிரந் தன்னிற் சுழுத்தி துரியமே

---

பா-ம்— [1]முத்தோன், [2]லாதித்தன், [3]ஞானகலர்க்.

சக்கிரா தீதந் தனிற்சுகா னந்தமே
ஆக்கு மறையாதி ஐம்மல பாசமே. 27

2254 சாக்கிரா தீதத்திற் றூனறு மாணவஞ்
சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது
ஆக்கு பரோபாதி [1]யாஉப சாந்தத்தை
நோக்கு மலங்குண நோக்குத லாகுமே. 28

2255 பெத்தமும் முத்தியும் [2]பேணுந் துரியமுஞ்
சுத்த வதீதமுந் தோன்றுமற் றூனும்
அத்தன் அருளென் றருளால் அறிந்தபின்
சித்தமும் இல்லை செயலில்லை தானே. 29

2256 எய்திய பெத்தமும் முத்தமும் என்பன
எய்தும் அரனரு ளேவிளை யாட்டோ
டெய்தி டுயிர்சுத்தத் திடுநெறி என்னவே
எய்தும் உயிரிறை பாலறி வாமே. 30

2257 ஐம்மலத் தாரு மதித்த சகலத்தர்
ஐம்மலத் தாரு மருவினைப் பாசத்தார்
ஐம்மலத் தார்சுவர்க் கந்நெறி யாள்பவர்
ஐம்மலத் தாரர னுர்க்கறி வோரே. 31

2258 கருவி லதீதங் கலப்பிக்கு மாயை
அரிய துரிய மதிலுண்ணும் ஆசையும்
உரிய சுழுனை முதலெட்டுஞ் சூக்கத்
தரிய கனத்தூலம் அந்நன வாமே. 32

2259 ஆணவ மாகும் [3]அதீதமேன் மாயையும்
பூணுந் துரியஞ் சுழுத்திபொய்க் காமியம்
பேணுங் கனவும் மாமாயை திரோதாயி
காணு நனவில் மலக்கலப் பாகுமே. 33

பா—ம்— [1]யாமுப. [2]பேணுஞ் சகலமுஞ். [3]அதீதத்து.

2260 அரன்முத லாக அறிவோன் அதீதத் ன்
அரன்முத லாமாயை தங்கிச் சுழூனெ
கருமம் உணர்ந்து மாமாயைக் கைக்கொண்டோர்
அருளு மறைவார் சகலத்துற் றூரே. 34

2261 உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று
மருவுற்றுப் பூதம ளுதியான் மன்னி
வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே. 35

2262 இருவினை யொத்திட இன்னருட் சத்தி
மருவிட ஞானத்தில் ஆதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே. 36

2263 ஆருறு மாறதின் ஐயைந் தவத்தையோ
டீரு மதீதத் துரியத் திவனெய்தப்
பேருன ஐவரும் போம்பிர காசத்து
நீருர் பரஞ்சிவ மாதேய மாகுமே. 37

2264 தன்னை யறியா துடலைமுன் தானென்றான்
தன்னைமுன் கண்டான் துரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. 38

2265 சாக்கிரந் தன்னில் அதீதந் தலைப்படில்
ஆக்கிய வந்த வயிந்தவ மானந்த
நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்தியாம்
வாக்கும் மனமும் மருவல்செய் யாவே. 39

2266 அப்பும் அனலும் அகலத்து ளேவரும்
அப்பும் அனலும் அகலத்து ளேவாரா
அப்பும் அனலும் அகலத்து ளேதெனில்
அப்பும் அனலுங் கலந்ததவ் வாறே. 40

2267 [1]அறுநான்க சுத்தம் அதிசுத்தா சுத்தம்
உறுமேழு மாயை [2]உடனேந்தே சுத்தம்
பெறுமா றிவைமூன்றுங் கண்டத்தாற் பேதித்
துறுமாயை மாமாயை யான்மா வினோடே. 41

2268 மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட
வாய பரசிவன் தந்தையாய் நிற்கவே
ஏயும் உயிர்க்கே வலசகலத் தெய்தி
ஆய்தரு சுத்தமுந் தான்வந் தடையுமே. 42

## 8. பராவத்தை

2269 அஞ்சுங் [3]கடந்த அனாதி பரந்தெய்வ
நெஞ்சம தாய நிமலன் பிறப்பிலி
விஞ்சும் உடலுயிர் வேறு படுத்திட
வஞ்சத் திருந்த வகையறிந் தேனே. 1

2270 சத்தி பராபரஞ் சாந்தி தனிலான
சத்தி பரானந்தந் தன்னிற் சுடர்விந்து
சத்திய மாயை தனுச்சத்தி ஐந்துடன்
சத்தி பெறுமுயிர் தானங்கத் தாறுமே. 2

2271 ஆறாறுக் கப்பால் அறிவார் அறிபவர்
ஆறாறுக் கப்பால் அருளார் பெறுபவர்
ஆறாறுக் கப்பால் [4]அறிவாம் அவர்கட்கே
ஆறாறுக் கப்பால் அரனினி தாமே. 3

2272 அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப்
பஞ்சணி காலத்துப் பள்ளி துயில்கின்ற
விஞ்சையர் வேந்தனும் மெல்லிய லாளொடு
நஞ்சுற நாடி நயஞ்செய்யு மாறே. 4

பா—ம்— [1]அறுநான்கு சுத்தம். [2]உடனனைந்தே. [3]கடந்தவன் ஆதி. [4]அறிவார்.

2273 உரிய நனாத்துரி யத்தி லிவனாம்
அரிய துரிய நனவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனாந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே. 5

2274 பரமாம் அதீதமே பற்றறப் பற்றப்
பரமாம் அதீதம் பயிலப் பயிலப்
பரமாம் அதீதம் [1]பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றொன் றறாதே. 6

2275 ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்
வாயு மனமுங் கடந்த [2]மயக்கறின்
தூய அறிவு சிவானந்த மாகிப்போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. 7

2276 துரியப் பரியில் இருந்தஅச் சீவனைப்
பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு
நரிகளை யோடத் துரத்திய நாதர்க்
குரிய வினைகள்நின் றோலமிட் டன்றே. 8

2277 நின்றஇச் சாக்கிர நீள்துரி யத்தினின்
[3]மன்றனு மங்கே மணஞ்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடும்
அன்றே யிவனும் அவன்வடி வாமே. 9

2278 விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்காய்
இருந்த விடத்திடை யீடான மாயை
பொருந்துந் துரியம் புரியிற்றா னாகுந்
தெரிந்த துரியத்துத் தீதக லாதே. 10

2279 உன்னை யறியா துடலைமுன் நானென்றாய்
உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்

பா-ம்— [1]பயிலாத போதம் [2]மயக்கந். [3]மன்றலு.

தன்னை யறிந்தும் பிறவி தணவாதால்
அன்ன வியாத்தன் அமலனென் றறிதியே. 11

2280 கருவரம் பாகிய காயந் துரியம்
இருவருங் கண்டீர் பிறப்பிறப் புற்றார்
குருவரம் பெற்றவர் கூடிய பின்னை
இருவரு மின்றியொன் றாகின் றாரே. 12

2281 அணுவின் துரியத்தி லான நனவும்
அணுவசை விண்கண் ணான கனவும்
அணுவசை விற்பரா தீதஞ் சுழுத்தி
[1]பணியிற் பரதுரி யம்பர மாமே. 13

2282 பரதுரி யத்து நனவும் பரந்து
விரிசக முண்ட கனவுமெய்ச் சாந்தி
உருவுறு கின்ற [2]சுழுத்தியும் ஓவத்
தெரியுஞ் சிவதுரி யத்தனு மாமே. 14

2283 பரமா நனவின்பின் பாற்சக முண்ட
திரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி
உரமாம் உபசாந்த முற்றல் துறவே
தரனுஞ் சிவதுரி யத்தனு மாமே. 15

2284 சீவன் துரிய முதலாகச் சீரான
ஆவ சிவன்துரி யாந்தம் அவத்தைபத்
தோவும் பராநந்தி யுண்மைக்குள் வைகியே
மேவிய நாலேழ் விடுத்துநின் றானே. 16

2285 பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற்
பரம்பரன் மேலாம் பரநன வாக
விரிந்த கனவிடர் வீட்டுஞ் சுழுனை
உரந்தகு மாநந்தி யாமுண்மை தானே. 17

---

பா-ம்— [1]பணிவில். [2]சுழுனையும்.

2286 சார்வாம் பரசிவஞ் [1]சத்தி பரநாதம்
மேலாய விந்து சதாசிவ மிக்கோங்கிப்
பாலாய்ப் பிரமன் அரியமர ராபதி
தேவாம் உருத்திரன் ஈசனுங் காணிலே. 18

2287 கலப்பறி யார்கடல் சூழுல கேழும்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னை
அலப்பறிங் திங்கர சாளகி லாதார்
குறிப்பது கோல மடலது வாமே. 19

2288 பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்
தன்னை யறியில் தயாபரன் எம்மிறை
முன்னை யறிவு முடிகின்ற காலமும்
என்னை யறியலுற் றின்புற்ற வாறே. 20

2289 பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே. 21

2290 மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்.
[2]பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. 22

2291 ஆரு றகன்று நமவிட் டறிவாகி
வேருன தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈருர் பரையின் இருளற்ற தற்பரன்
பேருர் சிவாய அடங்கும்பின் முத்தியே. 23

2292 துரியத்தில் ஓரைந்துஞ் சொல்லக ராதி
விரியப் பரையின் மிகுநாத மந்தம்

---

பா-ம்— [1]*சத்திபால் நாதமாம்.* [2]*பரத்துள்.*

புரியப் பரையின் பராவத்தா போதந்
திரியப் பரமந் துரியந் தெரியவே. 24

2293 ஐந்துஞ் சகலத் தருளாற் [1]புரிவற்றுப்
பந்திடுஞ் சுத்த அவதைப் பதைப்பினில்
நந்தி பராவத்தை நாடச் சுடர்முனம்
அந்தி யிருள்போலும் ஐம்மல மாறுமே. 25

2294 ஐயைந்து மட்டுப் பகுதியும் மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியாய் எவற்றுமாய் அன்றாகி
உய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே. 26

2295 நின்றான் அருளும் பரமுமுன் னேயமும்
ஒன்றாய் மருவும் உருவும் உபாதியுஞ்
சென்றான் எனைவிடுத் தாங்கிற்செல் லாமையும்
நன்றான ஞானத்தின் நாதப் பிரானே. 27

## 9. முக்குண நிர்க்குணம்

2296 [2]சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த இராசத மன்னுங் கனவென்ப
ஓய்த்திடுந் தாமதம் உற்ற சுழுத்தியாம்
[3]மாய்த்திடு நிர்க்குண மாசில் துரியமே. 1

## 10. அண்டாதி பேதம்

2297 பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகடல் ஏழின் மணல்அள வாகப்
பொறியொளி [4]பொன்னணி யென்ன விளங்கிச்
செறியும்அண் டாசனத் தேவர் பிரானே. 1

---

பா—ம்— [1]புரிவுற்றுப். [2]சாத்திய பேதம்; சாத்திய வேதம். [3]ஆய்த்திடு. [4]பொன்மணி' பொன்னொளி.

2298 ஆனந்த தத்துவம் அண்டா சனத்தின்மேல்
மேனிஐந் தாக வியாத்தமுப் பத்தாறுய்த்
தானந்த மில்லாத தத்துவ மானவை
ஈனமி லாஅண்டத் தெண்மடங் காமே. 2

---

## 11. பதினொராந்தானமும் அவத்தையெனக் காணல்

2299 அஞ்சில் அமுதுமோ ரேழின்கண் ஆனந்த
முஞ்சிலோங் காரமோ ரொன்பான் பதினொன்றில்
வஞ்சக மேநின்று வைத்திடிற் காயமாங்
கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே. 1

2300 புருட னுடனே பொருந்திய [1]சித்தம்
அருவமொ டாறும் அதீதத் துரியம்
விரியுஞ் சுழுத்தியின் மிக்குள்ள எட்டும்
அரிய பதினொன்று மாமவ் வவத்தையே. 2

2301 காட்டும் பதினொன்றுங் கைகலந் தாலுடல்
நாட்டி யழுத்திடின் நந்தியல் லாலில்லை
ஆட்டஞ்செய் யாத வதுவிதி யேவினை
ஈட்டு மதுஇடம் எண்ணலு மாமே. 3

---

## 12. கலவு செலவு

2302 கேவலந் தன்னிற் கலவச் சகலத்தின்
மேவுஞ் செலவு விடவரு நீக்கத்துப்
பாவுந் தனைக்காண்டன் மூன்றும் படர்வற்ற
தீதறு சாக்கிரா தீதத்திற் சுத்தமே. 1

2303 வெல்லும் அளவில் விடுமின் வெகுளியைச்
செல்லும் அளவுஞ் செலுத்துமின் சிந்தையை

பா-ம்— [1] தேசும்.

அல்லும் பகலும் [1]அருளுடன் தூங்கினுற்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே. 2

---

## 13. நின்மலாவத்தை

2304 ஊமைக் கிணற்றகத் துள்ளே யுறைவதோர்
ஆமையின் உள்ளே [2]யழுவைகள் ஐந்துள
வாய்மையி னுள்ளே வழுவா தொடுங்குமேல்
ஆமையின் மேலுமோ ராயிரத் தாண்டே. 1

2305 காலங்கி நீர்பூக் கலந்தஆ காயம்
மாலங்கி யீசன் பிரமன் சதாசிவன்
மேலஞ்சும் ஓடி விரவவல் லார்கட்குக்
காலனும் இல்லை கருத்தில்லை தானே. 2

2306 ஆன்மாவே மைந்த னுயினன் என்பது
தான்மா மறையறை தன்மை யறிகிலர்
ஆன்மாவே மைந்தன் அரனுக் கிவனென்றல்
ஆன்மாவும் இல்லையால் ஐயைந்தும் இல்லையே. 3

2307 உதய மழுங்கல் ஒடுங்கலிம் மூன்றின்
கதிசாக் கிரங்கன வாதி சுழுத்தி
பதிதரு சேதனன் பற்றுந் துரியத்
ததிசுப னுயனந் தானந்தி யாகுமே. 4

2308 எல்லாந்தன் னுட்புக யாவுளுந் தானுகி
நல்லாந் துரியம் புரிந்தக்கால் நல்லுயிர்
பொல்லாத வாறுறுட் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றெய்து மன்றே. 5

2309 **காய்ந்த இரும்பு கனலை யகன்றாலும்**
**வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்**

---

பா-ம்— [1]*அறிவுடன்.* [2]*யுழுவைகள்.*

ஏய்ந்த கரணம் இறந்த துரியத்துத்
தோய்ந்த கருமத் துரிசக லாதே. 6

2310 ஆன மறையாதி யாமுரு நந்திவந்
தேனே யருள்செய் [1]தெரிநனு வத்தையில்
ஆன வகையை விடுமடைத் தாய்விட
ஆன மலாதீதம் அப்பரந் தானே. 7

2311 சுத்த அதீதஞ் சகலத்தில் தோய்வுறில்
அத்தன் அருள்நீங்கா வாங்கணிற் றுனுகச்
சித்த சுகத்தைத் தீண்டாச் சமாதிசெய்
தத்தனோ டொன்றற் கருள்முத லாமே. 8

2312 வேறுசெய் தானிரு பாதியின் மெய்த்தொகை
வேறுசெய் தானென்னை எங்கணும்விட்டுய்த்தான்
வேறுசெய் யாவருட் கேவலத் தேவிட்டு
வேறுசெய் யாவத்தன் மேவிநின் றானே. 9

2313 கறங்கோலை கொள்ளிவட் டங்கட லில்திரை
நிறஞ்சேர் ததிமத்தின் [2]மலத்தே நின்றங்
கறங்காண் சுவர்க்க நரகம் புவிசேர்ந்
[3]திறங்கா வுயிரரு ளாலிவை நீங்குமே. 10

2314 தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமுமப் பாச பேதமும்
மான குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போற்பட ராவே. 11

2315 நெருப்புண்டு நீருண்டு வாயுவும் உண்டங்
கருக்கனுஞ் சோமனும் அங்கே அமருந்
திருத்தக்க மாலுந் திசைமுகன் தானும்
உருத்திர சோதியும் உள்ளத்து ளாரே. 12

பா-ம்— [1]தெரிசனு வவத்தையில். [2]மலத்தினில். [3]திரங்கா.

2316 ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்
கூனை யிருளற நோக்கும் ஒருவற்கு
வானக மேற வழியெளி தாமே. 13

2317 ஆடிய காலில் [1]அசைக்கின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதா கமங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே. 14

2318 [2]முன்னை யறிவினிற் செய்த முதுதவம்
[3]பின்னை யறிவினைப் பெற்றால் அறியலாந்
**தன்னை யறிவ தறிவாமஃ** தன்றிப்
பின்னை யறிவது பேயறி [4]வாகுமே. 15

2319 **செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ்**
செயலற் றிருப்பார் [5]சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாமே. 16

2320 **தானவ னாகுஞ் சமாதிகை கூடினல்**
**ஆன மலமறும் அப்பசுத் தன்மைபோம்**
**ஈனமில் காயம் இருக்கும் இருநிலத்**
தூனங்கள் எட்டு மொழித்தொன் றுவோர்கட்கே

2321 தொலையா அரனடி [6]தோன்றுமஞ் சத்தி
தொலையா இருளொளி தோற்ற அணுவுந்
தொலையாத் தொழின்ஞானந் தொன்மையில் [நண்ணித்
தொலையாத பெத்தமுத் திக்கிடை தோயுமே, 18

---

பா-ம்— [1]அசைகின்ற. [2]முன்னைப் பிறவியிற். [3]பின்னைப் பிறவியிற். [4]வாமே. [5]சிவோகமுந் தேறார். [6]தோன்றுமைஞ்.

2322 தோன்றிய பெத்தமும் முத்தியுஞ் சூழ்சத்தி
மான்றுந் தெருண்டு முயிர்பெறு மற்றவை
தான்தரு ஞானந்தன் சத்திக்குச் சாதனு
மூன்றலில் லாவுள் ளொளிக்கொளி யாமே. 19

2323 அறிகின்றி [1]லாதன ஐயேழும் ஒன்றும்
அறிகின்ற என்னை யறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தான் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. 20

2324 தானவ னாகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
ஈனமில் ஞானத் தின்னருட் சத்தியை
ஊனமி லாள்தன்னை யூனிடைக் கண்டதே. 21

2325 ஒளியும் இருளும் பரையும் பரையுள்
அளிய தெனலாகும் ஆன்மாவை யன்றி
அளியும் அருளுந் தெருளுங் கடந்து
தெளிய அருளே சிவானந்த மாமே. 22

2326 ஆனந்த மாகும் அரனருட் சத்தியிற்
றானந்த மாமுயிர் தானே சமாதிசெய்
தானந்த மாயுணர் வாயுள் ளுணர்வுறிற்
கோனந்தம் வாய்க்கு மகாவாக் கியமாமே. 23

2327 அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே. 24

2328 சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான் கூடிச்
சித்தும் அசித்துஞ் [2]சிவசித்த தாய்நிற்குஞ்

---

பா—ம்— [1]லாதான. [2]சிவசித்து மாய்நிற்குஞ்; சிவசத்த மாய் நிற்குஞ்.

சுத்தம் அசுத்தந் தொடங்காத் துரியத்துச்
சுத்தரா மூன்றுடன் சொல்லற் றவர்களே. 25

2329 தானே யறியான் அறிவிலோன் தானல்லன்
தானே யறிவான் அறிவு சதசத்தென்
றூனல் இரண்டும் அரனரு ளாய்நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் தங்குமே. 26

2330 தத்துவ ஞானந் தலைப்பட் டவர்கட்கே
தத்துவ ஞானந் தலைப்பட லாய்நிற்குந்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானனந் தந்தான் தொடங்குமே. 27

2331 தன்னை யறிந்து சிவனுடன் தானாக
மன்னு மலங்குணம் மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. 28

2332 ஞானந்தன் மேனி கிரியை நடுவங்கந்
தானுறும் இச்சை உயிராகத் தற்பரன்
மேனிகொண் டைங்கரு மத்துவித் தாதலான்
மோனிகள் [1]ஞானத்து முத்திரைபெற் றார்களே.

2333 உயிர்க்கறி வுண்மை யுயிரிச்சை மானம்
உயிர்க்குக் கிரியை யுயிர்மாயை சூக்கம்
உயிர்க்கிவை யூட்டுவோன் ஊட்டு மவனே
உயிர்ச்செய லன்றியவ் வுள்ளத்து ளானே. 30

2334 தொழிலிச்சை ஞானங்கள் தொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னாகும்
பழியற்ற காரண காரியம் பாழ்விட்
டழிவற்ற சாந்தாதீ தன்சிவ னாமே. 31

---

பா-ம்— [1]ஞானத்தின் முத்தி.

2335 இல்லதும் உள்ளது மியாவையுந் தானுகி
இல்லதும் உள்ளது மாயன்றும் அண்ணலைச்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமென்
றெல்லை யுணர்ந்தால் உயிர்க்குயி ராகுமே. 32

2336 உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சத்தி
உயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞானம்
உயிரிச்சை யூட்டி யுடனுற லாலே
உயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேருமே. 33

2337 சேருஞ் சிவமானூர் ஐம்மலந் [1] தீர்ந்தவர்
ஓரொன்றி லாரைம் மலவிருள் உற்றவர்
பாரின்கண் விண்ண ரகம்புகும் பான்மையர்
ஆருங்கண் டோரார் அவையருள் என்றே. 34

2338 எய்தினர் செய்யு மிருமாயா சத்தியின்
எய்தினர் செய்யும் இருஞான சத்தியின்
எய்தினர் செய்யும் இருஞால சத்தியின்
எய்தினர் செய்யும் இறையருள் தானே. 35

2339 திருந்தனர் விட்டார் திருவி னரகந்
திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கந்
திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டந்
திருந்தனர் விட்டார் சிவமா யவமே. 36

2340 அவமுஞ் சிவமும் அறியார் அறியார்
அவமுஞ் சிவமும் அறிவார் அறிவார்
அவமுஞ் சிவமும் [2] அருளால் அறிந்தால்
அவமுஞ் சிவமும் அவனரு ளாமே. 37

2341 அருளான சத்தி யனல்வெம்மை போலப்
பொருளவ னுகத்தான் போதம் புணரும்

---

பா-ம்— [1] தீந்தவர். [2] அறிவால்.

இருளொளி யாய்மீண்டு மும்மல மாகுந்
திருவரு ளானந்தி செம்பொரு ளாமே. 38

2342 ஆதித்தன் தோன்ற வரும்பது மாதிகள்
பேதித்த தவ்வினை யாற்செயல் சேதிப்ப
ஆதித்தன் றன்கதி ராலவை சேட்டிப்பப்
[1]பேதித்துப் பேதியா வாறருட் பேதமே. 39

2343 பேதம் அபேதம் பிறழ்பேதா பேதமும்
போதம் புணர்போதம் போதமும் நாதமும்
நாத முடனுதை நாதாதி நாதமும்
ஆதன் அருளின் அருளிச்சை யாமே. 40

2344 மேவிய பொய்க்கரி யாட்டும் வினையெனப்
பாவிய பூதங்கொண் டாட்டிப் படைப்பாதி
பூவியல் கூட்டத்தாற் போதம் புரிந்தருள்
ஆவியை நாட்டும் அரனரு ளாமே. 41

2345 ஆரு றகன்று தனையுறிந் தானவன்
ஈருகி யாவினு மியாவுந் தனிலெய்த
வேருய் வெளிபுக்கு வீடுற்று னம்மருள்
தேருத் தெளிவுற்றுத் தீண்டச் சிவமாமே. 42

2346 தீண்டற் கரிய திருவடி நேயத்தை
மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று
தாண்டிச் சிவஞான மாவினைத் தானேறித்
தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே. 43

2347 சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்
சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியர்
சார்ந்தவர் நேயந் தலைப்பட்ட ஆனந்தர்
சார்ந்தவர் [2]சத்த அருட்டன்மை யாரே. 44

---

பா-ம்— [1]பேதித்த வேதியர் பேரருட் பேதமே. [2]அச்சதர்.

2348 தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. 45

2349 [1]தன்னினில் தன்னை யறியுந் தலைமகன்
[1]தன்னினில் தன்னை [2]யறியத் தலைப்படுந்
[1]தன்னினில் தன்னைச் [3]சார்கில னாகில்
[1]தன்னினில் தன்னையுஞ் சார்தற் கரியவே. 46

2350 அறியகி லேனென் றரற்றாதே நீயும்
நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னை
இருசுட ராகி இயற்றவல் லானும்
ஒருசுட ராவந்தென் உள்ளத்துள் ளாமே. 47

2351 மண்ணொன்று தான்பல நற்கல னாயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ணலும் [4]அவ்வண்ண மாகிநின் றானே. 48

2352 ஓம்புகின் றானுல கேழையும் உள்நின்று
கூம்புகின் றார்குணத் தின்னொடுங் [5]கூறுவர்
தேம்புகின் றார்சிவஞ் சிந்தைசெய் யாதவர்
கூம்பகில் லார்வந்து கொள்ளலு மாமே. 49

2353 குறியறி யார்கள் குறிகாண மாட்டார்
குறியறி யார்கடங் கூடல் பெரிது
குறியறி யாவகை கூடுமின் கூடி
அறிவறி யாவிருந் தன்னமு மாமே. 50

2354 ஊனோ வுயிரோ வுறுகின்ற தேதின்பம்
வானோர் தலைவி மயக்கத் துறநிற்கத்

---

பா—ம்— [1]தன்னில். [2]அறியில். [3]அறிவிலன் ஆயிடில். [4]இவ்வண்ண, [5]கூடுவர்

தானே பெரிதறி வோமென்னு மானுடர்
தானே பிறப்போ டிறப்பறி யாரே. 51

## 14. அறிவுதயம்

**2355 தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை**
**தன்னை யறியாமல் [1]தானே கெடுகின்றான்**
தன்னை யறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே. 1

2356 அங்கே யடற்பெருந் தேவரெல் லாந்தொழச்
சிங்கா சனத்தே சிவனிருந் தானென்று
சங்கார் வளையுஞ் சிலம்புஞ் சரேலெனப்
பொங்கார் குழலியும் போற்றிஎன் றாளே. 2

**2357 அறிவு வடிவென் றறியாத என்னை**
**அறிவு வடிவென் [2]றருள்செய்தான் நந்தி**
அறிவு வடிவென் றருளால் [3]அறிந்தே
அறிவு வடிவென் [4]றறிந்திருந் தேனே. 3

2358 அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை
அறிவுக் [5]கறிவல்ல தாதாரம் இல்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறுகள் தாமே. 4

2359 ஆயு மலரின் அணிமலர் [6]தன்மேலே
பாய இதழ்கள் பதினாறும் அங்குள
தூய அறிவு சிவானந்த [7]மாகியே
போய அறிவாய்ப் [8]புணர்ந்திருந் தானே. 5

2360 மன்னிநின் றாரிடை வந்தருண் மாயத்து
முன்னிநின் றானை மொழிந்தேன் முதல்வனும்

பா-ம்— [1]தான் கெடுகின்றனன். [2]றறிவித்தான் என் நந்தி. [3]அறிந்தும். [4]றறிந்து மிலேனே. [5]அறிவல்லால் ஆதாரம் [6]மேலது-வாய இதழும். [7]மாகிப் போய்-மேய. [8]விளைந்தது.

பொன்னின்வந் தானோர் புகழ்திரு மேனியைப்
பின்னிநின் றேனீ பெரியையென் றானே. 6

2361 **அறிவறி வாக அறிந்தன்பு செய்மின்**
அறிவறி வாக அறியுமிவ் வண்ணம்
அறிவறி வாக அணிமாதி சித்தி
அறிவறி வாக அறிந்தனன் நந்தியே 7

2362 அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறி யாமை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை யழகிய வாறே.* 8

2363 அறிவறி யாமையை நீவி யவனே
பொறிவா யொழிந்தெங்குந் தானான போது
அறிவா யவற்றினுள் தானா யறிவின்
செறிவாகி நின்றவன் சீவனு மாமே. 9

2364 அறிவுடை யார்நெஞ் சகலிட மாவ
தறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவ
தறிவுடை யார்நெஞ்சொ [1]டாதிப் பிரானும்
அறிவுடை யார்நெஞ்சத் தங்குநின் றானே. 10

2365 [2]மாயனு மாகி மலரோன் இறையுமாய்க்
காயநன் னாட்டுக் கருமுத லானவன்
சேயன் அணியன் தித்திக்குந் தீங்கரும்
பாயமு தாகிநின் றண்ணிக்கின் றானே. 11

2366 என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்
**என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்**
என்னை [3]யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னை [4]யிட் டென்னை உசாவுகின் றானே. 12

---

**பா-ம்**— [1]டாதிப் பகவானும். [2]மாயனுமாய. [3]அறியும் அறிவை அறிந்தபின். [4]விட் டுன்னை. *இஃது 2637-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2367 மாய விளக்கது நின்று மறைந்திடுந்
தூய விளக்கது நின்று சுடர்விடுங்
காய விளக்கது நின்று கனன்றிடுஞ்
சேய விளக்கினைத் தேடுகின் றேனே. 13

2368 தேடுகின் றேன்திசை யெட்டோ டிரண்டையும்
நாடுகின் றேனல மேயுடை யானடி
பாடுகின் றேன்பர மேதுணை யாமெனக்
கூடுகின் றேன்குறை யாமனத் தாலே. 14

2369 முன்னை முதல்வினை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவர் பேர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்துதன் பண்டைத் தலைவன்தாள்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பே. 15

## 15. ஆறந்தம்

2370 **வேதத்தின்** அந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
ஓதத் [1]தகுமெட் டியோகாந்த அந்தமும்
ஆதிக்க [2]லாந்தமும் ஆறந்த மாமே. 1

2371 அந்தமோ ராறும் அறிவார் [3]அதிசுத்தர்
அந்தமோ ராறும் [4]அறிவார் அமலத்தர்
அந்தமோ ராறும் [5]அறியார் அவர்தமக்
கந்தமோ டாதி அறியவொண் ணாதே. 2

2372 தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்த
மானாத் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் [6]சேர்சிவ யோகமாய்
ஆனா மலமற் றருஞ்சித்தி யாதலே. 3

---

**பா-ம்—** [1]*தருமெட்டின்; தகுமெட்டின்.* [2]*லாந்தமொடாறந்த.* [3]*அமலத்தர்.* [4]*அறியார் மலத்தர்.* [5]*அறியா தவர்தமக்.* [6]*சேரச் சிவோகமாய்.*

2373 சித்தம் பரனோ [1]டுயிருற்று நீள்மனஞ்
சத்த முதல் [2]ஐந்துந் தத்துவத் தால்நீங்கிச்
சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்
தத்தன் பரன்பால் அடைதல்சித் தாந்தமே. 4

2374 மேவும் பிரமனே விண்டு உருத்திரன்
[3]மேவுசெய் யீசன் சதாசிவன் மிக்கப்பால்
மேவும் பரவிந்து நாதம் [4]விடாவாறு
றோவும் பொழுதணு வொன்றுள [5]தாமே. 5

2375 உள்ள வுயிராறுற தாகும் உபாதியைத்
தெள்ளி யகன்று [6]நாதாந்தத்தைச் செற்றுமேல்
உள்ள இருள்நீங்க வோருணர் வாகுமேல்
[7]எள்ளலின் நாதாந்தத் தெய்திடும் போதமே. 6

2376 தேடும் இயம நியமாதி சென்றகன்
றூடுஞ் சமாதியில் உற்றுப் [8]பரசிவன்
பாடுறச் சீவன் பரமாகப் பற்றறக்
கூடும் உபசாந்தம் யோகாந்தக் கொள்கையே. 7

2677 கொள்கையி லான கலாந்தங் குறிக்கொள்ளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்
குள்ளன வாம்[9]விந்து வுள்ளே யொடுங்கலுந்
தெள்ளி யதனைத் தெளிதலு மாமே. 8

2378 தெளியு மிவையன்றித் தேரைங் கலைவே
றொளியுள் அமைத்துள்ள தோரவல் லார்கட்
களியவ னாகிய மந்திரந் தந்திரந்
[10]தெளிவுப தேச ஞானத்தொ டைந்தாமே. 9

---

பா-ம்— [1]டிருந்து. [2]ஐந்து தத்துவந் தானீங்கிச். [3]மேவுமெய்; மேவுமே யீசன். [4]விடருணு. [5]தாகும். [6]நாதாந்தம். [7]எள்ளிடின் நாதாந்தத் தேற்றிடும். [8]படர்சிவன். [9]விந்துமுள்ளே. [10]தெளியவுப.

2379 ஆகும் அனாதி கலையா கமவேதம்
ஆகுமத் தந்திர மந்நூல் வழிநிற்றல்
ஆகு மனாதி யுடலல்லா மந்திரம்
ஆகுஞ் சிவபோ தகம்உப தேசமே. 10

2380 தேசார் [1]சிவமாகுந் தன்ஞானத் தின்கலை
ஆசார நேய மறையுங் கலாந்தத்துப்
பேசா வுரையுணர் வற்ற பெருந்தகை
வாசா மகோசர மாநந்தி தானே. 11

2381 தானவ னாகுஞ் சமாதி தலைப்படில்
ஆன கலாந்தநா தாந்தயோ காந்தமும்
ஏனைய போதாந்தம் சித்தாந்த மானது
ஞான மெனஞேய ஞாதுரு வாகுமே. 12

2382 ஆறந்த [2]முஞ்சென் றடங்குமந் நேயத்தே
ஆறந்த [3]ஞேயம் அடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் [4]சிவானந்த மாமே. 13

2383 உண்மைக் கலையாறு ரைந்தான் அடங்கிடும்
உண்மைக் கலாந்தம் இரண்டைந்தோ டேழுந்தம்
உண்மைக் கலையொன்றில் ஈறுய நாதாந்தத்
துண்மைக் கலைசொல்ல வோரந்த மாமே. 14

2384 ஆவுடை யானை யரன்வந்து கொண்டபின்
தேவுடை யான்எங்கள் சீர்நந்தி தாடந்து
வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே. 15

2385 கருது மவர்தங் கருத்தினுக் கொப்ப
அரனுரை செய்தருள் ஆகமந் தன்னில்

பா—ம்— [1]சிவமாகு. [2]முன்சென். [3]மேய மடங்கிடு. [4]சிவானந்த வுண்மையே.

வருசம யப்புற மாயைமா மாயை
உருவிய வேதாந்த சித்தாந்த வுண்மையே. 16

2386 [1]வேதாந்தஞ் சித்தாந்தம் வேறிலா முத்திரை
போதாந்த ஞானம் யோகாந்தம் பொதுஞேய
நாதாந்தம் ஆனந்தஞ் சீரோ தயமாகும்
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கவே. 17

2387 வேதாந்தந் தன்னில் உபாதிமே லேழ்விட
நாதாந்த பாசம் விடுநல்ல தொம்பதம்
மீதாந்த காரணே பாதியேழ் மெய்ப்பரன்
போதாந்த தற்பதம் போமசி என்பவே. 18

2388 அண்டங்கள் ஏழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் [2]றுன்தங்கள் கோவே. 19

2389 கோவுணர்த் துஞ்சத்தி யாலே குறிவைத்துத்
தேவுணர்த் துங்கரு மஞ்செய்தி செய்யவே
பாவனைத் தும்படைத் தர்ச்சனை [3]பாரிப்ப
ஓவனைத் துண்டொழி யாத ஒருவனே. 20

2390 ஒருவனை யுன்னார் உயிர்தனை யுன்னார்
இருவினை யுன்னார் இருமாயை யுன்னார்
ஒருவனு மேயுள் ளுணர்த்திநின் றூட்டி
அருவனு மாகிய ஆதரத் தானே. 21

2391 அரனன்பர் தானம தாகிச் சிவத்து
வருமவை சத்திகள் மூன்று வகுத்திட்
டுரனுறு சந்நிதி சேட்டிப்ப என்றுந்
திரனுறு தோயாச் சிவாநந்தி [4]யாமே. 22

பா—ம்— [1] வேதாந்த. [2] றுன்எங்கள். [3] பாவிப்ப, [4] யாகுமே,

2392 வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டயிக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே. 23

2393 [1]சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்று ளுறல்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே. 24

2394 சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. 25

2395 சிவனைப் [2]பரமனுட் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்த மானுன்
நவமுற் றவத்தையில் ஞானஞ் சிவமாந்
தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தாரே. 26

2396 தத்துவ மாகுஞ் சகள வகளங்கள்
தத்துவ மாம்விந்து நாதஞ் சதாசிவந்
தத்துவ மாகுஞ் சீவன்றன் தற்பரந்
தத்துவ மாஞ்சிவ சாயுச் சியமே 27

2397 வேதமோ டாகமம் மெய்யாம் [3]இறைவன்நூல்
ஓதும் [4]பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. 28

2398 பரானந்தி மன்னுஞ் சிவானந்தம் எல்லாம்
பரானந்த மேன்மூன்றும் பாழுரு னந்தம்

பா-ம்— [1]சிவமான. [2]பரனுட். [3]இறைநூல். [4]சிறப்பும் பொதுவுமென்.

விராமுத்தி ரானந்த [1]மெய்ந்நட னந்தம்
பொராநின்ற வுள்ளமே பூரிப்பி யாமே. 29

2399 ஆகுங் கலாந்தம் இரண்டந்த நாதாந்தம்
ஆகும் பொழுதிற் கலையைந்தா மாதலில்
ஆகும் அரனே பஞ் சாந்தக னுமென்ன
ஆகு மறையா கமமொழிந் தானன்றே. 30

2400 அன்றாகு மென்னுதை வகையந்தந் தன்னை
ஒன்றான வேதாந்த சித்தாந்த முள்ளிட்டு
நின்றா வியோகாந்த நேர்படு நேர்பட்டான்
மன்றாடி பாத மருவலு மாமே. 31

2401 அனாதி சீவனைம் மலமற்றப் பாலாய்
அனாதி யடக்கித் தனைக்கண் டரனாய்த்
தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்
வினாவுநீர் பாலாதல் வேதாந்த வுண்மையே. 32

2402 உயிரைப் பரனை யுயர்சிவன் தன்னை
அயர்வற் றறிதொந் தத்தசி யதனாற்
செயலற் றறிவாகி யுஞ்சென் றடங்கி
அயர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே. 33

2403 மன்னிய சோகமா மாமறை யாளர் தஞ்
சென்னிய தான [2]சிவயோகமாம் ஈதென்ன
அன்னது சித்தாந்த மாமறை யாய்பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே. 34

2404 முதலாகும் வேத முழுதா கமமப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்த [3]மாகவே. 35

---

பா—ம்— [1]மெய்ன்னட. [2]சிவோகமாம். [3]மாகமே; மாமே.

## 16. பதிபசுபாசம் வேறின்மை

2405 அறிவறி வென்ற அறிவு மனாதி
அறிவுக் கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே. 1

2406 பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாசம் அறுத்தாற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே. 2

2407 கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்று
நடக்கின்ற ஞானத்தை நாடோறு நோக்கித்
[1]தொடக் கொன்றும் இன்றித்தொழுமின் [தொழுதாற்
குடக்குன்றி லிட்ட விளக்கது வாமே. 3

2408 பாசஞ்செய் தானைப் படர்சடை நந்தியை
நேசஞ்செய் தாங்கே நினைப்பர் நினைத்தலுங்
கூசஞ்செய்துன்னிக்குறிக்கொள்வ[2]தெவ்வண் [ணம்
வாசஞ்செய்பாசத்துள்வைக்கின்றவாறே.

2409 விட்ட விடமேறு வாறுபோல் வேறாகி
விட்ட பசுபாச மெய்கண்டோன் மேவுறான்
கட்டிய கேவலங் காணுஞ் சகலத்தைச்
சுட்டு நனவில் அதீதத்துள் தோன்றுமே. 5

2410 நாடும் பதியுடன் நற்பசு பாசமும்
நீடுமா நித்தன் நிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமும்
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே. 6

பா-ம்— [1]துடக்கொன்றும். [2]தவ்வண்ணம்.

2411 ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலேறெ னநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே. 7

2412 பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகர்வோர்க் காருக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயில நிலாவே. 8

2413 பதியும் பசுவொடு பாசமும் மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே. 9

2414 அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகும்
அறிந்தணு மூன்றுமே யாங்கணு [1]மாக
அறிந்த அனுதி வியாத்தனு [2]மாவன்
அறிந்த பதிபடைப் பானங் கவற்றையே. 10

2415 படைப்பாதி யாவது [3]பரஞ்சிவஞ் சத்தி
இடைப்பால் உயிர்கட் கடைத்திவை தூங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரஞ் செய்யப்
படைப்பாதி தூய மலமப் பரத்திலே. 11

2416 ஆகிய சூக்கத்தை யவ்விந்து நாதமும்
ஆகிய சத்தி சிவபர மேலைந்தால்
ஆகிய சூக்கத்தில் ஐங்கரு மஞ்செய்வோன்
ஆகிய தூயவீ சானனு மாமே. 12

2417 மேவும் [4]பரசிவ மேற்சத்தி நாதமும்
மேவும் பரவிந்து ஐம்முகன் வேறீசன்

பா—ம்— [1]*வாகும்; மாகில்.* [2]*மாகில்.* [3]*பரசிவஞ்.* [4]*பரஞ்சிவ.*

மேவும் உருத்திரன் மால்வேதா மேதினி
ஆகும் படிபடைப் போனர னுமே. 13

2418 படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் தோன்ற அருளுஞ்
சடத்தை விடுத்த அருளுஞ் சகலத்
[1]தடைத்த அனுதியை ஐங்தென லாமே. 14

2419 ஆருறு குண்டலி தன்னின் அகத்திட்டு
வேருகு மாயையின் முப்பான் மிகுத்திட்டங்
கீருங் கருவி யிவற்றுல் வகுத்திட்டு
வேரும் பதிபசு பாசம்வீ டாகுமே. 15

2420 வீட்கும் பதிபசு பாசமும் மீதுற
வாட்கும் இருவினை யாங்கவற் றுலுணர்ங்
தாட்கு நரக சுவர்க்கத்திற் றுனிட்டு
நாட்குற நான்தங்கு நற்பாச நண்ணுமே. 16

2421 நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்
பண்ணிய மாயையில் ஊட்டற் பரிந்தனன்
கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்
அண்ணல் அடிசேர் உபாயம தாகுமே. 17

2422 ஆகும் உபாயமே யன்றி யழுக்கற்று
மோக மறச்சுத்த னுதற்கு மூலமே.
ஆகு மறுவை யழுக்கேற்றி யேற்றல்போல்
ஆகுவ தெல்லாம் அருட்பாச மாகுமே. 18

2423 பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் [2]பதிபசு வாகுமே. 19

---

பா-ம்— [1]தடத்தவ னுதியை. [2]பதிபதி யாகுமே. ஙப

2424 அத்தத்தில் உத்தரங் கேட்ட அருந்தவர்
அத்தத்தில் உத்தர மாகும் அருள்மேனி
அத்தத்தி னாலே யணையப் பிடித்தலும்
அத்தத்தில் தம்மை யடைந்துநின் றாரே. 20

## 17. அடித்தலை*யறியும் திறங்கூறல்

2425 காலுந் தலையும் அறியார் [1]கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே. 1

2426 தலையடி யாவ தறியார் காயத்தில்
தலையடி யுச்சியில் உள்ளது மூலந்
தலையடி யான அறிவை யறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே. 2

2427 நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற
வன்றாள் அசுரர் அமரரும் உய்ந்திடப்
பின்றான் உலகம் படைத்தவன் பேர்நந்தி
தன்றா ளிணையென் தலைமிசை யானதே. 3

2428 சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் என்னை யறியகி லானாகில்
எந்தையை யானும் அறியகி லேனே. 4

2429 பன்னாத பாரொளிக் கப்புறத் தப்பால்
என்னா யகனார் இசைந்தங் கிருந்திட
முன்னா ஒளியு முரைசெய்யா மந்திரஞ்
சொன்னான் கழலிணை சூடிநின் றேனே. 5

பா-ம்— [1]கலாதிகள். *அடிதலை.

2430 பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பத மோது
நதிபொதி [1]யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயுங் காலங்கள் கண்டுகொ ளீரே. 6

2431 தரித்துநின் ருனடி தன்னிட நெஞ்சில்
தரித்துநின் ருனம ராபதி நாதன்
கரித்துநின் ருன்கரு தாதவர் சிந்தை
பரித்துநின் ருனப் பரிபாகத் தானே. 7

2432 ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள
[2]தன்ருதை தாளும் இரண்டுள காய்த்துள்
நன்ருகக் காய்ச்சிப் பதஞ்செய வல்லார்கட்
கின்றேசென் றீசனை யெய்தலு மாமே. 8

2433 கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப்பரன்கொள்ள [[3]நாடினன்
மேல்கொண்டென் செம்மை விளம்பவொண் [ணுதே. 9

2434 பெற்ற புதல்வர் [4]போற் பேணிய நாற்றமுங்
குற்றமுங் கண்டு குணங்குறை செய்யவோர்
பற்றைய வீச னுயிரது பான்மைக்குச்
செற்றமி லாச்செய்கைக் கெய்தின செய்யுமே. 10

## 18. முக்குற்றம்

2435 மூன்றுள குற்ற முழுது நலிவன
மான்றிருள் தூங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை [5]நீங்கினர் நீக்கினர் நீங்காதார்
மூன்றினுட் பட்டு முடிகின்ற வாறே. 1

பா—ம்— [1]செஞ்சடை. [2]கன்ருத. [3]ச் சாடினன். [4]பாற்
[5]நீங்கியே நீங்கினர்.

2436 காமம் வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே. 2

---

## 19. முப்பதம்

2437 தோன்றிய தொம்பதந் தற்பதஞ் சூழ்தர
ஏன்ற அசிபதம் இம்மூன்றோ டெய்தினேன்
ஆன்ற பராபர மாகும் பிறப்பற
வேன்றனன் மாளச் சிவமா யிருக்குமே. 1

2438 போதந் தனையுன்னிப் பூதாதி பேதமும்
ஓதுங் கருவிதொண் ணூறுடன் ஓராறு
பேதமும் நாதாந்தப் பெற்றியிற் கைவிட்டு
வேதஞ்சொல் தொம்பத மாகுதன்[1] மெய்ம்மையே

2439 தற்பதம் என்றுந் துவம்பதந் தானென்றும்
நிற்ப தசியத்துள் நேரிழை யாள்பதஞ்
சொற்பதத் தாலுந் தொடரவொண் [2]ணாச்சிவன்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. 2

2440 அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
கணுவொன் றிலாத சிவமுங் கலந்தால்
இணையறு பால்தேன் அமுதென இன்பத்
[3]துணையது வாயுரை [4]யற்றிடத் தோன்றுமே. 4

2441 தொம்பதந் தற்பதந் தோன்றும் அசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவ னாய்நிற்கும்
அம்பத மேலைச் சொருபமா வாக்கியஞ்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே.* 5

---

பா-ம்— [1]மேன்மையே. [2]ணான்சிவன். [3]துணையறு. [4]யற்றிடந்.
*இஃது 2473-ம், 2826-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2442 ஐம்ப தறியா தவரு மவர்சிலர்
உம்பனை நாடி யுரைமுப்ப தத்திடைச்
செம்பர மாகிய வாசி செலுத்திடத்
தம்பர யோகமாய்த் தானவ னாகுமே. 6

2443 நந்தி யறிவும் நழுவில் அதீதமாம்
இந்தியஞ் சத்தாதி விடவிய னாகும்
நந்திய மூன்றிரண் டொன்று நலமைந்து
நந்தி னனவாதி மூட்டும் அனாதியே. 7

2444 பரதுரி யத்து நனவு படியுண்ட
விரிவிற் கனவும் இதனுப சாந்தத்
துரிய சுழுனையு மோவுஞ் சிவன்பால்
அரிய துரியம் அசிபத மாமே. 8

## 20. முப்பரம்

2445 தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்
மூன்று [1]படிமண் டலத்து முதல்வனை
ஏன்றெய்தி யின்புற் றிருந்தே யிளங்கொடி
நான்று நலஞ்செய் நலந்தரு மாறே. 1

2446 மன்று நிறைந்தது மாபர மாயது
நின்று நிறைந்தது நேர்தரு நந்தியுங்
கன்று நினைந்தெழு தாயென வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காமே. 2

2447 ஆறுது தத்துவத் [2]தப்புறத் தப்பரங்
கூறு வுபதேசங் கூறிற் [3]சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. 3

பா-ம்— [1]மடிமண், [2]தப்புரத். [3]சிவபதம்.

2448 பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது
பற்றறப் பற்றிற் பரனறி வேபரம்
பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே
பற்றறப் பற்றிற் பரம்பர மாமே. 4

2449 பரம்பர மான பதிபாசம் பற்றுப்
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே. 5

2450 நனவிற் கலாதியா நாலொன் றகன்று
தனியுற்ற கேவலந் தன்னில் தானுகி
நினைவுற் றகன்ற அதீதத்துள் நேயந்
தனையுற் றிடத்தானே தற்பர மாமே. 6

2451 தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும்
பிற்காணுந் தூடணந் தானும் பிறழ்வுற்றுத்
தற்பரன் கால பரமுங் கலந்தற்ற
நற்பரா தீதமு நாடக ராதியே. 7

---

## 21. பரலட்சணம்

2452 அதீதத்து ளாகி யகன்றவன் நந்தி
அதீதத்து ளாகி யறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயிர் ஒன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே.* 1

2453 ஆதியும் அந்தமும் இல்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றுமையின்
நீதிய தாய்நிற்கும் நீடிய [1]வப்பர
போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரே. 2

---

பா-ம்— [1]வப்பரம் *இஃது 2582.ம் பாடலாகவும் வந்துள்ளது.

2454 துரியங் கடந்து துரியா தீதத்தே
அரிய வியோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே
துரியவல் லார்க்குத் துரிசில்லை தானே. 3

2455 செம்மைமுன் னிற்பச் சுவேதந் திரிவபோல்
[1]அம்மெய்ப் பரத்தோ டணுவனுள் ளாயிடப்
பொய்ம்மைச் சகமுண்ட போத வெறும்பாழிற்
செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே. 4

2456 வைச்ச கலாதி வருதத்து வங்கெட
வெச்ச இருமாயை வேருக வேரறுத்
துச்ச பரசிவ மாமுண்மை யொன்றவே
அச்சம் அறுத்தென்னை யாண்டனன் நந்தியே. 5

2457 என்னை யறிய இசைவித்த என்னந்தி
என்னை யறிந்தறி யாத விடத்துய்த்துப்
பின்னை யொளியிற் [2]சொருபம் புறப்பட்டுத்
தன்னை யளித்தான் தற்பர மாகவே. 6

2458 பரந்துஞ் சுருங்கியும் பார்புனல் வாயு
நிரந்த வளியொடு ஞாயிறு திங்கள்
அரந்த அரனெறி யாயது வாகித்
தரந்த விசும்பொன்று தாங்கிநின் றானே. 7

2459 சத்தின் நிலையினில் தானான சத்தியுந்
தற்பரை யாய்நிற்குந் தானும் பரற்குடல்
உய்த்தகு மிச்சையில் ஞானாதி பேதமாய்
நித்த நடத்து நடிக்குமா நேயத்தே. 8

2460 மேலொடு கீழ்பக்க மெய்வாய்கண் ணாசிகள்
பாலிய விந்து பரையுட் பரையாகக்

பா-ம்— [1]அம்மைப். [2]சொருபிப்.

கோலிய நான்கலை ஞானங் கொணர்விந்து
சீலமி லாவணுச் செய்திய தாமே. 9

2461 வேறு மதன்தன்மை போலுமிக் காயத்தில்
ஆறும் உபாதி யனைத்தாகுந் தத்துவம்
பேறும் பரவொளி தூண்டும் பிரகாசமாய்
ஊறு யுயிர்த்துண் டுறங்கிடு மாயையே. 10

2462 தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே செகமுண்ணும் போதமுந்
தொற்பதந் தீர்பாழிற் சுந்தரச் சோதிபுக்
கப்புற மற்றதிங் கொப்பில்லை தானே. 11

2463 பண்டை மறைகள் பரவான் உடலென்னுந்
துண்ட மதியோன் துரியாதீ தந்தன்னைக்
கண்டு பரனுமக் காரணோ பாதிக்கே
மிண்டி னவன்சுத்த னாகான் வினவிலே. 12

2464 வெளிகால் கனலப்பு மேவுமண் [1]ணின்ற
தளியா கியதற் பரங்கா ணவன்றான்
வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
வெளியாய சத்தி [2]யவன்வடி வாமே. 13

2465 மேருவி னோடே விரிகதிர் மண்டலம்
ஆர நினையும் அருந்தவ யோகிக்குச்
சீரார் தவஞ்செய்யிற் சிவனருள் தானாகும்
பேரவும் வேண்டாம் பிறிதில்லை தானே. 14

---

## 22. முத்துரியம்

2466 நனவாதி மூன்றினிற் சீவ துரியந்
தனதாதி மூன்றினிற் பர துரி யந்தான்.

---

பா-ம்— [1] ணுண்டை; ணுண்ட. [2] வியன்வடி.

நனவாதி மூன்றி னிற்சிவ துரியமா
மினதாகுந் தொந்தத் தசிபதத் திடே. 1

2467 தானு நனவில் துரியந்தன் தொம்பதந்
தானுந் துரிய நனவாதி தான்மூன்றில்
ஆனுப் பரபத மற்ற தருநனு
வானன மேன்மூன்றுந் துரியம் அணுகுமே. 2

2468 அணுவின் துரியத்து நான்கும தாகிப்
பணியும் பரதுரி யம்பயி னுன்குந்
தணிவிற் பரமாகிச் சார்மூத் துரியக்
கணுவிலிந் நான்குங் கலந்தவீ ரைந்தே. 3

2469 ஈரைந் தவத்தை யிசைமூத் துரியத்துள்
நேரந்த மாக நெறிவழி யேசென்று
பாரந்த மான [1]பராபரத் தயிக்கியத்
தோரந்த மா[2]மிரு பாதியைச் சேர்த்திடே. 4

2470 தொட்டே யிருமின் துரிய நிலத்தினை
எட்டா தெனினின் றெட்டும் இறைவனைப்
பட்டாங் கறிந்திடிற் பன்னு வுதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. 5

2471 அறிவா யசத்தென்னு மாரு றகன்று
[3]செறிவாய மாயை சிதைத்தரு ளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான அன்பர் நிலையறிந் தாரே. 6

2472 நனவின் நனவாதி நாலாந் துரியந்
தனதுயிர் தொம்பத மாமாறு போல
வினையறு சீவன் நனவாதி யாகத்
தனைய பரதுரி யந்தற் பதமே. 7

---

பா-ம்— [1]பராபரத் தயிக்கிய. மோரந்த மாயிரேமு பாதியைச் செற்றிட்டே. [2]மிருகாதியைச். [3]செறிவான.

2473 தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போல்
நம்பிய மூன்றாந் துரியத்து [1]நற்றாமம்
அம்புவி யுன்று அதிசூக்க மப்பாலைச்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. 8

## 23. மும்முத்தி

2474 சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி
[2]ஓயுப சாந்தஞ் சிவமுத்தி யானந்த
மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதாய்
ஓவுறு தாரத்தில் உள்ளுநா தாந்தமே. 1

2475 ஆவ தறியார் உயிர்பிறப் பாலுறும்
ஆவ தறியும் உயிரருட் பாலுறும்
ஆவதொன் றில்லை யகம்புறத் தென்றகன்
றோவு சிவனுடன் ஒன்றுதன் முத்தியே. 2

2476 சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவாமா கியநெறி சோகமென் போர்க்குச்
சிவமாம் அமலன் [3]சிறந்தனன் தானே. 3

2477 சித்தியும் முத்தியுந் திண்சிவ மாகிய
சுத்தியும் முத்தீ தொலைக்குஞ் சுகானந்த
சத்தியும் மேலைச் சமாதியு மாயிடும்
பெத்தம் அறுத்த பெரும்பெரு மானே. 4

## 24. முச்சொருபம்

2478 ஏறிய வாறே மலம்ஐந் திடைஅடைத்
தாறிய ஞானச் சிவோக மடைந்திட்டு

பா-ம்— [1]நன்றாகும். [2]ஒவுப. [3]சிறந்தது.

வேறு மெனமுச் சொருபத்து வீடுற்றங்
கீறதிற் பண்டைப் பரனுண்மை செய்யுமே. 1

2479 மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. 2

2480 உலகம் புடைபெயர்ந் தூழியும் போன
நிலவு சுடரொளி மூன்றுமொன் றாய
பலவும் பரிசொடு பான்மையுள் ஈசன்
அளவும் பெருமையு மாரறி வாரே. 3

2481 பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்
தருவா யுருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் [1]பன்மை
உருவா யுடனிருந் தொன்றாயன் றாமே. 4

2482 மணியொளி சோபை யிலக்கணம் [2]வாய்த்து
மணியென லாய்நின்ற வாறது போலத்
தணிமுச் சொருபாதி சத்தியாதி சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றாயே. 5

2483 கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட
நல்ல மணியொன்றி னுடியொண் முப்பதஞ்
சொல்லறு முப்பாழிற் சொல்லறு பேருரைத்
தல்லறு முத்திராந் தத்தனு பூதியே. 6

2484 உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி
நடந்தசெந் தாமரை நாதந் தகைந்தால்
அடைந்த பயோதரி யட்டி யடைத்தவ்
விடந்தரு வாசலை மேல்திற வீரே. 7

---

பா-ம்— [1]பான்மை. [2]வாய்த்த.

## 25. முக்கரணம்

2485 இடனொரு மூன்றி லியைந்த வொருவன்
கடனுறு மவ்வுரு வேறெனக் காணுந்
திடமது போலச் சிவபர சீவர்
[1]உடனுறை பேதமும் ஒன்றென லாமே. 1

2486 ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே. 2

2487 முக்கர ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக்
கைக்கா ரணமென்னத் தந்தனன் காணந்தி
மிக்க மனோன்மனி வேறே தனித்தேக
ஒக்கும துன்மனி யோதுட் சமாதியே. 3

## 26. முச்சூனிய தொந்தத்தசி*

2488 தற்பதந் தொம்பதந் தானும் அசிபதந்
தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
நிற்ப துயிர்பர னிகழ்சிவ மும்மூன்றின்
சொற்பத மாகுந் தொந்தத் தசியே. 1

2489 தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றில் தொல்தா மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவந்தோன்றின்
இந்துவின் முன்னிருள் ஏகுதல் ஒக்கமே. 2

2490 தொந்தத் தசியையவ் வாசியில் தோற்றியே
அந்த முறையீ ரைந்தாக மதித்திட்டு
அந்த மிலாத அவத்தையவ் வாக்கியத்
துந்து முறையிற் சிவமுன்வைத் தோதிடே. 3

பா-ம்— [1]உடனுறு. *முச்சூனியம் தொந்தத்தசி.

2491 வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்
துய்த்துப் பிரணவ மாம்உப தேசத்தை
மெய்த்த இதயத்து விட்டிடு மெய்யுணர்ந்
தத்தற் கடிமை யடைந்துநின் றநே. 4

2492 தொம்பதம் மாயையுள் தோன்றிடுந் தற்பதம்
அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணுமவ் வாக்கியம்
உம்பர் உரைதொந்தத் தசிவாசி யாமே. 5

2493 ஆகிய [1]வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய [2]வைவிட்டாற் காயம் உபாதானம்
ஏகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் [3]பரசிவ னுமே.* 6

2494 தாமத காமிய மாகித் தகுகுண
மாமல மூன்றும் அகார வுகாரத்தோ
டாமறு மவ்வுமவ் வாயுடன் மூன்றில்
தாமாந் துரியமுந் தொந்தத் [4]தசியதே. 7

## 27. முப்பாழ்

2495 காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்
காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் திருமே. 1

2496 மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்
சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சீவன்
ஆய வியாப்த மெனுமுப்பா ழாம்அந்தத்
தூய [5]சொரூபத்திற் சொல்முடி வாகுமே. 2

பா-ம்— [1]வச்சோமன் தேய்வது. [2]யவ்விட் டாகாயம், [3]பரன்சிவ. [4]தசியவே. [5]சொரூபத்தன். *இஃது 2570-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2497 எதிரற நாளும் எருதுவந் தேறும்
பதியெனும் நந்தி பதமது கூடக்
கதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. 3

2498 துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய [1]பரம்பரம் என்பர்கள் ஆதர்
அரிய [1]பரம்பரம் என்றே துதிக்கும்
அருநிலம் என்பதை யாரறி வாரே.* 4

2499 ஆறாறு நீங்க நமவாதி யகன்றிட்டு
வேறாகியபரை யாவென்று மெய்ப்பரன்
ஈறான வாசியிற் கூட்டு மதுவன்றோ
தேறாச் சிவாய நமவெனத் தேறிலே. 5

2500 உள்ளம் உருவென்றும் உருவம் உளமென்றும்
உள்ள பரிசறிந் தோரு மவர்கட்குப்
பள்ளமும் இல்லை திடரில்லை பாழில்லை
உள்ளமும் இல்லை உருவில்லை தானே. 6

---

## 28. காரிய காரணவுபாதி**

2501 செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி ஏழும் பகருரை
உற்றிடுங் காரிய காரணத் தோடற
அற்றிட வச்சிவ மாகும் அணுவனே. 1

2502 ஆறாறு காரியோ பாதி யகன்றிட்டு
வேறாய் நனவு மிகுத்த கனாநனா
ஆறா றகன்ற சுழுத்தி யதில்எய்தாப்
பேறா நிலத்துயிர் தொம்பதம் பேசிலே. 2

---

பா-ம்— [1]பராபரம். *இஃது 2572-ம் பாடலாகவும் வந்துள்ளது. **காரணவுபாதி.

2503 அகாரம் உயிரே உகாரம் பரமே
மகாரஞ் [1]சிவமாய் [2]வருமுப் பதத்துச்
சிகாரஞ் [3]சிவமே வகாரம் பரமே
அகாரம் உயிரென் றறையலு மாமே. 3

2504 உயிர்க்குயி ராகி யொழிவற் றழிவற்
றயிர்ப்பறு காரணோ பாதி விதிரேகத்
துயிர்ப்புறும் ஈசன் உபமிதத் தாலன்றி
வியர்ப்புறும் ஆணவம் வீடல்செய் யாவே. 4

2505 காரியம் ஏழிற் கலக்கும் கடும்பசு
காரணம் ஏழிற் கலக்கும் பரசிவன்
காரிய காரணங் கற்பனை சொற்பதப்
பாரறும் பாழில் பராபரத் தானே. 5

## 29. உபசாந்தம்

2506 முத்திக்கு வித்து முதல்வன்தன் [4]ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற் றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. 1

2507 காரியம் ஏழுங் கரந்திடு மாயையுள்
காரணம் ஏழுங் கரக்குங் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றறப்
பாரண வும்முப சாந்தப் பரிசிதே. 2

2508 அன்ன துரியமே யாத்தும சுத்தியும்
முன்னிய சாக்கிரா தீதத் துறுபுரி
மன்னு பரங்காட்சி யாவ துடனுற்றுத்
தன்னின் வியாத்தி தனின்உப சாந்தமே. 3

---

பா-ம்— [1]மலமாய். [2]வருமுப்பத்தாறிற். [3]சிவமாய் வகாரம் வடிவமாய். [4]நாமமே.

2509 ஆரு றமைந்தாண வத்தையுள் [1]நீக்குதற்
பேருன தன்னை யறிதற்பின் றீர்சுத்தி
[2]கூருத சாக்கிரா தீதங் குருபரன்
பேரும் வியாத்தம் பிறழுப சாந்தமே. 4

2510 வாய்ந்த வுபசாந்த வாதனை யுள்ளப்போய்
ஏய்ந்த சிவமாத லின்சிவா னந்தத்துத்
தோய்ந்தறல் மோனச் சுகானுபவத் தோடே
ஆய்ந்ததில் தீர்க்கை யானதீ ரைந்துமே. 5

2511 பரையின் பரவ பரத்துடன் ஏகமாய்த்
திரையினின் ருகிய தெண்புனல் போலவுற்
றுரையுணர்ந் தாரமு [3]தொக்க வுணர்ந்துளோன்
கரைகண் டானுரை யற்ற கணக்கிலே. 6

---

## 30. புறங்கூருமை

2512 பிறையுட் கிடந்த முயலை ஏறிவான்
அரைமணி வாட்கொண் டவர்தமைப் போலக்
கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்
நிறையறி வோமென்பர் நெஞ்சிலர் தாமே. 1

2513 கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்
கருந்தாட் கயத்திற் கரும்பாம்பு நீங்கப்
பெருந்தன்மை பேசுதி நீயொழி நெஞ்சே
அருந்தா அலைகட லாறுசென் றுலே. 2

2514 கருதலர் மாளக் கருவாயில் நின்ற
பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை
மருவலர் செய்கின்ற மாதவம் ஒத்தால்
தருவலர் கேட்ட தனியும்ப ராமே. 3

---

பா-ம்— [1]நீங்குதற் [2]கூருன. [3]மொக்க.

2515 பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்றும்
இணங்கியெம் மீசனே யீசனென் றுன்னிற்
கணம்பதி னெட்டுங் கழலடி காண
வணங்கெழு நாடியங் கன்புற லாமே. 4

2516 என்னிலும் என்னுயி ராய இறைவனைப்
பொன்னிலு மாமணி யாய புனிதனை
மின்னிய [1]வெவ்வுயி ராய விகிர்தனை
உன்னிலும் உன்னும் உறுவகை யாலே. 5

2517 நின்றும் இருந்துங் கிடந்தும் நிமலனை
ஒன்றும் பொருள்கள் உரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்
தொன்றா யுணரும் ஒருவனு மாமே. 6

2518 நுண்ணறி வாயுல காயுல கேழுக்கும்
எண்ணறி வாய்[2]நின்ற எந்தை பிரான்தன்னைப்
பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை
விண்ணறி வாளர் விரும்புகின் றாரே. 7

2519 விண்ணவ ராலும் அறிவறி யான்றன்னைக்
கண்ணற வுள்ளே கருதிடிற் காலையில்
எண்ணுற வாகமுப் போது மியற்றிநீ
பண்ணிடில் தன்மை பராபர னாமே. 8

2520 ஒன்றா யுலகுடன் ஏழும் பரந்தவன்
பின்றா னருள்செய்த பேரரு ளாளவன்
கன்றா மனத்தார்தங் கல்வியுள் நல்லவன்
பொன்றாத போது புனைபுக ழானே. 9

2521 போற்றியென் றேன்எந்தை பொன்னான சேவடி
[3]ஏற்றியே [4]தென்றும் எறிமணி தானகக்

பா-ம்— [1]லெவ்வுயி; லெவ்வுரு வாய. [2]நிறை. [3]ஏற்றிய; போற்றிய. [4]சென்றும்.

காற்றின் விளக்கது காய மயக்குறு
மாற்றலுங் கேட்டது மன்றுகண் டேனே. 10

2522 நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை
ஊடுபுக் காரும் உணர்ந்தறி வாரில்லை
கூடுபுக் கேறலுற் றேனவன் கோலங்கண்
மூடிக்கண் டேனுல கேழுங்கண் டேனே. 11

2523 ஆன புகழும் அமைந்ததோர் ஞானமுந்
தேனு மிருக்குஞ் சிறுவரை யொன்றுகண்
டேனமொன் றின்றி யுணர்வுசெய் வார்கட்கு
வானகஞ் செய்யு மறவனு மாமே. 12

2524 மாமதி யாமதி யாய்நின்ற மாதவர்
தூய்மதி யாகுஞ் சுடர்பர மானந்தந்
தாமதி யாகச் சகமுணச் சாந்திபுக்
காமல மற்றார் அமைவுபெற் றாரே. 13

2525 பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துரந்து
மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. 14

2526 சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துந்தோ யாதவர்
முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. 15

---

## 31. எட்டிதழ்க் கமல முக்குண அவத்தை

2527 உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்
துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு

மதிக்குங் குபேரன் வடதிசை யீசன்
நிதித்தெண் டிசையு நிறைந்துநின் [1]றே. 1

2528 ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே. 2

2529 மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கறுவே. 3

2530 ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே.* 4

2531 திசையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற ஆதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றுங்கே நிறைந்து
முகையெட்டும் உள்நின் றுதிக்கின்ற வாறே. 5

2532 ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில்
வாழும் பரமென் றதுகடந் தொன்பதில்
ஊழி பராபரம் ஓங்கிய பத்தினில்
தாழ்வது வான தனித்தன்மை தானே. 6

2533 பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்
நல்லூழி ஐந்தினுள் ளேநின்ற ஊழிகள்
செல்லூழி யண்டத்துச் சென்றவவ் வூழியுள்
அவ்வூழி யுச்சியு ளொன்றிற் பகவனே. 7

---

பா-ம்— [1] றுனே *இஃது 2979-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2534 புரியும் உலகினிற் பூண்டவெட் டானை
திரியுங் [1]களிற்றெருடு தேவர் குழாமும்
எரியு மழையும் இயங்கும் வெளியும்
பரியுமா காசத்திற் பற்றது தானே. 8

2535 ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடை யோனே. 9

2536 ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்று மிருந்து விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்துந் திருவுடை யோரே. 10

## 32. ஒன்பான் அவத்தை - ஒன்பான் அபிமானி

2537 தோற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன்பொன் கர்ப்பனவ் யாகிர்தன்
பிற்பதஞ் [2]சொலிதையன் பிரசா பத்தியன்
பொற்புவி சாந்தன் பொருதபி மானியே. 1

2538 நவமா மவத்தை நனவாதி பற்றிற்
பவமா மலங்குணம் பற்றற்றுப் பற்றுத்
தவமான சத்திய ஞானப் பொதுவிற்
றுவமார் துரியஞ் சொரூபம தாமே. 2

2539 சிவமான சிந்தையிற் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான அந்தத்தின் நற்சிவ போதந்
தவமா மவையாகித் தானல்ல வாகுமே. 3

பா-ம்— [1]களிறெருடு. [2]சிற்சொலிதை.

2540 முன்சொன்ன வொன்பானின் முன்னுறு தத்துவந்
தன்சொல்லில் எண்ணத்தகாவொன்பான் வேறுள
பின்சொல்ல லாகுமிவ் வீரொன்பான் பேர்த்திட்
தன்செய்த வாண்டவன் றான்சிறந் தானே. [டுத்

2541 உகந்தன ஒன்பதும் ஐந்தும் உலகம்
பகர்ந்த பிரானென்னும் பண்பினை நாடி
அகந்தெம் பிரானென்பன் அல்லும் பகலு
மிகந்தன வல்வினை யோடறுத் தானே. 5

2542 நலம்பல காலந் தொகுத்தன நீளங்
குலம்பல வண்ணங் குறிப்பொடுங் கூடும்
பலம்பல பன்னிரு கால நினையும்
நிலம்பல வாறின னீர்மையன் றானே. 6

2543 ஆதி பராபர மாகும் பராபரை
சோதி பரமுயிர் சொல்லுநற் றத்துவம்
ஓதுங் கலைமாயை யோரிரண் டோர்முத்தி
நீதியாம் பேதமொன் பானுடன் ஆதியே. 7

2544 தேறாத சிந்தை தெளியத் தெளிவித்து
வேறா நரக சுவர்க்கமும் மேதினி
ஆறாப் பிறப்பும் உயிர்க்கரு ளால்வைத்தான்
வேறாத் தெளியார் வினையுயிர் பெற்றதே. 8

2545 ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி
நன்பாற் பயிலு நவதத் துவமாதி
ஒன்பானில் நிற்பதோர் முத்துரி யத்துறச்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே. 9

## 33. சுத்தாசுத்தம்

2546 நாசி நுனியினின் நான்குமூ விரலிடை
ஈசன் இருப்பிடம் யாரும் அறிகிலர்
பேசி யிருக்கும் பெருமறை யம்மறை
கூசி யிருக்குங் குணமது வாமே. 1

2547 கருமங்கள் [1]ஒன்று கருதுங் கருமத்
துரிமையுங் கன்மமும் மூன்றும் பிறவிக்
கருவினை யாவது கண்டகன் றன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுமே. 2

2548 மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லை கருத்தில்லை தானே. 3

2549 மோழை யடைந்து முழைதிறந் துள்புக்குக்
கோழை யடைகின்ற தண்ணற் குறிப்பினில்
ஆழ அடைத்தங் கனலிற் புறஞ்செய்து
தாழ அடைப்பது தன்வலி யாமே. 4

2550 காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளே[2]யெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்துள் நின்ற கருத்தறி யாரே. 5

2551 ஆகுசம் ஆகுசம் என்பார் அறிவிலார்
ஆகுச மாமிடம் ஆரும் அறிகிலார்
ஆகுச மாமிடம் ஆரும் அறிந்தபின்
ஆகுச மானிடம் ஆகுச மாமே. 6

2552 ஆகுச மில்லை அருநிய மத்தருக்
காகுச மில்லை அரனைஅர்ச் சிப்பவர்க்

பா-ம்— [1]ஒன்றுட். [2]யென்றுந் தேடித் திரிபவர்.

காசூச மில்லையாம் அங்கி வளர்ப்போர்க்
காசூச மில்லை அருமறை ஞானிக்கே. 7

2553 வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்
சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்குங்
குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்
கழிபட் டவர்க்கன்றிக் காணவொண் ணாதே. 8

2554 தூய்மணி தூயனல் தூய ஒளிவிடுந்
தூய்மணி தூயனல் தூரறி வாரில்லை
தூய்மணி தூயனல் தூரறி வார்கட்குத்
தூய்மணி தூயனல் தூயவு மாமே. 9

2555 தூயது வாளா வைத்தது தூநெறி
தூயது வாளா நாதன் திருநாமந்
தூயது வாளா அட்டமா சித்தியுந்
தூயது வாளாத் தூயடிச் சொல்லே. 10

2556 பொருளது வாய்நின்ற புண்ணியன் எந்தை
அருளது போற்றும் அடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளது வாச்சிந்தை மயங்குகின் றாரே. 11

2557 வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே. 12

---

## 34. முத்திநிந்தை*

2558 பரகதி யுண்டென்ன இல்லையென் போர்கள்
நரகதி செல்வது ஞாலம் அறியும்

பா-ம்— *மோக்ஷநிந்தை.

இரகதி செய்திடு வார்கடை தோறுந்
துரகதி யுண்ணத் தொடங்குவர் தாமே. 1

2559 கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்
தாடவல் லாரவர் [1]பேறெது வாமே. 2

2560 புறப்பட்டுப் போகும் புகுதுமென் னெஞ்சில்
திறப்பட்ட சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
அறப்பட்ட மற்றப் பதியென் [2]றழைத்தேன்
இறப்பற்றி னேன்இங் கிதென்னென்கின் றானே. 3

2561 திடரிடை நில்லாத நீர்போல ஆங்கே
உடலிடை நில்லா உறுபொருள் காட்டிக்
கடலிடை நில்லாக் கலஞ்சேரு மாபோல்
அடலெரி வண்ணனும் அங்குநின் றானே. 4

2562 தாமரை நூல்போல் தடுப்பார் பரத்தொடும்
போம்வழி வேண்டிப் புறமே யுழிதர்வர்
காண்வழி காட்டக்கண் காணுக் கலதிகள்
தீநெறி செல்வான் திரிகின்ற வாறே. 5

2563 மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள்
கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன்
காடும் மலையுங் கழனி கடந்தோறும்
ஊடும் உருவினை யுன்னகி லாரே. 6

2564 ஆவது தெற்கும் வடக்கும் அமரர்கள்
போவர் குடக்குங் குணக்குங் குறிவழி
நாவினின் மந்திர [3]மென்று நடுவங்கி
வேவது செய்து விளங்கிடு [4]வீரே. 7

பா-ம்— [1]பேறிது. [2]றழைக்கில். [3]மொன்று. [4]நீரே.

2565 மயக்குற நோக்கினும் மாதவஞ் [1]செய்யார்
தமக்குறப் பேசின தாரணை கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கிநின் றாரே. 8

## 35. இலக்கணாத் திரயம்

2566 விட்ட விலக்கணை தான்போம் [2]வியோமத்துத்
தொட்டு விடாத துபசாந்தத் தேதொகும்
விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியிற்
சுட்டு மிலக்கணா தீதஞ் சொரூபமே. 1

2567 வில்லின் விசைநாணிற் கோத்திலக் கெய்தபின்
கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தன
வில்லு ளிருந்தெறி கூரும் ஒருவற்குக்
கல்கலன் என்னக் கதிரெதி ராமே. 2

## 36. தத்துவமசி வாக்கியம்

2568 சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்
தாவு பரதுரி யத்தினில் தற்பதம்
மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பத
மோவி விடுந்தத் துவமசி உண்மையே. 1

2569 ஆறா றகன்ற அணுத்தொம் பதஞ்சுத்தம்
ஈறான தற்பதம் எய்துப சாந்தத்துப்
பேறா கியசீவன் நீங்கிப்பிர சாதத்து
வீறான தொந்தத் தசிதத்வ மசியே. 2

2570 ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்

பா-ம்— [1]செய்வார். [2]வியமத்துத்.

[1]தாருப சாந்தமே தொந்தத் தசியென்ப
ஆகிய சீவன் பரன்சிவ னாமே. 3

2571 [2]துவந்தத் தசியே தொந்தத் தசியும்
அவைமன்னு வந்து வயத்தேக மான
தவமுறு தத்துவ மசிவே தாந்த
[3]சிவமா மதுஞ்சித் தாந்தவே தாந்தமே. 4

2572 துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரமென்ப ராகாரி தன்றென்னார்
உரிய பரம்பர மாமொன் றுதிக்கும்
அருநிலம் என்பதை யாரறி வாரே. 5

2573 தொம்பதந் தற்பதஞ் சொல்லும் அசிபதம்
நம்பிய முத்துரி யத்துமே னாடவே
யும்பத மும்பத மாகும் உயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே. 6

2574 வைத்த துரிய மதிற்சொரு பானந்தத்
துய்த்த பிரணவ மாமுப தேசத்தை
மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர்
வைத்த படியே யடைந்துநின் றானே. 7

2575 நனவாதி ஐந்தையும் நாதாதியில் வைத்துப்
பினமா மலத்தைப் பின்வைத்துப் பின்சுத்தத்
தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி
மனவா சகங்கெட்ட மன்னனை நாடே. 8

2576 பூரணி யாது புறம்பொன்றி லாமையின்
பேரணி யாதது பேச்சொன்றி லாமையில்
ஓரணை யாதது வொன்றுமி லாமையிற்
காரண மின்றியே காட்டுந் தகைமைத்தே. 9

பா—ம்— [1]தாகும் பதார்த்தமே. [2]துவம்சித்தசியே தொந்தத் தசியும். [3]சிவமாகும் தொம்மசி சித்தாந்த வேதமே.

## மகா வாக்கியம்

2577 நீயது வானா யெனநின்ற பேருரை
ஆயது நானானேன் என்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாகுமே. 10

2578 உயிர்பர மாக உயர்பர சீவன்
அரிய சிவமாக அச்சிவ வேதத்
திரியிலுஞ் சீராம் பராபரன் என்ன
உரிய உரையற்ற வோமய மாமே. 11

2579 வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்
ஆய்நாசி யுச்சி முதலவை யாய்நிற்குந்
தாய்நாடி யாதிவாக் காதி சகலாதி
சேய்நா டொளியெனச் சிவகதி யைந்துமே. 12

2580 அறிவறி யாமை இரண்டு மகற்றிச்
செறிவறி வாய்எங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே. 13

2581 அறிவார் அறிவன அப்பும் அனலும்
அறிவார் அறிவன அப்புங் கலப்பும்
அறிவான் இருந்தங் கறிவிக்கி னல்லால்
அறிவான் அறிந்த அறிவறி யோமே. 14

2582 அதீதத்துள் ளாகி அகன்றவன் நந்தி
அதீதத்துள் ளாகி அறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே. 15

2583 அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன்
முடிதொழ ஈசனும் முன்னின் றருளிப்

படிதொழ நீபண்டு பாவித்த தெல்லாங்
கடிதொழக் காணென்னுங் கண்ணுத லானே. 16

2584 நின்மல மேனி நிமலன் பிறப்பிலி
என்னுளம் வந்திவன் என்னடி யானென்று
பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்
நின்மல மாகென்று நீக்கவல் லானே. 17

2585 துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு
பறந்ததென் உள்ளம் பணிந்து கிடந்தே
மறந்தறி யாவென்னை வானவர் கோனும்
இறந்து பிறவாமல் ஈங்குவைத் தானே. 18

2586 மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் மெய்த்
தவ்வாய அந்தக் கரணம் அகிலமும் [தோற்றத்
எவ்வா யுயிரும் இறையாட்ட ஆடலாற்
கைவா யிலாநிறை எங்குமெய் கண்டதே. 19

---

## 37. விசுவக் கிராசம்

2587 அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே. 1

2588 உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்
படருஞ் சிவசத்தி தாமே பரமாம்
உடலைவிட் டிந்த உயிரெங்கு மாகிக்
கடையுந் தலையுங் கரக்குஞ் சிவத்தே. 2

2589 செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரியம்
அவியின் றியமன மாதிகள் ஐந்துங்

குவிவொன் றிலாமல் விரிந்து குவிந்து
தவிர்வொன் றிலாத சராசரந் தானே. 3

2590 பரனெங்கு மாரப் பரந்துற்று நிற்குந்
திரனெங்கு மாகிச் செறிவெங்கு மெய்தும்
உரனெங்கு மாயுல குண்டு உமிழ்க்கும்
வரமிங்ஙன் கண்டியான் வாழ்ந்துற்ற வாறே. 4

2591 அளந்து துரியத் தறிவினை வாங்கி
உள்ளங்கொள் பரஞ்சகம் உண்ட தொழித்துக்
கிளர்ந்த பரஞ்சிவஞ் சேரக் கிடைத்தால்
விளங்கிய வெட்ட வெளியனு மாமே. 5

2592 இரும்பிடை நீரென என்னையுள் வாங்கிப்
பரம்பர மான பரமது விட்டே
உரம்பெற முப்பாழ் ஒளியை விழுங்கி
இருந்தஎன் நந்தி இதயத்து ளானே. 6

2593 கரியுண் விளவின் கனிபோல் உயிரும்
உரிய பரமுமுன் னேதுஞ் சிவமும்
அரிய துரியமேல் அகிலமும் எல்லாந்
திரிய விழுங்குஞ் சிவபெரு மானே. 7

2594 அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்
தந்தம் பரம்பரன் தன்னிற் பரமுடன்
நந்தமை யுண்டுமெஞ் ஞானநே யாந்தத்தே
நந்தி யிருந்தனன் நாமறி யோமே. 8

---

## 38. வாய்மை

2595 அற்ற துரைக்கில் அருளுப தேசங்கள்
குற்ற மறுத்தபொன் போலுங் கனலிடை

அற்றற வைத்திறை மாற்றற ஆற்றிடில்
செற்றம் அறுத்த செழுஞ்சுட ராகுமே. 1

2596 எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபமங் கில்லை
எல்லாம் அறிந்த [1]அறிவினை நானென்னில்
எல்லாம் அறிந்த இறையென லாமே. 2

2597 தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
மூலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனைக் கண்டுகொண் டேனே.* 3

2598 தானே யுலகில் தலைவ னெனத்தகுந்
தானே யுலகுக்கோர் தத்துவ மாய்நிற்கும்
வானே மழைபொழி மாமறை கூர்ந்திடும்
ஊனே யுருகிய வுள்ளமொன் றுமே. 4

2599 அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்
இருளற்ற சிந்தை இறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே. 5

2600 மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்தன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா ஒருவனை
உய்கலந் தூழித் தலைவனுமாய் நிற்கும்
மெய்கலந் தின்பம் விளைந்திடும் மெய்யர்க்கே. 6

2601 மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்
பொய்கலந் தாருட் புகுதாப் புனிதனைக்
கைகலந் தாவி எழும்பொழு தண்ணலைக்
கைகலந் தார்க்கே கருத்துற லாமே. 7

---

பா-ம்— [1]அறிவினை. *இஃது 2845-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2602 எய்திய காலத் திருபொழு துஞ்சிவன்
மெய்செயின் மேலை விதியது வாய்நிற்கும்
பொய்யும் புலனும் புகலொன்று நீத்திடில்
ஐயனும் அவ்வழி யாகிநின் றானே. 8

2603 எய்துவ தெய்தா தொழிவ திதுவருள்
உய்ய அருள்செய்தான் உத்தமன் சீர்நந்தி
பொய்செய்புலன்நெறியொன்பதுந்தாட்கொளின்
மெய்யென் புரவியை மேற்கொள்ள லாமே. 9

2604 கைகலந் தானைக் கருத்தினுள் நந்தியை
மெய்கலந் தான்தன்னை வேத முதல்வனைப்
பொய்கலந் தார்முன் புகுதாப் புனிதனைப்
பொய்யொழிந் தார்க்கே புகலிட மாமே. 10

2605 மெய்த்தாள் அகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாள் கொண்டாருந் திறந்தறி வாரில்லை
பொய்த்தாள் இடும்பையைப் பொய்யற நீவிட்டங்
[1]கத்தாள் திறக்கில் அரும்பேற தாமே. 11

2606 உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்
மெய்யன் அரனெறி மேலுண்டு திண்ணெனப்
பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு
ஐயனும் அங்கே அமர்ந்துநின் றானே. 12

2607 வம்பு பழுத்த [2]மலர்ப்பழம் ஒன்றுண்டு
தம்பாற் பறவை புகுந்துணத் தாவொட்டா
தம்புகொண் டெய்திட் டகலத் [3]துரத்திடிற்
செம்பொற் சிவகதி சென்[4]றெய்த லாமே. 13

---

பா—ம்— [1]கைத்தாள். [2]பலாப்பழம். [3]துரந்திடிற். [4]றெய்தலு மாமே.

2608 மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
தியக்கஞ்செய் யாதே சிவனெம் பெருமான்
உயப்போ எனமனம் ஒன்றுவித் தானே. 14

2609 மனமது தானே நினையவல் லாருக்
கினமெனக் கூறு மிருங்காய மேவற்
றனிவினி ளுதன்பால் தக்கன செய்யில்
புனிதன் செயலாகும் போதப் புவிக்கே. 15

---

## 39. ஞானிசெயல்

2610 முன்னை [1]வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணுர் பேர்ந்தறப் பார்ப்பர்கள்
தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
நன்மையில் ஐம்புலன் நாடலி ளுலே. 1

2611 தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. 2

2612 மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்ளு
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்ளுல்
தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. 3

---

## 40. அவாவறுத்தல்

2613 வாசியு மூசியும் பேசி வகையிளுல்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை

பா-ம்— [1] நிலைவரின்.

ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளி தாமே. 1

2614 மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சில்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே. 2

2615 ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே. 3

2616 அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே
[1]படுவழி செய்கின்ற பற்றற வீசி
விடுவது வேட்கையை மெய்ந்நின்ற ஞானந்
தொடுவது தம்மைத் தொடர்தலு மாமே. 4

2617 உவாக்கடல் ஒக்கின்ற ஊழியும் போன
துவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வானோர்
அவாக்கட லுட்பட் டழுந்தினர் மண்ணோர்
தவாக்கடல் ஈசன் தரித்துநின் றானே. 5

2618 நின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்
[2]துன்தொழி லற்றுச் சுத்தம தாகலும்
பின்றைங் கருமமும் பேர்த்தருள் நேர்பெற்றுத்
துன்ற அழுத்தலும் ஞானிகள் தூய்மையே. 6

2619 உண்மை யுணர்ந்துற ஒண்சித்தி முத்தியாம்
பெண்மயற் கெட்டறப் பேறட்ட சித்தியாந்
திண்மையின் ஞானி சிவகாயங் கைவிட்டால்
வண்மை யருள்தான் [3]அடைந்தன்பில் ஆறுமே 7

---

பா-ம்— [1]படுபழி. [2]உன்தொழி. [3]அடைந்தபின்.

2620 அவனிவன் ஈசனென் றன்புற நாடிச்
சிவனிவன் ஈசனென் றுண்மையை யோரார்
பவனிவன் பல்வகை யாமிப் பிறவி
புவனிவன் போவது பொய்கண்ட போதே. 8

2621 கொதிக்கின்ற வாறுங் குளிர்கின்ற வாறும்
பதிக்கின்ற வாறிந்தப் பாரக முற்றும்
விதிக்கின்ற ஐவரை வேண்டா துலகம்
நொதிக்கின்ற காயத்து நூலொன்று மாமே. 9

2622 உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
[1]சிந்தையில் வைத்துத் தெளிவுறச் சேர்த்திட்டால்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே. 10

## 41. பத்தியுடைமை

2623 முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரான்தனைச்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்
பத்தர் பரசும் பசுபதி தானென்றே. 1

2624 அடியார் அடியார் [2]அடியார்க் கடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட
அடியா னிவனென் றடிமைகொண் டானே. 2

2625 நீரிற் குளிரும் நெருப்பினிற் சுட்டிடும்
ஆரிக் கடனந்தி யாமா றறிபவர்
பாரிற் [3]பயனுறைப் பார்க்கிலும் நேரியர்
ஊரில் உமாபதி யாகின்ற னே. 3

பா-ம்— [1]சிந்தை யுறவே தெளிந்திருள் நீங்கினால். [2]அடியா ரடிமைக். [3]பயனுறும்.

2626 ஒத்துல கேழும் அறியா ஒருவனென்
றத்தன் இருந்திடம் ஆரறி வார்சொல்லப்
பத்தர்தம் பத்தியிற் ¹பாற்படில் அல்லது
முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரே. 4

2627 ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென் நாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றா னூடுவந் துள்புகுந் தானே. 5

2628 பெத்தத்துந் தன்பணி இல்லை பிறத்தலான்
முத்தத்துந் தன்பணி இல்லை முறைமையால்
அத்தற் கிரண்டும் அருளால் அளித்தலாற்
பத்திப்பட் டோர்க்குப் பணியொன்றும் இல்லையே. 6

2629 பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக்
குறவஞ் சிலம்பக் குளிர்வரை யேறி
நறவார் மலர்கொண்டு நந்தியை யல்லால்
இறைவனென் றென்மனம் ஏத்தகி லாவே. 7

2630 உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்
பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின்
²செறிதுணை செய்து சிவனடி சிந்தித்
துறுதுணை யாயங்கி யாகிநின் றானே. 8

2631 வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற
தானவர் முப்புரஞ் செற்ற தலைவனைக்
கானவன் என்றுங் கருவரை யானென்றும்
ஊனத னுள்நினைந் தொன்றுபட் டாரே. 9

2632 நிலைபெறு கேடென்று முன்னே படைத்த
தலைவனை நாடித் தயங்குமென் உள்ளம்

---

பா-ம்— ¹பாற்படல், ²செறுதுணை.

மலையுளும் வானகத் துள்ளும் புறத்தும்
உலையுளும் உள்ளத்து மூழ்கிநின் றேனே. 10

## 42. முத்தியுடைமை

2633 முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்த்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்
பத்தியி லுற்றோர் பரானந்த போதரே. [மைப்

2634 வளங்கனி தேடிய வன்றுட் பறவை
உளங்கனி தேடி யுழிதரும் போது
களங்கனி யங்கியிற் கைவிளக் கேற்றி
நலங்கொண்ட நால்வரும் நாடுகின் றாரே. 2

## 43 சோதனை

2635 எம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
தம்மா னடிதந் தருட்கடல் ஆடினோம்
எம்மாய மும்விடுத் தெம்மைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே. 1

2636 அறிவுடை யானரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன்
பொறியுடை யான்புலன் ஐந்துங் கடந்த
குறியுடை யானொடுங் கூடுவன் நானே. 2

2637 அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறி யாமையை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை யழகிய வாறே. 3

2638 குறியாக் [1]குறியினிற் கூடாத கூட்டத்
தறியா அறிவில் அவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பராநந்தி நீடருள் ஒன்றுஞ்
செறியாச் செறிவே சிவமென லாமே. 4

2639 காலினில் ஊறுங் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் [2]பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்குங் கலந்துநின் றானே. 5

2640 விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
இருப்பர் மனத்திடை எங்கள் பிரானார்
நெருப்புரு வாகி நிகழ்ந்துநின் றாரே. 6

2641 நந்தி பெருமான் நடுவுள் வியோமத்து
வந்தென் அகம்படி கோயில்கொண் டான் [[3]கொள்ள
எந்தைவந் தானென் றெழுந்தேன் எழுதலுஞ்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. 7

2642 தன்மைவல் லோனைத் தவத்துள் நலத்தினை
நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப்
புன்மைபொய் யாதே புனிதனை நாடுமின்
பன்மையில் உம்மைப் பரிசுசெய் வானே. 8

2643 தொடர்ந்துநின் றானென்னைச் சோதிக்கும் போது
தொடர்ந்துநின் றானல்ல நாதனும் அங்கே
படர்ந்துநின் றாதிப் பராபரன் எந்தை
கடந்துநின் றவ்வழி காட்டுகின் றானே. 9

2644 அவ்வழி காட்டும் அமரர்க் கரும்பொருள்
இவ்வழி தந்தை[4]தாய் கேளியான் ஒக்குஞ்

பா-ம்— [1]குறிப்பினிற். [2]பழத்தின். [3]சொன்ன. [4]தாயாய்.

செவ்வழி சேர்சிவ லோகத் திருந்திடும்
இவ்வழி நந்தி இயல்பது தானே. 10

2645 எறிவது ஞானத் [1]துறைவாள் உருவி
அறிவது னோடேயவ் வாண்டகை யானைச்
செறிவது தேவர்க்குத் தேவர் பிரானைப்
பறிவது பல்கணப் பற்றுவி டாரே. 11

2646 ஆதிப் பிரான்தந்த வாளங்கைக் கொண்டபின்
வேதித்து என்னை விலக்கவல் லாரில்லை
சோதிப்பன் அங்கே சுவடு படாவண்ணம்
ஆதிக்கட் டெய்வ மவனிவ னாமே. 12

2647 அந்தக் கருவை [2]யருவை வினைசெய்தற்
பந்தம் பணியச்சம் பல்பிறப் பும்வாட்டிச்
சிந்தை திருத்தலுஞ் சேர்ந்தாரச் சோதனை
சந்திக்கத் தற்பர மாகுஞ் சதுரர்க்கே. 13

2648 உரையற்ற தொன்றை யுரைத்தான் எனக்குக்
கரையற் றெழுந்த கலைவேட் டறுத்துத்
திரையொத்த என்னுடல் நீங்கா திருத்திப்
புரையற்ற என்னுட் புகுந்தற் பரனே. 14

**எட்டாந் தந்திரம் முற்றிற்று**

---

பா-ம்— [1]*திறைவாள்.* [2]*யருவினை செயலப்.*

## ஒன்பதாந் தந்திரம்*

### 1. குருமட தரிசனம்

2649 பலியும் அவியும் பரந்து புகையும்
ஒலியும்எம் ஈசன் தனக்கென்றே யுள்கிக்
குவியுங் குருமடங் கண்டவர் தாம்போய்த்
தளிரு மலரடி சார்ந்துநின் றாரே. 1

2650 இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியின்
அவனுக் கிவனில்ல மென்றென் றறிந்தும்
அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே. 2

2651 நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடுஞ் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட வரியன் சிறப்பிலி எம்மிறை
ஓடும் உலகுயி ராகிநின் றானே. 3

2652 இயம்புவன் ஆசனத் தோடு மலையும்
இயம்புவன் சித்தக் குகையும் [1]இடமும்
இயம்புவன் ஆதாரத் தோடு [2]வனமும்
இயம்புவன் ஈரா றிருநிலத் தோர்க்கே. 4

2653 முகம்பீட மாமட முன்னிய தேயம்
அகம்பர வர்க்கமே யாசில்செய் காட்சி
அகம்பர மாதனம் எண்ணெண் கிரியை
சிதம்பரந் தற்குகை யாதாரந் தானே. 5

2654 அகமுக மாம்பீடம் ஆதார மாகுஞ்
சகமுக மாஞ்சத்தி யாதன மாகுஞ்

---

பா-ம்— [1]மடமும். [2]மனமும். *இது மகுடாகமத்தின் சாரம் என்பர்.

செகமுக மாந்தெய்வ மேசிவ மாகும்
அகமுகம் ஆய்ந்த அறிவுடை யோர்க்கே. 6

2655 மாயை யிரண்டு மறைக்க மறைவுறுங்
காயமோ ரைந்துங் கழியத்தா னாகியே
தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்துள்
ஆய்பவர் ஞானதி மோனத்த ராமே. 7

---

## 2. ஞானகுரு தரிசனம்

2656 ஆறெட்டு முப்பதும் அங்கே யடங்கிடிற்
கூரக் குருபரன் கும்பிடு [1] தந்திடும்
வேறே சிவபத மேலாய் அளித்திடும்
பேறுக ஆனந்தம் பேணும் பெருகவே. 1

2657 துரியங்கள் மூன்றுங் கடந்தொளிர் சோதி
அரிய பரசிவம் யாவையு மாகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேசவொண் ணாதே. 2

2658 ஆயன நந்தி யடிக்கென் றலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்தவென் வாய்பெற்றேன்
காயன நந்தியைக் காணவென் கண்பெற்றேன்
சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனே. 3

2659 கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் [2] குறித்தஅப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே, 4

2660 அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்களுக்

---

பா-ம்— [1] தந்திடில். [2] குறித்த பொழுதே.

கண்ணல் அழிவின்றி யுள்ளே அமர்ந்திடும்
அண்ணலைக் காணில் அவனிவ னாமே. 5

2661 தோன்ற அறிதலுந் [1]தோன்றல் தோன்றாமையு
மான்ற வறிவு மறிநன வாதிகள்
மூன்றவை நீங்குந் துரியங்கள் மூன்றற
ஊன்றிய நந்தி யுயர்மோனத் தானே. 6

2662 சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்
கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னியும்
பந்த மிலாத பளிங்கின் உருவினள்
பந்தம் அறுத்த பரங்குரு பற்றே. 7

2663 மனம்புகுந் தானுல கேழு மகிழ
நிலம்புகுந் தானெடு வானிலந் தாங்கிச்
சினம்புகுந் தான்திசை எட்டும் நடுங்க
வனம்புகுந் தானூர் வடக்கென்ப [2]தாமே. 8

2664 தானான வண்ணமுங் கோசமுஞ் சார்தருந்
தானாம் பறவை வனமெனத் தக்கன
தானான சோடச மார்க்கந்தான் நின்றிடில்
தானாந் தசாங்கமும் வேறுள்ள தானே. 9

2665 மருவிப் பிரிவறி யாஎங்கள் மாநந்தி
உருவ நினைக்கநின் றுள்ளே யுருக்குங்
கருவிற் கரந்துள்ளங் காணவல் லார்க்கிங்
கருவினை கண்சோரும் [3]அழிவார் அகத்தே. 10

2666 தலைப்பட லாமெங்கள் தத்துவன் தன்னைப்
பலப்படு பாசம் அறுத்தறுத் திட்டு

பா-ம்— [1]தோன்றித். [2]தானே. [3]அடியார், அடியவ ராகத்தே.

நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கில்
தலைப்பட லாகுந் தருமமுந் தானே. 11

2667 நினைக்கின் நினைக்கு நினைப்பவர் தம்மைச்
சுனைக்குள் விளைமலர் சோதியி னானைத்
**தினைப்பினந் தன்ன சிறுமைய ரேனுங்**
கனத்த மனத்தடைந் தாலுயர்ந் தாரே. 12

2668 தலைப்படுங் காலத்துத் தத்துவன் தன்னை
விலக்குறின் மேலை விதியென்றுங் கொள்க
அனைத்துல காய்நின்ற ஆதிப் பிரானை
நினைப்புறு வார்பத்தி தேடிக்கொள் வாரே. 13

2669 நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி
நிகழ்வொழிந் தாரெம் பிரானொடுங் கூடித்
திகழ்வொழிந் தார்தங்கள் சிந்தையி னுள்ளே
புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே. 14

2670 வந்த மரகத மாணிக்க ரேகைபோற்
சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்கம்
இந்த இரேகை யிலாடத்தின் மூலத்தே
சுந்தரச் சோதியுட் சோதியு மாமே. 15

2671 உண்ணும் வாயும் உடலும் உயிருமாய்க்
கண்ணுமா யோகக் கடவுள் இருப்பது
மண்ணு நீரனல் காலொடு வானுமாய்
விண்ணு மின்றி வெளியானோர் மேனியே. 16

2672 பரசு பதியென்று பார்முழு தெல்லாம்
பரசிவ னாணை நடக்கும் பாதியாற்
பெரிய பதிசெய்து பின்னும் அடியார்க்
குரிய பதியும்பா ராக்கிநின் றானே. 17

2673 அம்பர நாதன் அகலிட னீள்பொழில்
தம்பர மல்லது தாமறி யோம்என்பர்
உம்பருள் வானவர் தானவர் கண்டிலர்
எம்பெரு மானருள் பெற்றிருந் தாரே. 18

2674 கோவணங் கும்படி கோவண மாகிப்பின்
நாவணங் கும்படி நந்தி யருள்செய்தான்
தேவணங் கோமினிச் சித்தந் தெளிந்தனம்
போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமே. 19

---

## 3. பிரணவ சமாதி

2675 தூலப் பிரணவஞ் சொரூபானந்தப் பேருரை
பாலித்த சூக்கும மேலைச் சொரூபப்பெண்
ஆலித்த முத்திரை யாங்கதிற் [1]காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே. 1

2676 ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே. 2

2677 ஓங்காரத் துள்ளே யுதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே. 3

2678 வருக்கஞ் சுகமாம் பிரமமு மாகும்
[2]அருக்கஞ் சராசர மாகும் உலகில்
தருக்கிய வாதார மெல்லாந்தன் மேனி
சுருக்கமின் ஞானந் தொகுத்துணர்ந் தோரே. 4

பா-ம்— [1]சூக்கும. [2]வருக்கஞ்.

2679 மலையு மனைபவ மருள்வன வாவன
நிலையிற் றரிசனம் தீப நெறியாந்
தலமுங் குலமுந் தவஞ்சித்த மாகும்
நலமுஞ்சன் மார்க்கத் துபதேசந் தானே. 5

2680 சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட்
காடிய வீராறின் அந்தமும் ஈரேழிற்
கூடிய அந்தமுங் கோதண்ட முங்கடந்
[1]தேறியே ஞானஞே யாந்தத் திருக்கவே. 6

---

## 4. ஒளி

2681 ஒளியை யறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக வுடனிருந் தானே. 1

2682 புகலெளி தாகும் புவனங்கள் எட்டும்
அகலொளி தாயிரு ளாசற வீசும்
பகலொளி செய்தது மத்தா மரையிலே
இகலொளி செய்தெம் பிரானிருந் தானே. 2

2683 விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன்
துளங்கொளி பெற்றன சோதி யருள
வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு
களங்கொளி செய்து கலந்துநின் றானே. 3

2684 இளங்கொளி யீசன் பிறப்பொன்று மில்லி
துளங்கொளி ஞாயிறுந் திங்களுங் [2]கண்கள்
வளங்கொளி யங்கியு மற்றைக்கண் நெற்றி
விளங்கொளி செய்கின்ற மெய்காய மாமே. 4

பா-ம்— [1]தேறிய. [2]காண.

2685 மேலொளி கீழதன் மேவிய மாருதம்
[1]பாலொளி யங்கி பரந்தொளி யாகாசம்
நீரொளி செய்து நெடுவிசும் பொன்றிலும்
மேலொளி யைந்தும் ஒருங்கொளி யாமே, 5

2686 மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி
துன்னிய வாறொளி தூய்மொழி நாடொறும்
உன்னிய வாறொளி யொத்தது தானே. 6

2687 விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி யீசனைச் சொல்லுமெப் போதும்
உளங்கொளி யூனிடை நின்றுயிர்க் கின்ற
வளங்கொளி எங்கும் மருவிநின் றானே. 7

2688 விளங்கொளி யவ்வொளி யவ்விருள் மன்னுந்
துளங்கொளி யான்தொழு வார்க்கும் ஒளியான்
அளங்கொளி யாரமு தாகநஞ் சாருங்
களங்கொளி யீசன் கருத்தது தானே. 8

2689 இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்
துலங்கொளி போல்வது தூங்கருட் சத்தி
விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி
உளங்கொளி யுள்ளே யொருங்குகின் றானே. 9

2690 உளங்கொளி யாவதென் உள்நின்ற சீவன்
வளங்கொளி யாநின்ற மாமணிச் சோதி
விளங்கொளி யாய்மின்னி விண்ணில் ஒடுங்கி
வளங்கொளி யாயத்து ளாகிநின் றானே. 10

2691 விளங்கொளி யாய்நின்ற விகிர்தன் இருந்த
துளங்கொளி பாசத்துள் தூங்கிருள் சேராக்

---

பா-ம்— [1]*பாரொளி.*

கலங்கிருள் நட்டமே கண்ணுத லாட
விளங்கொளி யுன்மனத் தொன்றிநின் றானே. 11

2692 போது கருங்குழற் போனவர் தூதிடை
ஆதி பரத்தை அமரர் பிரானொடுஞ்
சோதியும் அண்டத்தப் பாலுற்ற தூவொளி
நீதியி னல்லிருள் நீக்கிய வாறே. 12

2693 உண்டில்லை யென்னும் உலகத் தியல்வது
பண்டில்லை யென்னும் [1]பரங்கதி யுண்டுகொல்
கண்டில்லை [2]மானுடர் கண்ட கருத்துறில்
விண்டில்லை யுள்ளே விளக்கொளி யாமே. 13

2694 சுடருற ஓங்கிய ஒள்ளொளி யாங்கே
படருறு காட்சிப் பகலவன் ஈசன்
அடருறு மாயையி [3]னாரிருள் வீசில்
உடலுறு ஞானத் துறவிய னாமே. 14

2695 ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்
அளிபவ ளச்செம்பொன் ஆதிப் பிரானுங்
களிபவ ளத்தினன் காரிருள் நீங்கி
ஒளிபவ ளத்தென்னோ டீசன்நின் றானே. 15

2696 ஈசன்நின் றானிமை யோர்கள்நின் றார்நின்ற
தேசமொன் றின்றித் திகைத்திழைக் கின்றனர்
பாசமொன் றாகப் பழவினை பற்றற
வாசமொன் றாமலர் போன்றது தானே. 16

2697 தானே யிருக்கும் அவற்றில் தலைவனுந்
தானே யிருக்கும் அவனென நண்ணிடும்
வானா யிருக்குமிம் மாயிரு ஞாலத்துப்
பானா யிருக்கப் பரவலு மாமே. 17

பா-ம்— [1]பரகதி. [2]மானிடர். [3]னுயிருள்.

## 6. தூல பஞ்சாக்கரம்

2698 ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே. 1

2699 அகார முதலாக ஐம்பத்தொன் றாகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதன் நாமமே. 2

2700 அகராதி யீரெண் கலந்த பரையும்
உகராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகராதி தான்சிவ வேதமே கோண
நகராதி தான்மூல மந்திர நண்ணுமே. 3

2701 வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆய இலிங்க மவற்றின்மே லேயவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்லல்
ஆயதீ ருமைந்தோ டாமெழுத் தஞ்சுமே. 4

2702 கிரணங்கள் ஏழுங் கிளர்ந்தெரி பொங்கிக்
கரணங்கள் விட்டுயிர் தானெழும் போது
மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போது
மரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே. 5

2703 ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மந்திர மாரும் அறிகிலர்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுற வோதி வழுத்தலு மாமே. 6

2704 தெள்ளமு தூறச் சிவாய நமவென்
றுள்ளமு தூற வொருகால் உரைத்திடும்

வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. 7

2705 குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. 8

2706 வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதுங்
குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டுங்
குறிப்பறி வான்றவங் கோனுரு வாமே. 9

2707 நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று
துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரணென்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
அஞ்சில் இறைவன் அருள்பெற லாமே. 10

2708 பிரான்வைத்த ஐந்தின் பெருமை யுணரா
திராமாற் றஞ் செய்வார்கொல் ஏழை மனிதர்
பராமுற் றுங் கீழொடு பல்வகை யாலும்
அராமுற் றுஞ் சூழ்ந்த அகலிடந் தானே. 11

---

## 6. சூக்கும பஞ்சாக்கரம்

2709 எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னுங்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே. 1

2710 சிவன் சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்

சிவன் சத்தி தன்னுடன் சீவனுர் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுககி லாவே. 2

2711 சிவனரு ளாய சிவன் திரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ ஞமே. 3

2712 ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்
வாதி தனைவிட் டிறையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ் சிவாய மலமற்ற உண்மையே. 4

2713 நமாதி நனுதி திரோதாயி யாகித்
தமாதிய தாய்நிற்கத் தானந்தத் துற்றுச்
சமாதித் துரியந் தமதாக மாகவே
நமாதி சமாதி [1]சிவவாதல் எண்ணவே. 5

2714 அருடரு [2]மாயமும் அத்தனுந் தம்மில்
ஒருவனை [3]யீன்றவள் உள்ளுறு மாயை
திரிமல நீங்கிச் சிவாயவென் றோதும்
அருவினை தீர்ப்பதும் [4]அவ்வெழுத் தாமே. 6

2715 சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகுந் திருவரு ளாமே. 7

2716 சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே. 8

---

பா-ம்— [1]சிவமாதல். [2]மாயனும். [3]யீன்றவர். [4]அஞ்செழுத்.

2717 நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவவென்னு நாமத்தைச் சிந்தையு ளேற்றப்
பவமது தீரும் பரிசும தற்றால்
[1]அவமதி தீரும் அறும்பிறப் பன்றே. 9

## 7. அதிசூக்கும பஞ்சாக்கரம்

2718 சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே. 1

2719 செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புற
மஞ்சண வும்முறை யேறி வழிக்கொண்டு
துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை
நெஞ்சென நீங்கா நிலைபெற லாகுமே. 2

2720 அங்கமும் ஆகம வேதம தோதினும்
எங்கள் பிரானெழுத் தொன்றில் இருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்
அங்கரை சேர்ந்த அருங்கல மாமே. [தால்

2721 பழுத்தன ஐந்தும் [2]பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் [3]வினையறி வாரில்லை
எழுத்தறி வோமென் றுரைப்பர்கள் ஏதர்
எழுத்தை யழுத்தும் எழுத்தறி யாரே. 4

## 8. திருக்கூத்துத் தரிசனம்

2722 எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்

பா-ம்— [1]அவமது. [2]பாழுறை. [3]விளைவறி.

எங்குஞ் சிவமா யிருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே. 1

2723 சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பத மாம்அந்தச் சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரே. 2

---

## சிவானந்தக் கூத்து

2724 தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்
தேனுந்தும் ஆனந்த மாநடங் கண்டீர்
ஞானங் கடந்து நடஞ்செய்யும் நம்பிக்கங்
கானந்தக் கூத்தாட ஆடரங் கானதே. 3

2725 ஆனந்தம் ஆடரங் கானந்தம் பாடல்கள்
ஆனந்தம் [1]பல்லியம் ஆனந்த வாச்சியம்
ஆனந்த மாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே. 4

2726 ஒளியாம் பரமும் உளதாம் பரமும்
அளியார் சிவகாமி யாகுஞ் சமயக்
களியார் பரமுங் [2]கருதுறை யந்தத்
தெளிவாஞ் சிவானந்த [3]நட்டத்தின் சித்தியே. 5

2727 ஆன நடமைந் தகள சகளத்தர்
ஆன நடமாடி ஐங்கரு மத்தாக
ஆன தொழிலரு ளாலைந் தொழிற்செய்தே
தேன்மொழி பாகன் திருநட மாடுமே. 6

2728 பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட
மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட

---

பா-ம்— [1]வல்லியம். [2]கருத்துறை. [3]நடனத்தின்.

தா னாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத்
தேகாந்த மாம்பிர மாண்டத்த என்பவே. 7

2729 வேதங்க ளாட மிகுஆ கமமாடக்
கீதங்க ளாடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்க ளாடப் புவன முழுதாட
நாதங்கொண் டாடினான் ஞானானந் தக்கூத்தே. 8

2730 பூதங்கள் ஐந்திற் பொறியிற் புலனைந்தில்
வேதங்கள் ஐந்தின் மிகுமா கமந்தன்னில்
ஓதுங் கலைகாலம் ஊழி யுடன் அண்டப்
போதங்கள் ஐந்திற் புணர்ந்தாடுஞ் சித்தனே. 9

2731 [1]தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே. 10

---

### சுந்தரக் கூத்து

2732 அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பால்
உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற்
கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே. 11

2733 கொடுகொட்டி [2]பாண்டங் கோடுசங் கார
நடமெட்டோ டைந்தாறு நாடியுள் நாடுந்
திடமுற் றெழுந்தேவ தாருவாந் தில்லை
வடமுற்ற மாவன மன்னவன் தானே. 12

2734 பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி ஈசன்

---

பா-ம்— [1]தேவர சுரர். [2]பாண்டரங்.

பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரன்நட மாடுமே. 13

2785 அங்குச மென்ன எழுமார்க்கம் போதத்தில்
தங்கிய தொந்தி எனுந்தாள ஒத்தினில்
சங்கரன் மூலநா டிக்குள் தரித்தாடல்
பொங்கிய காலம் புகும்போகல் இல்லையே. 14

2786 ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக்
கானத்தி யாடிக் கருத்தில் தரித்தாடி
மூனச் சுழுனையுள் ஆடி முடிவில்லா
ஞானத்துள் ஆடி முடித்தான்என் நாதனே. 15

2787 சத்திகள் ஐந்துஞ் சிவபேதந் தானைந்தும்
முத்திகள் எட்டும் முதலாம் பதமெட்டுஞ்
சித்திகள் எட்டுஞ் சிவபதந் தானெட்டுஞ்
சுத்திகள் [1]எட்டீசன் தொல்நட மாடுமே. 16

2788 மேகங்கள் ஏழும் விரிகடல் தீவேழுந்
தேகங்கள் ஏழுஞ் சிவபாற் கரன்ஏழுந்
தாகங்கள் ஏழுஞ் சாந்திகள் ஏழும்
ஆகின்ற நந்தி யடிக்கீழ் அடங்குமே. 17

---

## பொற்பதிக் கூத்து

2789 தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்
அற்புத மானதோர் அஞ்சு முகத்திலும்
ஒப்பில்பே ரின்பத் துபய உபயத்துள்
தற்பரன் நின்று தனிநடஞ் செய்யுமே. 18

2740 அடியார் அரனடி யானந்தங் கண்டோர்
அடியா ரானவ ரத்தரு ளுற்றோர்

பா-ம்— [1] எட்டாஞ் சொல்.

[1]அடியார் பவரே யடியவ ராமால்
அடியார்பொன் னம்பலத் தாடல்கண் டாரே. 19

2741 அடங்காத என்னை அடக்கி அடிவைத்
திடங்காண் பரானந்தத் தேஎன்னை இட்டு
நடந்தான் செயும்நந்தி நன்ஞானக் கூத்தன்
படந்தான் செய்துள்ளுட் படிந்திருந் தானே. 20

2742 உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்
செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடிஎன் அன்பில்வைத் தேனே. 21

2743 மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
ஆணிப்பொற் கூத்தனை யாருரைப் பாரே. 22

2744 விம்மும் வெருவும் விழும்எழும் மெய்சோருந்
தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடுஞ்
செம்மை சிறந்த திருஅம் பலக்கூத்துள்
அம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே.

2745 தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்
வாட்டறுங் கால்புந்தி யாகி வரும்புலன்
ஓட்டறு மாசை அறுமுளத் தானந்த
நாட்ட முறுக்குறு நாடகங் [2]காணவே. 24

2746 காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்
கூளியோ டாடிக் குவலயத் தேயாடி
நீடிய நீர்தீகால் நீள்வா னிடையாடி
நாளுற அம்பலத் தேயாடும் நாதனே. 25

---

பா-ம்— [1]அடியா ரவரே. [2]காணுமே.

2747 மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலயத்தூ
டேறுஞ் சுழுனை இவைசிவ பூமியே. 26

2748 பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடைபிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதியோன் பயில்திரு அம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையி னீறே. 27

---

## பொற்றில்லைக் கூத்து

2749 அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சத்தி திருஅம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. 28

2750 குரானந்த ரேகையாய்க் கூர்ந்த [1]குணமாஞ்
சிரானந்தம் பூரித்துத் தென்திசை சேர்ந்து
புரானந்த போகனுய்ப் பூவையுந் தானும்
நிரானந்த மாகி நிருத்தஞ்செய் தானே. 29

2751 ஆதி பரன்ஆட அங்கைக் கனலாட
ஓதுஞ் சடையாட உன்மத்த முற்றுட்ப்
பாதி மதியாடப் பாரண்ட மீதாட
நாதமோ டாடினுன் நாதாந்த நட்டமே. 30

2752 கும்பிட அம்பலத் தாடிய கோனடம்
அம்பரன் ஆடும் அகிலாண்ட நட்டமாஞ்
செம்பொரு ளாகுஞ் சிவலோகஞ் சேர்ந்துற்றால்
உம்பர மோனஞா னந்தத்தில் உண்மையே. 31

---

பா-ம்— [1] குணமாய்ச்.

2753 மேதினி மூவேழ் மிகுமண்டம் ஓரேழு
சாதக மாகுஞ் சமயங்கள் நூற்றெட்டு
நாதமோ டந்த நடானந்த நாற்பதப்
பாதியோ டாடிப் பரனிரு பாதமே. 82

2754 இடைபிங் கலையிம வானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை
கடவுந் தில்லைவனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே. 83

2755 ஈறான கன்னி குமரியே காவிரி
வேறான நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள்
பேறான வேதா கமமே பிறத்தலான்
மாறாத தென்திசை வையகஞ் சுத்தமே. 84

2756 நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி
வேதத்தி லாடித் தழலந்த மீதாடி
போதத்தி லாடிப் புவன முழுதாடுந்
தீதற்ற தேவாதி தேவர் பிரானே. 85

2757 தேவரோ டாடித் திருஅம்ப லத்தாடி
மூவரோ டாடி முனிசனத் தோடாடிப்
பாவினுள் ஆடிப் பராசத் தியிலாடிக்
கோவினுள் ஆடிடுங் கூத்தப் பிரானே. 86

2758 ஆறு முகத்தில் அதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபரன் நானென்றுந்
தேறினர் தெற்குத் திருஅம்ப லத்துளே
வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானே. 87

2759 அம்பலம் ஆடரங் காக அதன்மீதே
எம்பரன் ஆடும் இருதாளி னீரொளி
உம்பர மாம்ஐந்து நாதத்து ரேகையுள்
தம்பத மாய்நின்று தான்வந் தருளுமே. 88

2760 ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமுங்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. 39

2761 இருதயந் தன்னில் எழுந்த பிராணன்
கரசர ணாதி கலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கணுங் கூத்துகந் தானே. 40

---

### அற்புதக் கூத்து

2762 குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்
[1]அருவுரு வாவதும் அந்த அருவே
திரிபுரை யாகித் திகழ்தரு வாளும்
உருவரு வாகும் உமையவள் தானே. 41

2763 திருவழி யாவது சிற்றம் பலத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவே
உருவரு வாவது முற்றுணர்ந் தோர்க்கு
அருள்வழி யாவதும் அவ்வழி தானே. 42

2764 நீருஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
[2]ஓடும் உயிரெழுந் தோங்கி உதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்
தாடும் இடந்திரு அம்பலந் தானே. 43

2765 வளிமேக மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பில் திகழ்தரு வாறுபோல்
களியொளி யாறுங் கலந்துடன் வேறாய்
ஒளியுரு வாகி ஒளித்துநின் றானே. 44

---

பா-ம் — [1]அருவுருவாவது [2]ஓடி யுயிரெழுந்.

2766 தீமுதல் ஐந்துந் திசையெட்டுங் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்
மாயைமா மாயை கடந்துநின் றார்காண
நாயகன் நின்று நடஞ்[1]செய்யு மாறே. 45

2767 கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஆனந்தங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஞானத்துக்
கூத்தனுங் கூத்தியுங் கூத்ததின் மேலே. 46

2768 இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே. 47

2769 சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்
டொத்த ஆனந்தம் ஒருநட மாமே. 48

2770 நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே. 49

2771 அண்டங்கள் தத்துவ மாகிச் சதாசிவந்
தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந்
தெண்டினில் ஏழுஞ் சிவாசன மாகவே
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. 50

2772 மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்
நன்றிது தானிதழ் நாலொடு நூறவை

பா-ம்— [1]செய்யும் வாறே.

சென்றது தாமொரு பத்திரு நூறுள
ரின்றது தானெடு மண்டல மாமே. 51

2773 அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி
தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி
எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி
அண்ட நடஞ் செயும் ஆலயந் தானே. 52

2774 ஆகாச மாமுட லங்கார் முயலகன்
ஏகாச மாந்திசை யெட்டுந் திருக்கைகண்
மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக
மாகாய மன்றுள் நடஞ்செய்கின் றானே. 53

2775 **அம்பல மாவ தகில சராசரம்**
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தி மண்டலம்
**அம்பல மாவது அஞ்செழுத் தாமே.** 54

2776 கூடிய திண்முழ வங்குழ லோமென்று
ஆடிய மானுடர் ஆதிப் பிரானென்ன
நாடிய நற்கண மாரம்பல் பூதங்கள்
பாடிய வாறொரு பாண்டரங் காமே. 55

2777 அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்
தெண்டிரை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்
புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக்
கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே. 56

2778 **புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்**
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
[1]அளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்குளா னந்தத் தமுதூறும் உள்ளத்தே. 57

பா-ம்— [1] துளிக்கும்.

2779 திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது
உண்டார்க்[1]குணவுண்டால்உன்மத்தஞ்சித்திக்கும்
கொண்டாடு மன்றுட் குனிக்குந் திருக்கூத்துக்
கண்டார்வருங்குணங்கேட்டார்க்கும்ஒக்குமே. 58

2780 அங்கி தமருகம் அக்குமா லைபாசம்
அங்குசஞ் சூலங் கபால முடன்ஞானந்
தங்கு பயந்தரு நீல மும்முடன்
மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே. 59

2781 ஆடல் பதினெ ருறுப்பும் அடைவாகக்
கூடிய பாதஞ் சிலம்புகைக் கொள்துடி
நீடிய நாதம் பராற்பர நேயத்தே
ஆடிய நந்தி புறமகத் தானே. 60

2782 ஒன்பதும் ஆட ஒருபதி னுற்ட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனுட
இன்புறும் ஏழினும் ஏழைம்பத் தாறுட
அன்பது மாடினன் ஆனந்தக் கூத்தே. 61

2783 ஏழினில் ஏழாய் இகந்தெழுத் தேழதாய்
ஏழினில் ஒன்றுய் இழிந்தமைந் தொன்றுகி
ஏழினிற் சன்மார்க்கம் எங்கள் பரஞ்சோதி
ஏழிசை நாடகத் தேஇசைந் தானே. 62

2784 மூன்றினில் அஞ்சாகி முந்நூற் றறுபதாய்
மூன்றினில் ஆருய் முதற்பன்னீர் மூலமாய்
மூன்றினில் அக்க முடிவாகி முந்தியே
மூன்றிலும் ஆடினன் [2]மோகாந்தக் கூத்தே. 63

2785 தாமுடி வானவர் தம்முடி மேலுறை
மாமணி ஈசன் மலரடித் தாளிணை

---

பா-ம்— [1]குணர்வுண்டாம். [2]மோஹனந்தக் கூத்தனே.

வாமணி யன்புடை யார்மனத் துள்ளெழுங்
காமணி ஞாலங் கடந்துநின் றானே. 64

2786 புரிந்தவன் ஆடிற் புவனங்க ளாடுந்
தெரிந்தவன் ஆடும் அளவெங்கள் சிந்தை
புரிந்தவ னாடிற்பல் பூதங்கள் ஆடும்
எரிந்தவன் ஆடல்கண் டின்புற்ற வாறே. 65

2787 ஆதி நடஞ்செய்தான் என்பர்கள் ஆதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே. 66

2788 ஒன்பதோ டொன்பதாம் உற்ற இருபதத்
தன்புறு கோணம் அசிபதத் தாடிடத்
துன்புறு சத்தியுள் தோன்றிநின் றாடவே
அன்புறு எந்தைநின் றாடலுற் றானே. 67

2789 தத்துவம் ஆடச் சதாசிவந் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. 68

2790 இருவருங் காண எழில்அம் பலத்தே
உருவோ டருவோ டுருபர ரூபமாய்த்
திருவருட் சத்திக்குள் சித்த னந்தன்
அருளுரு வாகநின் றாடலுற் றானே. 69

2791 சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்
அவமாட ஆடாத அம்பரம் ஆட
நவமான தத்துவ நாதாந்த மாடச்
சிவமாடும் வேதாந்தச் சித்தாந்தத் துள்ளே. 70

2792 நாதத்தின் அந்தமும் [1]நாற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட [2]மாமே. 71

2793 சிவமாதி ஐவர்திண் டாட்டமுந் தீரத்
தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்
தவமாம் பரனெங்குந் தானாக ஆடுந்
தவமாஞ் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே. 72

2794 கூடிநின் றொருகாலத்துத் தேவர்கள்
வீடநின் றுன்விகிர் தாவென்னு நாமத்தைத்
தேடநின் றுன்திக ழுஞ்சுடர் மூன்றொளி
ஆடநின் றுன்என்னை ஆட்கொண்ட வாறே. 73

2795 நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்
நேதத் துவமும் அவற்றொடு நேதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் றானே. 74

2796 ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலர்
ஆனந்த [3]மாநட மாரும் அறிகிலர்
ஆனந்த [3]மாநட மாரும் அறிந்தபின்
தானந்தம் அற்றிடம் ஆனந்த மாமே. 75

2797 திருந்துநற் சீயேன் றுதறிய கையும்
அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்
பொருந்தில் இமைப்பிலி யவ்வென்ற பொற்கையுந்
திருந்தத்தீ யாகுந் திருநிலை மவ்வே. 76

2798 [4]மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்

---

பா-ம்— [1]நற்போத. [2]மாடுமே. [3]மாவதை ஆரும். [4]மருவு துடியும் மன்னிய வீச்சும் மருவி யமைப்பும்.

கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே. 77

2799 அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன்அங்கி தன்னில் அறையிற்சங் காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே. 78

2800 தீத்திரட் சோதி திகழொளி யுள்ளொளி
கூத்தனைக் கண்டஅக் கோமளக் கண்ணினள்
மூர்த்திகள் மூவர் முதல்வ னிடைசெல்லப்
பார்த்தனள் வேதங்கள் பாடினள் தானே. 79

2801 நந்தியை எந்தையை ஞானத் தலைவனை
மந்திர மொன்றுள் மருவி யதுகடந்
தந்தர வானத்தின் அப்புறத் தப்பர
சுந்தரக் கூத்தனை என்சொல்லு மாறே. 80

2802 சீய குருநந்தி திருஅம்ப லத்திலே
ஆயுறு மேனியை யாரும் அறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை
ஆயுறு மேனி அணைபுக லாமே. 81

2803 தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்
தானும் பரற்கும் உயிர்க்குந் தகுமிச்சை
ஞானாதி பேத நடத்து நடித்தருள்
ஆனால் அரனடி நேயத்த தாமே. 82

---

## 9. ஆகாசப்பேறு

2804 உள்ளது ளோமென ஈசன் ஒருவனை
உள்ளத்து ளேயங்கி யாய வொருவனை

உள்ளத்து ளேநீதி யாய வொருவனே
உள்ளத்து ளேயுடல் ஆகாய மாமே. 1

2805 பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே. 2

2806 அண்ட வொளியும் அகண்ட வொளியுடன்
பிண்ட வொளியாற் பிதற்றும் பெருமையை
உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே. 3

2807 பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி
அயனொடு மாலறி யாவகை நின்றிட்
டுயர்நெறி யாயொளி யொன்றது வாமே. 4

2808 அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும்
பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும்
அறியா தடங்கிடில் அத்தன் அடிக்குட்
பிறியா திருக்கிற் பெருங்கால மாமே. 5

2809 ஆகாச வண்ணன் அமரர் [1]குலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச [2]வண்ணம் அமர்ந்துநின் றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ணனு மாமே. 6

2810 உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க
உயிர்க்கின்ற உள்ளொளி சேர்கின்ற போது
குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி
வெயிற்கொண்டென் உள்ளம் வெளியது வாமே 7

பா-ம்— [1]தலைக் கொழுந். [2]வண்ணன்.

2811 நணுகி லகல்கில னுதன் உலகத்
தணுகில் அகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியின் அமுதம் பருகலு மாமே. 8

2812 புறத்துளா காசம் புவனம் உலகம்
அகத்துளா காசமெம் மாதி யறிவு
சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துளா காசந் தானஞ் சமாதியே. 9

---

## 10. ஞானோதயம்

2813 மனசந் தியிற்கண்ட மன்னன வாகுங்
கனவுற ஆனந்தங் காண்டல் அதனை
வினவுற ஆனந்த மீதொழி வென்ப
இனமுற்று னந்தியா னந்த மிரண்டே. 1

2814 கரியட்ட கையன் கபாலங்கை ஏந்தி
எரியும் இளம்பிறை சூடும்எம் மானை
அரியன் பெரியனென் றுட்பட்ட தல்லால்
கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே.

2815 மிக்கா ரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்
தக்கார் உரைத்த தவநெறி யேசென்று
புக்கா லருளும் பொன்னுரை ஞானத்தை
நக்கார் கழல்வழி நாடுமின் நீரே. 3

2816 விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே. 4

2817 தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்
தத்துவன் அங்கே தலைப்படுந் தானே. 5

2818 விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே
அசும்பினின் றூறிய தாரமு தாகும்
பசும்பொன் திகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தங் கூடிநின் றானே. 6

2819 முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்
கொத்தும் பசும்பொன்னின் தூவொளிமாணிக்கம்
ஒத்துயர் அண்டத் துள்ளமர் சோதியை
எத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே. 7

2820 நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்
நானென்று நானும் நினைப்பொழிந் தேனே. 8

2821 ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தின் நன்னெறி நானென் றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோக நன்னிலை யேநிற்றல்
ஞானத்தின் நன்மோன நாதாந்த வேதமே. 9

2822 உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே. 10

2823 காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்குங்
காணவல் லார்க்குக் கடலின் அமுதொக்கும்

பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி
ஆணவல் லார்க்கே அவன்துணை யாமே. 11

2824 ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மானடி
ஆய்நின்ற தேவர் அகம்படி யாமே. 12

## 11. சத்திய ஞானனந்தம்*

2825 எப்பாழும் பாழு மியாவுமாய் அன்றாகி
முப்பாழுங் கீழுள முப்பாழும் முன்னியே
இப்பாழும் இன்னவா றென்பதி லாவின்பத்
தற்பர ஞானனந்தந் தானது வாகுமே. 1

2826 தொம்பதந் தற்பதஞ் சொன்ன துரியம்போல்
நம்பிய மூன்றாந் துரியத்து நன்றாகும்
அம்புவி யுன்று அதிசூக்க மப்பாலைச்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. 2

2827 மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை
அன்னதோ டொப்ப மிடலொன்று மாறது
இன்னிய வுற்பலம் ஒண்சீர் நிறமணம்
பன்னிய சோபை பகரா று மானதே. 3

2828 [1]சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கால்
உய்த்த அனந்தஞ் சிவமுயர் ஆனந்தம்
வைத்த சொருபத்த சத்தி வருகுரு
உய்த்த வுடலிவை யுற்பலம் போலுமே. 4

2829 உருவுற் பலநிறம் ஒண்மணஞ் சோபை
தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்

பா—ம்— [1]சத்தியுஞ் சிவம் சிவஞானம் சாற்றுங்கால். *சத்திய ஞானந்தம்.

மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்
சொருபத்தன் சத்தியாதி தோன்றநின் றானே. 5

2830 நினையும் அளவின் நெகிழ வணங்கிப்
புனையில் அவனைப் பொதியலு மாகும்
எனையுமெங் கோன்நந்தி தன்னருள் கூட்டி
நினையும் அளவில் நினைப்பித் தனனே. 6

2831 **பாலொடு தேனும் பழத்துள் இரதமும்**
**வாலிய பேரமு தாகும் மதுரமும்**
**போலுந் துரியம்** பொடிபட வுள்புகச்
சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமே. 7

2832 அமரத் துவங்கடந் தண்டங் கடந்து
தமரத்து நின்ற தனிமையன் ஈசன்
பவளத்து முத்தும் பனிமொழி மாதர்
துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே. 8

2833 மத்திமம் ஆறாறு மாற்றி மலநீக்கிச்
சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்
பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்
சத்தியஞா னானந்தஞ் சார்ந்தனன் ஞானியே. 9

2834 சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந் தத்தே
துவமார் துரியஞ் சொருபம தாமே. 10

---

## 12. சொருப உதயம்

2835 பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற எங்கணுஞ் சேர்ந்தொழி வற்று

நிரவு சொருபத்துள் நீடுஞ் சொரூபம்
அரிய துரியத் தணைந்துநின் றானே. 1

2836 குலைக்கின்ற நீரிற் குவலய நீரும்
அலைக்கின்ற காற்றும் அனலொடா காச
நிலத்திடை வானிடை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. 2

2837 அங்குநின் றானயன் மால்முதல் தேவர்கள்
எங்குநின் றாரும் இறைவனென் றேத்துவர்
தங்கிநின் றான்தனி நாயகன் எம்மிறை
பொங்கிநின் றான்புவ னாபதி தானே. 3

2838 சமையச் சுவடுந் தனையறி யாமற்
கமையற்ற காமாதி காரணம் எட்டுந்
திமிரச் செயலுந் தெளிவுடன் நின்றோர்
அமரர்க் கதிபதி யாகிநிற் பாரே. 4

2839 மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு
வாயது வேறா மதுபோல் அணுப்பரன்
சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற
ஏயும் நெறியென் றிறைநூல் இயம்புமே. 5

2840 உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
அருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. 6

2841 உருவ நினைப்பவர்க் குள்ளுறுஞ் சோதி
உருவ நினைப்பவர் ஊழியுங் காண்பர்
உருவ நினைப்பவர் உம்பரு மாவர்
உருவ நினைப்பவர் உலகத்தில் யாரே. 7

2842 பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றுப்
பரஞ்சோதி என்னுட் படிந்ததற் பின்னைப்
பரஞ்சோதி யுண்ணுன் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே. 8

2843 சொருபம் உருவங் குணந்தொல் விழுங்கி
அறியன வுற்பல மாமாறு போல
மருவிய சத்தியாதி நான்கு மதித்த
சொருபக் குரவன் சுகோதயத் தானே. 9

2844 உரையற்ற ஆனந்த மோன சொருபத்தன்
கரையற்ற சத்தியாதி காணில் அகார
மருவுற் றுகார மகாரம தாக
உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே. 10

2845 தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
முலைநின்ற மாதறி மூர்த்தியை யாறும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே. 11

2846 ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறு மீதென்றே
ஏமாப்ப தில்லை இனியோ [1]ரிடமில்லை
நாமா முதல்வனும் [2]நாமெனை லாமே. 12

---

## 13. ஊழ்

2847 செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே. 1

---

பா-ம்— [1]ரிடரில்லை. [2]நாமென.

2848 தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர்
[மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழி யேசென்று
நான்முன்னஞ் செய்ததே நன்னில மானதே. 2

2849 ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவே. 3

2850 வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்
நானொன்றி நாதனை நாடுவேன் நானே. 4

2851 ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நானுழு வேனே. 5

2852 கூடு கெடின்மற் றோர் கூடுசெய் வானுளன்
நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை
வீடு கெடின்மற்றோர் வீடுபுக் கால்ஒக்கும் 6
பாடது நந்தி பரிசறி வார்க்கே.

## 14. சிவதரிசனம்*

2853 சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. 1

பா-ம்— *சிவரூப தரிசனம்.

2854 வாக்கு மனமு [1]மறைந்த மறைப்பொருள்
நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது
போக்கொன்றும் இல்லை வரவில்லை கேடில்லை
ஆக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. 2

2855 பரனாய்ப் பராபர னாகியப் பாற்சென்
றுரனாய் வழக்கற வொண்சுடர் தானாய்த்
தரனாய்த் தனதென வாறறி வொண்ணா
அரனா யுலகில் அருள்புரிந் தானே. 3

## 15. சிவசொரூப தரிசனம்

2856 ஓதும் மயிர்க்கால் தொறும்அமு தூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்த
மாதி சொருபங்கள் மூன்றகன் றப்பாலை
[2]வேதம் ஓதுஞ் சொரூபிதன் மேன்மையே. 1

2857 உணர்வும் அவனே உயிரும் அவனே
புணரும் அவனே புலவி யவனே
இணரும் அவன்தன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந் துன்னிநின் றானே.* 2

2858 துன்னிநின் றான்தன்னை யுன்னிமுன் னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமே. 3

2859 மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதித் தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிவனான் என்விழித் தானே. 4

பா-ம்— [1]மிறந்த. [2]வேதகம். *இது 3035-ம் பாடலாகவும் வந்துள்ளது.

2860 சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
[1]உய்த்த துரியத் துறுபே ரொளியே. 5

2861 பரனல்ல நீடும் பராபர னல்ல
உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல
தரனல்ல தானவை யாயல்ல வாகும்
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே. 6

2862 முத்தியுஞ் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
[2]சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே. 7

2863 துரிய அதீதஞ் [3]சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்
விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
உருவுந் திரியும் உரைப்பதெவ் வாறே, 8

## 16, முத்தி பேதம், கரும நிருவாணம்

2864 ஓதிய முத்தி யடைவே உயிர்பர
பேதமி லச்சிவம் எய்துந் துரியமோ
டாதி சொரூபஞ் சொரூபத்த தாகவே
ஏதமி லாநிரு வாணம் பிறந்ததே. 1

2865 பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றற் றவர்சுற்றி நின்றஎன் சோதியைப்
பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. 2

பா-ம்— [1]உய்த்து. [2]சுத்தி. [3]சொல்லுறும்.

## 17. சூனிய சம்பாஷணை*

2866 காயம் [1]பலகை கவறைந்து கண்மூன்று
ஆயம்பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி [2]யேனே. 1

2867 தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை
மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு
ஊறிக் [3]கிடந்ததென் உள்ளன்பு தானே. 2

2868 ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள
ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை
ஏறலுற் றேன்கடல் ஏழுங்கண் டேனே. 3

2869 [4]வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது
[5]புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
[6]தொழுதுகொண்டோடினார்தோட்டக்குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே. 4

2870 ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்
செய்யுண்டு செய்யின் தெளிவறி வாரில்லை
மையணி கண்டன் மனம்பெறின் அங்கிலம்
பொய்யொன்று மின்றிப் புகளெளி தாமே. 5

2871 பள்ளச்செய்யொன்றுண்டுபாடச்செய்இரண்டுள
கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது
உள்ளச்செய் யங்கே யுழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் [7]யாகி விளைந்தது தானே. 6

---

பா-ம்— [1]*பலவகை.* [2]*யாரே.* [3]*கிடக்குமென்.* [4]*வழுதிலை.* [5]*புழுதியைக் கிண்டிப்.* [6]*முழுசம் பழுத்தது, வாழை இளங்கனி, தொழுது கொண்டறிந்தோர் தொட்டுடை பாரே.* [7]*யங்ஙே.*
**மறை பொருட் கூற்று.*

2872 மூவணை யேரு முழுவது முக்காணி
தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடு
நாவணை கோலி நடுவிற் செறுவுழார்
காலணை கோலிக் [1]களருழு வாரே. 7

2873 ஏற்றம் இரண்டுள ஏழு [2]துரவுள
மூத்தான் இறைக்க இளையான் [3]படுத்தநீர்
பாத்தியிற் பாயாது [4]பாழ்ப்பாய்ந்து போயிடிற்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே. 8

2874 பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள
[5]குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
[6]பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. 9

2875 ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள
ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்
காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. 10

2876 தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்
மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்
தட்டான் அதனைத் தகைந்துகொண் டானே. 11

2877 அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனி
திரிக்கின்ற வொட்டஞ் சிக்கெனக் கட்டி
வரிக்கின்ற [7]நல்லான் கறவையைப் பூட்டில்
விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே. 12

பா-ம்— [1]களருமுள. [2]கிணறுள. [3]மடைமாறப். [4]பாழெழுங்கும் பாய்ந்தது. [5]பட்டி. [6]அட்டி. [7]நல்ல கறவையை யூட்டி.

2878 [1]இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்
[2]கிடாக்கொண்டு பூட்டிக் கிளறி முளையை
[3]மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
[4]கிடாக்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே.

2879 விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்துகொள் வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. 14

2880 களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லை
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரிள வஞ்சியின் [5]மாய்தலு மாமே. 15

2881 கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்
தாப்பிடு பாசத்தை யங்கியுள் வைத்திட்டு
நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை
ஏற்பட இல்லத் தினிதிருந் தானே. 16

2882 மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே. 17

2883 பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுஐந்தும் [6]பாலாச் சொரியுமே. 18

பா-ம்— [1]இடர்க். [2]கிடர்க். [3]மிடர்க். [4]அடர்க். [5]வாய்த்தலு. [6]பாலாய்ச்.

2884 ஆமாக்கள் ஐந்தும் அரியேறு மூப்பதுந்
தேமா இரண்டொடு திப்பிலி யொன்பதுந்
தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன
மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரே. 19

2885 எழுதாத புத்தகத் [1]தேட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் [2]மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே. 20

2886 போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்
கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி
ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்
வேகின்ற கூரை விருத்திபெற் றாரே. 21

2887 மூங்கின் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு
வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்
பாம்புண்டு பாம்பைத் துரத்தித்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. 22

2888 பத்துப் [3]பரும்புலி யானை பதினைந்து
வித்தகர் ஐவர் [4]விநோதகர் ஈரெண்மர்
[5]அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்
அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரே. 23

2889 இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா வாமே. 24

2890 ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலால்

---

பா-ம்— [1]தெழுத்தின் பயனைத். [2]மருவின் மணத்தைப். [3]பெரும்புலி. [4]விநாயகர். [5]வைத்தகுரவர்.

முத்தக் கயிறுக மூவர்கள் [1]ஊரினுள்
நித்தம் பொருது நிரம்பநின் றாரே. 25

2891 கூகையும் பாம்புங் கிளியொடு பூனையும்
நாகையும் [2]பூழும் நடுவில் [3]உ..றைவன்
நாகையைக் கூகை நணுக லுறுதலுங்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே. 26

2892 குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கின்
நிலைக்கின்ற வெள்ளொளி மூன்று கொணர்ந்தான்
உலைக்குப் புறமெனில் ஓடு மிருக்கும்
புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே. 27

2893 காடுபுக் காரினிக் காணூர் கடுவெளி
கூடுபுக் கானது ஐந்து குதிரையும்
மூடுபுக் கானது ஆறுள ஒட்டகம்
மூடு புகாவிடின் மூவணை யாமே. 28

2894 கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்
காறையும் நாணும் வளையலுங் கண்டவர்
பாறையி [4]லுற்ற பறக்கின்ற சீலைபோல்
ஆறைக் குழியில் அழுந்துகின் றாரே. 29

2895 துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்
வருத்தியுள் நின்ற மலையைத் தவிர்ப்பாள்
ஒருத்தியுள் ளாளவர் ஊரறி யோமே. 30

2896 பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் [5]திருமணப் பட்டார்
பெருந்தவப் பூதம் [6]பெறலுரு வாகும்
இருந்திய பேற்றினில் இன்புறு வாரே. 31

பா-ம்— [1]நாரினும். [2]புள்ளும். [3]உறைந்தன. [4]லெற்றப். [5]சிவமணப் பட்டார். [6]போலுரு.

2897 கூடும் பறவை இரைகொத்தி மற்றத
னூடுபுக் குண்டி யறுக்குறில் என்னெக்குஞ்
சூடெறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயனெளி தாமே. 32

2898 இலையில்லை பூவுண் டினவண் டுங்கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை காய்யும் மலருண்டு சூடுந்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே. 33

2899 [1]அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு
[2]நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. 34

2900 கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங்
காப்பிடு கள்ளர் கலந்துநின் றுருளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரே. 35

2901 கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையுங்
கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. 36

2902 பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்
குடைகொண்ட பாசத்துக் கோலமுண் டானுங்
கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட
பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. 37

2903 கொல்லையில் மேயும் பசுக்களைச் செய்தவன்
எல்லை கடப்பித் திறையடிக் கூட்டியே

---

பா-ம்— [1]அக்கண. [2]நக்கண.

வல்லசெய் தாற்றன் மதித்தபி னல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறியறி யாதே. 38

2904 தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரிற் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாமே. 39

2905 ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன
ஏறும் பெரும்பதி ஏழுங் கடந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. 40

2906 கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்
கட்டனஞ் செய்து கயிற்றால் தொழுமியுள்
ஒட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே. 41

2907 ஏழு வளைகடல் எட்டுக் குலவரை
யாழும் விசும்பினில் அங்கி மழைவளி
தாழு மிருநிலந் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில தாலய மாமே. 42

2908 ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைத்தபின் கூடப் பறவைகண்
மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே. 43

2909 கொட்டுக்குந் தாலி இரண்டே இரண்டுக்குங்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கும்மூன்றுக்கும்
இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே. 44

2910 கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பா ளொருவன்
மறையொன்று கண்ட துருவம்பொன் னாமே. 45

2911 கோரை எழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
**நாரை படுகின்றாற் போலல்ல** நாதனார்
பாரை கிடக்கப் படிகின்ற வாறே. 46

2912 கொல்லைமுக் காதமுங் காடரைக் [1]காதமும்
எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி
எல்லை மயங்கா தியங்கவல் [2]லார்கட்
[3]கொல்லை கடந்துசென் [4]றார்புக லாமே. 47

2913 உழவொன்று வித்து ஒருங்கின காலத்
தெழுமழை பெய்யா திருநிலச் செவ்வி
[5]தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யோனே. 48

2914 பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காதம்
ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ
மதுங்கிய வார்களி யாரமு தூறப்
பொதுங்கிய ஐவரைப் போய்[6]வளைத் தானே. 49

2915 தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்
நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்
**தாலிப் பழம்போல் அளிக்கின்ற** அப்பே. 50

---

பா-ம்— [1]*காதம்.* [2]*லார்க்கு.* [3]*எல்லை.* [4]*றெய்தலுமாமே.*
[5]*தழுவணைச் சென்று தாம் பயவாது.* [6]*விளைத்.*

2916 முக்காத ஆற்றிலே மூன்றுள வாழைகள்
செக்குப் பழுத்த [1]திரிமலங் காய்த்தன
[2]பக்கனுர் மிக்கார் படங்கினுர் கன்னியர்
நக்கு [3]மலருண்டு நடுவுநின் ருரே. 51

2917 அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி
முடியும் நுனியின்கண் முத்தலை மூங்கில்
கொடியும் படையுங் கோட்சரன் ஐயைந்து
மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே. 52

2918 [4]பன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்
தென்றிக் கிடந்த [5]சிறுநரிக் கூட்டத்துக்
குன்ருமை கூடித் தராசின் நிறுத்தபின்
[6]குன்றி [7]நிறையைக் குறைக்கின்ற வாறே. 53

2919 மொட்டித்தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டி
கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம் [னைக்
[8]பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கிறுற்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணுதே. 54

2920 நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்
யாவரும் என்றும் அறியவல் லாரில்லை
கூரு மழைபொழி யாது பொழிபுனல்
தேரினிந் நீர்மை திடரினில் லாதே. 55

2921 கூகை குருந்தம தேறிக் குணம்பயில்
மோகம் உலகுக் குணர்கின்ற காலத்து
நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்
பாகனு மாகின்ற பண்பனு மாமே. 56

பா-ம்— [1]திரிமாங்கா யற்றது. [2]அக்க ணரிகாயி லடங்கினர். [3]மலரடி நடுவில் நின்ருனே. [4]குன்றியும். [5]சிவகரிக். [6]பன்றி [7]யறிவை. [8]பட்டுவிட்.

2922 [1]வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பார்
[2]வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு
வாழை யிடங்கொண்டு [3]வாழ்கின்ற வாறே. 57

2923 நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்
புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையா
தருத்தமு மின்றி யடுவது மாமே. 58

2924 தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா னகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்
களிக்குங் குசவர்க்குங் காவிதி யார்க்கும்
அளிக்கும் பதத்தொன் றுய்ந்துகொள் வார்க்கே.

2925 குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை
படைகண்டு மீண்டது பாதி வழியில்
உடையவன் மந்திரி யுள்ளளூம் ஊரார்
அடையா நெடுங்கடை ஐந்தொடு நான்கே. 60

2926 போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
ஆகிப் படைத்தன ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டொடு நாலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. 61

2927 பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணும்
தூசி மறவன் துணைவழி எய்திடப்
பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. 62

2928 கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு
கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு

---

*பா-ம்— [1]வாழையைச் சூரை வலிந்திடங் கொண்டது. [2]வாழையின் சூரையை. [3]வாழலுமாமே.*

வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே. 63

2929 வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்
தாணுவும் மேவித் தருதலைப் பெய்தது
வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னங்
காணியும் அங்கே கலக்கின்ற வாறே. 64

2930 கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது
வங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரில்லை
திங்கள்புக் கால்இரு ளாவ தறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. 65

2931 போதும் புலர்ந்து பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாத ரிருந்தோர் மண்டலந் தானே. 66

2932 கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே
காமுற்ற கத்தி இடுவர் கடைதொறு
மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டி னுல் ஐந்துண்ண லாமே. 67

2933 தோட்டத்தில் மாம்பழம் [1]தோண்டி விழுந்தக்கால்
நாட்டின் புறத்தில் [2]நரியழைத் தென்செயும்
மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டுக்
காட்டிக் கொடுத்த[3]வர் கைவிட்ட வாறே. 68

2934 புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போக நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே. 69

பா-ம்— [1]தூங்கி. [2]நரிகளே தின்றிடும். [3]பின்.

2935 தோணியொன் றுண்டு துறையில் [1]விடுவது
வாணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்
வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை
ஆணி கலங்கில் அதுவிது வாமே. 70

## 18. மோன சமாதி

2936 நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை
சென்றார்தஞ் சித்த மோன சமாதியாம்
மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு
சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே. 1

2937 காட்டுங் குறியுங் [2]சடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது
ஆட்டின் கழுத்தில் [3]அதர்கிடந் தற்றே. 2

2938 உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தஅக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே. 3

2939 மறப்பது வாய்நின்ற மாயநன் னாடன்
பிறப்பினை நீங்கிய பேரரு ளாளன்
சிறப்புடை [4]யான்திரு மங்கையுந் தானும்
உறக்கமில் போகத் துறங்கிடுந் தானே. 4

2940 துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி
அரிய துரிய மதில்மீது மூன்றாய்
விரிவு குவிவு விழுங்கி யுமிழ்ந்தே
உரையில் அநுபூ திகத்தினுள் ளானே. 5

பா-ம்— [1]விடுவன. [2]கடந்தவர். [3]அதர்கறந் தற்றே. [4]யாள்திரு.

2941 உருவிலி [1]யூனிலி யூனமொன் றில்லி
திருவிலி தீதிலி தேவர்க்குந் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே. 6

2942 கண்டறி [2]வாரில்லை காயத்தின் நந்தியை
எண்டிசை யோருந் இறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த அளவிலா ஆனந்தத்
தொண்டர் முகந்த [3]துறையறி யோமே. 7

2943 தற்பர மல்ல சதாசிவன் தானல்ல
நிட்கள மல்ல சகள நிலையல்ல
அற்புத மாகி யநுபோகக் காமம்போற்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. 8

2944 முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு [4]காண்பதே ஆனந்தம்
மகட்குத் [5]தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச்சொல்லென்றாற்சொல்லுமாறெங்ஙனே. 9

2945 அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்
செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தமை
எப்படி யப்படி என்னுமவ் வாறே. 10

2946 கண்டார்க் கழகிது காஞ்சிரத் தின்பழந்
தின்றார்க் கறியலாம் அப்பழத் தின்சுவை
பெண்டா னிரம்பி மடவிய ளானாற்
கொண்டான் அறிவன் குணம்பல தானே. 11

2947 நந்தி யிருந்தான் நடுவுத் தெருவிலே
சந்தி சமாதிகள் தாமே யொழிந்தன

---

*பா-ம்— [1]ஊனிலி ஒன்று மொன்றிலி. [2]யாரிந்தக் காயத்துள். [3]துறையறிவோமே; துறையறியாரே. [4]பார்ப்பதே. [5]தாயர்.*

உந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப்
புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே. 12

2948 விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து
பதறு படாதே பழமறை பார்த்துக்
கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. 13

2949 வாடா [1]மலர்புனை சேவடி வானவர்
கூடார் அறநெறி நாடொறு மின்புறச்
சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று
நாடார் அமுதுற நாடார் [2]அமுதமே. 14

2950 **அதுக்கென் [3]றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்**
**பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்**
[4]சதுக்கென்று வேறே சமைந்தாரைக் காண
மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே. 15

2951 தானும் அழிந்து தனமும் அழிந்துநீ
டூனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்துபின்
நானும் அழிந்தமை நானறி யேனே. 16

2952 இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள் ளாகி
அருளால் அழிந்திடும் அத்தன் அடிக்கே
உருளாத கன்மன முற்றுகின் [5]றேனே. 17

2953 ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பராபரம்
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் உணர்வினை
ஒன்றிநின் றேபல வூழிகண் டேனே. 18

---

*பா-ம்— [1]மலர்ப்புனை. [2]அமுதே. [3]இருந்தார். [4]அதுக்கென்று. [5]ருனே.*

## 19. வரையுரை மாட்சி

2954 தான்வரை வற்றபி னுரை வரைவது
தானவ னனபி னுரை நினைவது
காமனை வென்றகண் ணுரை யுகப்பது
தூமொழி வாசகஞ் சொல்லுமின் நீரே. 1

2955 உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
[1]புரையற் றிருந்தான் புரிசடை யோனே. 2

2956 மனமாயை மாயைஇம் மாயை மயக்க
மனமாயை தான் [2]மாய மற்றொன்று மில்லை
பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே. 3

## 20. அணைந்தோர் தன்மை

2957 மலமில்லை மாசில்லை மானுபி மானங்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தி ஞானத்தி னாலே
பலமன்னி [3]யன்பிற் பதித்துவைப் போர்க்கே. 1

2958 ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்
அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. 2

2959 ஆலைக் கரும்பும் அமுதும்அக் காரமுஞ்
சோலைத் தண்ணீரும் உடைத்தெங்கள் நாட்டி
[டைப்

பா-ம்— [1]புரையற்று நின்றான். [2]மாயு. [3]யாங்கே மதித் துவைப் பார்க்கே.

பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வாளொரு
கோலப்பெண் ணுட்குக் குறையொன் று
[மில்லையே. 3

2960 ஆராலும் என்னை அமட்டவொண் ணுதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லால்இனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே. 4

2961 பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந்
தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை
**அரிந்தேன் வினையை அயில்மன வாளால்**
முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே. 5

2962 ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது
நன்றுகண் டீர்[1]நல் நமச்சிவா யப்பழந்
தின்றுகண் [2]டேற்கிது தித்தித்த வாறே. 6

2963 சந்திரன் பாம்பொடுஞ் சூடுஞ் சடாதரன்
வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவன்
அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள்
சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. 7

2964 பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்
கண்டங் கிருக்குங் கருத்தறி வாரில்லை
விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடில்
துண்டங் கிருந்ததோர் தூறது வாமே. 8

2965 அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அன்னையும் அத்தனு மாரறி வாரென்னை
அன்னையும் அத்தனு மியானும் உடனிருந்
தன்னையும் அத்தனை யான்புரந் தேனே. 9

---

பா-ம்— [1]இனி. [2]டாற்குத்.

2966 கொண்ட சுழியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தலைவரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்னைத் தலத்துளே
[1]உண்டனர் நானினி உய்ந்தொழிந் தேனே. 10

2967 தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே [2]வடவரை யாதியு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே யுலகில் தலைவனு மாமே. 11

2968 **நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்**
சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினை பண்டே யறுத்தேன்
தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராரே. 12

2969 சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே. 13

2970 [3]நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமலன் இருக்கும்
வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறிலவன் நீளிய னாமே. 14

2971 சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்றான்
அவபெரு மானென்னை யாளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. 15

2972 பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்
துணிந்துநின் றேன்இனி மற்றொன் றும்வேண்டேன்

---

பா-ம்— [1]உண்டென நாமினி. [2]தடவரை: கடல்மலை. [3]நினைப்பு மறப்பு மிலாத விட்டதே.

அணிந்துநின் றேனுடல் ஆதிப் பிரானைத்
தணிந்துநின் றேன்சிவன் தன்மைகண் டேனே. 16

2973 என்னெஞ்சம் ஈசன் இணையடி தாஞ்சேர்ந்து
முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறுந்
தன்னெஞ்சம் இல்லாத் தலைவன் தலைவிதி
பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானே. 17

2974 பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தென்னுங்
கணக்கறுத் தாண்டனன் காணந்தி என்னைப்
பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்
வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே. 18

2975 சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற பாசம் அறுத்திட்
டவனெந்தை யாண்டருள் ஆதிப் பெருமான்
அவன்வந்தென் னுள்ளே யகப்பட்ட வாறே. 19

2976 கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்
அரும்புங் கந்தமு மாகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. 20

2977 உள்ள சரியாதி ஒட்டியே மீட்டென்பால்
வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடிச்
செய்வன எல்லாஞ் சிவமாகக் காண்டலாற்
கைவள மின்றிக் கருக்கடந் தேனே. 21

2978 மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று
தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும்
பூண்டாள் ஒருத்தி புவனசூ டாமணி
மாண்டா ளொருவன்கை வந்தது தானே. 22

2979 ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே. 23

2980 [1]அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் [2]திருத்துவன் தானே. 24

2981 மனம்வி ரிந்து குவிந்தது மாதவ
மனம்வி ரிந்து குவிந்தது [3]வாயு
மனம்வி ரிந்து குவிந்தது மன்னுயிர்
மனம்வி ரிந்துரை மாண்டது முத்தியே. 25

---

## 21. தோத்திரம்

2982 மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமும் நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் னுட்டிடைக் கண்டுகொண் டேனே. 1

2983 மன்னு [4]மலைபோல் மதவா ரணத்தின்மேல்
இன்னிசை பாட இருந்தவ ராரெனில்
முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப்
பன்னினர் என்றே பாடறி வீரே. 2

2984 முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை
எத்தனை வாறேரும் ஏத்தும் இறைவனை
அத்தனைக் காணு தரற்றுகின் றேனையோர்
பித்தன் இவனென்று பேசுகின் றாரே. 3

---

பா—ம்— [1]அன்பும் [2]திருத்தலு மாமே. [3]வாயுவு, மனம்வி. [4]மலையோன்.

2985 புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன்
புகுந்துநின் றானடி யார்தங்கள் நெஞ்சம்
புகுந்துநின் றானையே போற்றுகின் றேனே. 4

2986 பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படு
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே. 5

2987 நாமமோ ராயிரம் ஓதுமின் நாதனை
ஏமமோ ராயிரத் துள்ளே இசைவீர்கள்
ஓமமோ ராயிரம் ஓதவல் லாரவர்
காமமோ ராயிரங் கண்டொழிந் தாரே. 6

2988 போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
போற்றுகின் றேன்எம் பிரானென்று நானே. 7

2989 நானாவிதஞ் செய்து நாடுமின் நந்தியை
ஊனார் கமலத்தி னூடுசென் றப்புறம்
வானோர் உலகம் வழிப்பட மீண்டபின்
தேனார வுண்டு தெவிட்டலு மாமே. 8

2990 வந்துநின் றானடி யார்கட் கரும்பொருள்
இந்திர னாதி இமையவர் வேண்டினுஞ்
சுந்தர மாதர் துழனியொன் றல்லது
அந்தர வானத்தின் அப்புற மாமே. 9

2991 மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்
எண்ணிற் கலங்கி இறைவன் இவனென்னார்
உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்
தெண்ணிற் படுத்த சிவனவ னாமே. 10

2992 மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்
கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்குஞ்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்
அத்தனை நாடி அமைந்தொழிந் தேனே. 11

2993 அமைந்தொழிந் தேன்அள வில்புகழ் ஞானஞ்
சமைந்தொழிந் தேன்தடு மாற்றமொன் றில்லை
புமைந்தெழும் பூதலம் புண்ணியன் நண்ணி
வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே 12

2994 வள்ளற் றலைவனை வானநன் றூடனை
வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்
கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ லோஎன்று
உள்ளத்தி னுள்ளே யொளித்திருந் தாளுமே. 13

2995 ஆளும் மலர்ப்பதந் தந்த கடவுளை
நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர்
கோளும் வினையும் அறுக்குங் குரிசிலின்
வாளு மனத்தொடும் வைத்தொழிந் தேனே. 14

2996 விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்
பொருந்தில் அவனடி புண்ணிய லோகந்
திருந்தில் அவனடி தீர்த்தமு மாகும்
வருந்தி யவனடி வாழ்த்தவல் லார்க்கே. 15

2997 வானக மூடறுத் தானிவ் வுலகினில்
தானக மில்லாத் தனியாகும் போதகன்
கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளுறும்
பானகச் சோதியைப் பற்றிநின் றேனே. 16

2998 விதியது மேலை யமரர் உறையும்
பதியது பாய்புனற் கங்கையும் உண்டு.

துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்
பதியது வவ்விட்ட தந்தமு மாமே. 17

2999 மேலது வானவர் கீழது மாதவர்
தானிடர் மானுடர் கீழது மாதனங்
கானது கூவிள மாலை கமழ்சடை
ஆனது செய்யுமெம் ஆருயிர் தானே. 18

3000 சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை
ஏழும் இரண்டிலும் ஈசன் பிறப்பிலி
யாழுஞ் சுனையும் அடவியும் அங்குளன்
வாழும் எழுத்தைந்து மன்னனு மாமே. 19

3001 **உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை**
**அலர்கதிர் அங்கியொத் தாதிப் பிரானும்**
**நிலவிய மாமுகில் நீரொத்து மீண்டச்**
**செலவொத் தமர்திகைத் தேவர்பி ரானே.** 20

3002 பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்
பரிசறிந் தங்குளன் மாருதத் தீசன்
பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப்
பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே. 21

3003 அந்தங் கடந்தும் அதுவது வாய்நிற்கும்
பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொருள்
தந்த வுலகெங்குந் தானே பராபரன்
வந்து படைக்கின்ற மாண்பது வாமே. 22

3004 முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினும்
அத்தன் உருவம் உலகே ழெனப்படும்
அத்தனின் பாதாளம் அளவுள்ள சேவடி
மத்தர் அதனை மகிழ்ந்துண ராரே. 23

3005 ஆதிப் பிரான்நம் பிரானவ் வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்
ஆதிப் பிரான்அண்டத் தப்புறங் கீழவன்
ஆதிப் பிரான்நடு வாகிநின் றானே. 24

3006 அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்
பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்
தொண்டர் நடந்த கனைகழல் காண்டொறுந்
தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றானே. 25

3007 உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ
நிலமுழு தெல்லா நிறைந்தனன் ஈசன்
பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே
புலமுழு பொன்னிற மாகிநின் றானே. 26

3008 பராபர னாகிப்பல் லூழிகள் தோறும்
பராபர னாயிவ் வகலிடந் தாங்கித்
தராபர னாய்நின்ற தன்மை யுணரார்
நிராபர னாகி நிறைந்துநின் றானே. 27

3009 போற்றும் பெருந்தெய்வந் தானே பிறில்லை
ஊற்றமும் ஓசையும் ஓசை யொடுக்கமும்
வேற்றுடல் தானென் றதுபெருந் தெய்வமாங்
காற்றது ஈசன் கலந்துநின் றானே. 28

3010 திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்
மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே
புகையனைத் தும்புறம் அங்கியிற் கூடு
முகையனைத் தும்எங்கள் ஆதிப் பிரானே. 29

3011 அகன்றான் அகலிடம் ஏழுமொன் றாகி
இவன்றா னெனநின் றெளியனு மல்லன்

சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே. 30

3012 கலையொரு மூன்றுங் கடந்தப்பால் நின்ற
தலைவனை நாடுமின் தத்துவ நாதன்
விலையில்லை விண்ணவ ரோடும் உரைப்பன்
நரையில்லை யுள்ளுறு முள்ளவன் தானே. 31

3013 படிகால் பிரமன்செய் பாசம் அறுத்து
நெடியான் குறுமைசெய் நேசம் அறுத்துச்
செடியார் தவத்தினிற் செய்தொழில் நீக்கி
அடியேனை உய்யவைத் தன்புகொண் டானே. 32

3014 ஈசனென் றெட்டுத் திசையும் இயங்கின
ஓசையி னின்றெழு சத்தம் உலப்பிலி
தேசமொன் றாங்கே செழுங்கண்டம் ஒன்பதும்
வாச மலர்போல் மருவிநின் றானே. 33

3015 இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை
கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்
தொல்லையன் தூயன் துளக்கிலன் தூய்மணி
சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே. 34

3016 உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நானெனுங்
கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளற் பெருமை வழக்கஞ்செய் வார்கள்தம்
அள்ளற் கடலை அறுத்துநின் றானே. 35

3017 மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங்
கூறுதல் செய்து குரைகழல் நாடுவர்
ஊறுவர் உள்ளத் தகத்தும் புறத்துளும்
வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே. 36

3018 விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்
கண்ணிலும் வந்த புலனல்லன் காட்சியன்
பண்ணினில் வந்த பயனல்லன் பான்மையன்
எண்ணிலா னந்தமும் எங்கள் பிரானே. 37

3019 உத்தமன் எங்கும் உகக்கும் பெருங்கடல்
நித்திலச் சோதியன் நீலக் கருமையன்
எத்தனை காலமும் எண்ணுவர் ஈசனைச்
சித்தர் அமரர்கள் தேர்ந்தறி யாரே. 38

3020 நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்
அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம்
மறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் பாவம்
புறம்பல காணினும் போற்றகி லாரே. 39

3021 இங்குநின் றானங்கு நின்றனன் எங்குளன்
பொங்கிநின் றான்புவ னாபதி புண்ணியன்
கங்குல்நின் றான்கதிர் மாமதி ஞாயி
றெங்குநின் றான்மழை போலிறை தானே. 40

3022 உணர்வது வாயுமே யுத்தம மாயும்
உணர்வது நுண்ணறி வெம்பெரு மானைப்
புணர்வது வாயும் புல்லிய தாயும்
உணர்வுடல் அண்டமு மாகிநின் றானே. 41

3023 தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்
தன்வலி யாலே யணுவினுந் தானொய்யன்
தன்வலி யான்மலை எட்டினுந் தான்சாரான்
தன்வலி யாலே தடங்கட லாமே. 42

3024 ஏனோர் பெருமைய னாகிலும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந் தங்குளன்

வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே. 43

3025 [1]பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளைக்
குண்டாலங் காயத்துக் குதிரை பழுத்தது
உண்டனர் உண்டார் உணர்விலா மூடர்கள்
பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே. 44

---

## 22. சர்வ வியாபி

3026 ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி
ஆயும் அறிவையும் மாயா உபாதியால்
ஏய பரிய புரியுந் தனதெய்துஞ்
சாயுந் தனது வியாபகந் தானே. 1

3027 நானறிந் தப்பொருள் நாடவிட மில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடும்
ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாமே. 2

3028 கடலிடை வாழ்கின்ற கௌவை யுலகத்
துடலிடை வாழ்வுகொண் டுள்ளொளி நாடி
உடலிடை வைகின்ற உள்ளுறு [2]தேவனைக்
கடலின் மலிதிரைக் காணலு மாமே. 3

3029 பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகித்
தெரிந்துட லாய்நிற்குந் தேவர்பிரானும்
இருஞ்சுடர் விட்டிட் டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே. 4

3030 உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டு
இறுதியின் வீழ்ந்தார் இரணம தாகுஞ்

---

பா-ம் — [1] விண்டாலம். [2] தேனைக்

சிறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி
பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே. 5

3031 பற்றி னுள்ளே [1]பரமாய பரஞ்சுடர்
முற்றினு முற்றி முளைக்கின்ற மூன்றெளி
நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரு
மற்றவ னய்நின்ற மாதவன் தானே. 6

3032 தேவனு மாகுந் திசைதிசை [2]பத்துளும்
ஏவனு மாம்விரி நீருல கேழையும்
ஆவனு மாமமர்ந் தெங்கு முலகினும்
நாவனு மாகி நவிற்றுகின் றானே. 7

3033 நோக்குங் கருடன் நொடியே மூலகையும்
காக்கு மவனித் தலைவனு மங்குள
நீக்கும் வினையென் நிமலன் பிறப்பிலி
போக்கும் வரவும் புணரவல் லானே. 8

3034 செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி
ஒழிந்தன வாயு ஒருங்குடன் கூடுங்
கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்
ஒழிந்தில [3]னேழுல கொத்துநின் றானே. 9

3035 உணர்வும் அவனே உயிரும் அவனே
புணர்வும் அவனே புலனும் அவனே
இணரு மவன்றன்னை எண்ணலும் மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. 10

3036 புலமையின் நாற்றமில் புண்ணியன் எந்தை
நலமையின் ஞான வழக்கமு மாகும்
விலமையில் வைத்துள வேதியர் கூறும்
பலமையில் எங்கும் பரந்துநின் றானே. 11

பா-ம்— [1]பரமாய்ச். [2]பத்தையும். [3]கேழுல.

3037 விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்
மண்ணவ னாய்வலஞ் சூழ்கடல் ஏழுக்குந்
தண்ணவ னாயது தன்மையின் நிற்பதோர்
கண்ணவ னாகிக் கலந்துநின் றானே. 12

3038 நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி
நின்றனன் தான்நிலங் கீழொடு மேலென
நின்றனன் தான்நெடு மால்வரை ஏழ்கடல்
நின்றனன் தானே வளங்கனி யாயே. 13

3039 புவனா பதிமிகு புண்ணியன் எந்தை
அவனே உலகில் அடர்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனு மாகும்
அவனே இறையென மாலுற்ற வாறே. 14

3040 உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்
மண்ணின் றியங்கும் வாயுவு மாய்நிற்குங்
கண்ணின் றிலங்கும் கருத்தவன் தானே. 15

3041 எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்
பண்ணுந் திறனும் படைத்த பரமனைக்
கண்ணிற் கவருங் கருத்தில் அதுவிது
உண்ணின் றுருக்கியோர் ஆயமு மாமே. 16

3042 இருக்கின்ற எண்டிசை அண்டம்பா தாளம்
உருக்கொடு தன்னடு வோங்கவிவ் வண்ணங்
கருக்கொடு எங்குங் கலந்திருந் தானே
திருக்கொன்றைவைத்தசெழுஞ்சடையானே. 17

3043 பலவுடன் சென்றஅப் பார்முழு தீசன்
செலவறி வாரில்லை சேயன் அணியன்

[1]அலைவிலன் சங்கரன் ஆதிஎம் மாதி
[2]பலவில தாய்நிற்கும் பான்மைவல் லானே. 18

3044 அதுவறி வானவன் ஆதிப் புராணன்
எதுவறி யாவகை நின்றவன் ஈசன்
பொதுவது வான புவனங்கள் எட்டும்
இதுவறி வான்நந்தி எங்கள் பிரானே. 19

3045 நீரும் நிலனும் விசும்பங்கி மாருதந்
தூரும் உடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞுகன் எம்மிறை
ஊருஞ் சகலன் உலப்பிலி தானே. 20

3046 மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூல னுரைசெய்த முந்நூறு மந்திரம்
மூல னுரைசெய்த முப்ப துபதேசம்
மூல னுரைசெய்த மூன்றும் ஒன்றுமே. 21

## 23. வாழ்த்து

3047 வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே. 22

ஒன்பதாம் தந்திரம் முற்றிற்று

---

பா-ம்— [1]நலவியன், [2]புலவிலகாய்.

# அதிகப் பாடல்கள்

## 1.* உரை நூல்களில் காணப்பட்ட பாடல்கள்*

3048 ஆறு சமய முதலாஞ் சமயங்கள்
ஊற தெனவும் உணர்க உணர்பவர்
வேற தறவுணர் வார்மெய்க் குருநந்தி
ஆறி யமைபவர்க் கண்ணிக்குந் தானே. 1

3049 உடலாங் குகையில் உணர்வாகும் பீடத்
தடலார் சமாதி இதயத்த தாக
நடமா டியகுகை நாடிய யோகி
மிடையாகா வண்ணமே சாதிக்கு மெல்லவே. 2

3050 நிற்ற லிருத்தல் கிடத்தல் நடையோடல்
பெற்ற வக்காலுந் திருவருள் பேராமல்
சற்றியன் ஞானந்தந் தானந்தந் தங்கவே
உற்ற பிறப்பற் றுளிர்ஞான நிட்டையே. 3

3051 நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாத னிருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமே. 4

3052 இணங்க வேண்டா இனியுல கோருடன்
நுணங்கு கல்வியும் நூல்களும் என்செயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே. 5

---

***3048—3067 செய்யுட்களுள் 3048–பெருந்திரட்டு குறுந் திரட்டிலும், 3049, 3050–வைராக்கிய தீப வுரையிலும், 3051 நிட்டானு பூதிவுரையிலும், 3052–3057-அவிரோத வுந்தியாருரை யிலும், 3058—3067–(தருமையாதீன வெளியீடு) முத்தி நிச்சயப் பேருரையிலும் 3068—3094 (திருவாவடுதுறை யாதீன வெளியீடு) திருமந்திரம் கயிலாய சித்தர் உரையிலும் திகழ்வன.**

3053 எவ்விடத் துந்தம் பணியின்மை கண்டோர்
எவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே
அவ்விடத் தைங்கரு மத்தால் அறிதலால்
உவ்விடத் தோருக்கோர் உபாய மில்லையே. 6

3054 ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்த னொருவனும் என்ப தறிந்திலர்
அத்தன் ஒருவனும் என்ப தறிந்திடின்
முத்தி விளக்கு முதல்வனு மாமே. 7

3055 முதலொன்று மானை முதுகுடன் வாலுந்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூற லொக்கும் ஆறு சமயமே. 8

3056 பொங்கும் இருள்நீக்கும் புண்ணியக் கூத்தனை
எங்குமாய் நின்றாடும் ஏகம்பக் கூத்தனைக்
கங்குல் பகலினுங் காணாத கூத்தனை
இங்கென் இடமாக யான்கண்ட வாறே. 9

3057 வாயு விருந்திட வாயு விருந்திடு
மாயு விருந்திடக் காய மிருந்திடும்
காய மிருந்தாற் கருத்து மிருந்திடு
மேய வறியுணர் வுற்றால் வினையின்றே. 10

3058 அரனவன் பாதல மாதி சிவானந்தம்
வருமவை சத்திகள் மூன்றாய் வகுத்திட்
டரனுறு சந்நிதி சேட்டிப்ப வென்றிட்
டிரனுறத் தோயாச் சிவாநந்தி யாமே. 11

3059 அன்பு சிவமென் றறியார் இரண்டென்பர்
அன்பு சிவமென் றறிவார்க் கிரண்டில்லை
அன்பு சிவமென் றறிவால் அறிந்தபின்
அன்பே சிவமாய் அறிந்துகொண் டேனே. 12

3060 ஆவி இருவகை ஆண்பெண்ண தாகி
மேவி இருவர் விருப்புறு மாறுபோல்
தேவியுந் தேவனுஞ் சேர்ந்தின்ப ரூபகம்
ஆவிக்கும் வேறே ஆனந்த மாமே. 13

3061 எட்டான வுட்சமயம் மினவமா மாயை
எட்டாம் புறச்சம யத்துடன் யாவையும்
தொட்டான மாயை இருமாயை தோயாது
விட்டார் சிவமாவர் வேதாந்தப் போதரே. 14

3062 எந்தை பிரான்குணம் எண்ணிலி கோடிகள்
எந்தை பிரான்சத்தி எண்ணிலி யாகினும்
எந்தை பிரான்றனே யான்காண வந்துழி
எந்தைபிரானலாலியாதொன்றுங்காணேனே. 15

3063 கண்ணின் மணியாடு பாவைஎம் மீசனை
உண்ணின் றுணரவல் லாரவர் கட்கு
விண்ணின்று தூறும் உலக மதுகடந்(து)
எண்ணும் பரிசிறே டெண்குண மாமே. 16

3064 குணக்குக் குடக்குத்தெற் குத்தரமேல் கீழ்பால்
இணக்கத் தகுஞ்சைவ மாகியா றென்பர்
தணக்கத் தகுஞ்சிவாத் துவிதஞ்சம் மேளங்
கணக்கொடுமுன் றுறுங் காணவெட் டாமே 17

3065 தேனுக்குள் இன்பஞ் சிவப்போ கறுப்போ
வானுக்குள் ஈசனைத் தேடு மதியிலீர்
தேனுக்குள் இன்பஞ் செறிந்திருந் தாற்போல்
ஊனுக்குள் ஈசன் ஒளித்திருந் தானே. 18

3066 பண்டங்க ளெண்பத்து நான்குநூ றுயிரம்
துண்டஞ்செய் யாரைத் தொடர்ந்துயி ராய்நிற்குங்
கண்டவைதன்னிற்கலந்துண்ணேன்நானென்(று)
உண்டியு மாகி ஒருங்கிநின் றுனே. 19

3067 பவமாம் பரிசு பலபல காட்டுந்
தவமா நெறியில் தலைவரு மான
நவநாத சித்தரு நந்தி அருளால்
சிவமாம் பரிசு திகழ்ந்துசென் றாரே. 20

3068 காணிப் பொன்கொண்டு கடைகடை தோறும்
வாணிபஞ் செய்து மயங்கித் திரிவேனை
ஆணிப் பொன்னான அறிவை யறிந்தபின்
மாணிக்கம் பெற்று மகிழ்ந்திருந் தேனே. 21

3069 வானுக்குள் ஈசனைத் தேடு மருளர்காள்
தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ
தேனுக்குள் இன்பம் சிறந்திருந் தாற்போல்
ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந் தானே. 22

3070 எட்டும் இரண்டும் அறியாத என்னை
எட்டும் இரண்டும் அறிவித்தான் என் நந்தி
எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின்
எட்டும் இரண்டும் இலிங்கம தாமே. 23

3071 வாழை பழுத்துக் கிடக்குது வையகம்
வாழையைச் சூழத் தாழ்கோத்து நிற்குது
தாழைத் திறந்து கனியுண்ண மாட்டாதார்
தாழும் பழத்துக்குத் தன்னாண்ட வாறே. 24

3072 கள்ள வழியில் விழுந்த விளாங்கனி
கொள்ளச் சென் றைவரும் குழியில் விழுந்தனர்
தெள்ளிய ஞானி தெளிவுறக் கண்டபின்
பிள்ளைகள் ஐவரும் பிதற்றொழிந் தாரே. 25

3073 உலையொக்கக் கொல்லன் ஊதும் துருத்திபோல்
கலையொக்கப் பாயும் கருத்தறிவார் இல்லை
கலையொக்கப் பாயும் கருத்தறி வாளர்க்கு
நிலையொக்கச் சீவன் நிறுத்தலும் ஆமே. 26

3074 ஒன்றே கலப்பை உழவெரு தஞ்சுண்டு
ஒன்றைவிட் டொன்று உழன்று திரியாது
ஒன்றைவிட் டொன்றை உழுதுண்ண வல்லாருக்
கன்றுநட் டன்றே அறுக்கலு மாமே. 27

3075 வேராணி யற்று விளைந்தவித் தின்மரம்
பாராணி எங்கும் பரந்தே இருக்குது
தேராணிக் குள்ளே தெளிவுற நோக்கினால்
ஓராணி யாக உகந்திருந் தானே. 28

3076 தஞ்சாவூர்த் தட்டான் தலத்துக்கு நாயகன்
மஞ்சாடி கொள்ளான் வழக்கன்றி மன்றேறான்
துஞ்சான் உறங்கான் தொழில்செய்யான்
அஞ்சாறு நாளைக் கவதியிட் டானே. [சோம்பான்

3077 மத்தக மொத்த சிலந்தி வளையத்துள்
ஒத்தங் கிருந்து உயிருணும் வாறுபோல்
அத்தனும் ஐம்புலத் தாடகத் துள்ளிருந்து
சத்த முதலைந்தும் தானுண்ட வாறே. 30

3078 சொன்னம் குகைமூன்று தானஞ்சு பச்சிலை
மின்ன அரைத்துவை வெள்ளிபொன் னாயிடும்
வன்னம் பதியிந்த வாசிகொண் டூதிடில்
சொன்னம் வாஞ்சித் தொன்றுமென் சிந்தையே.

3079 இருவர் இருந்திடம் எண்டிசை அண்டம்
அரிபிர மாதிகள் ஆரும் அறிந்திலர்
பரிதியும் சோமனும் பாருமும் மிடத்தே
கருதி முடிந்திடம் சொல்லவொண் ணாதே. 32

3080 கோத்த கோவை குலையக் குருபரன்
சேர்த்த சேவடி சென்னியில் வைத்தொரு
வார்த்தை சொல்லி வழக்கறுத் தாண்டவன்
பார்த்த பார்வை பசுமரத் தாணியே. 33

3081 வேதாந்தஞ் சித்தாந்தம் என்னும் இரண்டுக்கும்
போதாந்த மான புரந்தரன் வாழ்வொன்று
நாதாந்த மான ஞானங்கை கூடாதேல்
சேதாந்த மான செனனம் ஒழியாதே. 34

3082 ஆதாரம் ஆறல்ல அப்பால் நடமல்ல
ஓதா ஒளியல்ல உன்மந் திரமல்ல
வேதா கமத்தில் விளங்கும் பொருளல்ல
சூதான நந்தி சொல்லுப தேசமே. 35

3083 உருகிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்கும் துறையறி வாரில்லை
சொருகிக் கிடக்கும் துறையறி வாளர்க்கு
உருகிக் கிடக்குமென் உள்ளன்பு தானே. 36

3084 எட்டினில் எட்டு மதிலொட் டிரட்டியும்
கட்டியை விட்டுக் கலந்துண்ண மாட்டாமல்
பட்டினி விட்டும் பலவிதம் தேடியும்
எட்டும் இரண்டும் அறியாத மாக்களே. 37

3085 கோயிலும் அஞ்சுள கோபுரம் மூன்றுள
கோயில் அடைக்கக் கதவோ ரிரண்டுள
கோயில் திறந்து கும்பிட வல்லார்க்குக்
கோயிலுக் குள்ளே குடியிருந் தானே. 38

3086 நாதன் இருக்கும் நடுமண்ட பத்துள்ளே
நாதாங்கி இல்லாமல் நாலஞ்சு வாசல்
ஆதார மேதென் றறியவல் லார்க்கு
வேதாவின் ஓலை வீணோலை யாமே. 39

3087 அநாதி சொரூபி யாகிய ஆன்மாத்
தனாதி மலத்தால் தடைப்பட்டு நின்றன
தனாதி மலமும் தடையற நீங்கிடில்
அநாதி சிவத்துடன் ஒன்றான வாறே. 40

3088 போக்கு வரவற்ற பூரண காரணன்
நோக்க வரிய நுண்ணியன் நுண்ணியன்
தேக்கு மலத்தன் சிவனுக் குரியவன்
பாக்கில் வியாபி பலவணுத் தானே. 41

3089 கரடிகள் ஐந்தும் கடுங்கானம் வாழ்வன
திருடி இராப்பகல் தின்று திரிவன
கரடிகள் ஐந்தும் சடைத்தலைப் பட்டால்
குருடியர் குத்தினும் குண்டுர லாமே. 42

3090 உச்சிக்கு மேலே உணர்வுக்கும் கீழே
வைச்ச பொருளின் வகையறிவார் இல்லை
வைச்ச பொருளின் வகையறி வாளர்க்கு
எச்ச எருதும் இளவெரு தாமே. 43

3091 வாசலின் கீழே படுகுழி மூன்றுள
ஊசி யிருக்கும் பழஞ்சோற் றிருங்குழி
ஊசி யிருக்கும் பழஞ்சோற்றை நாய்தின்ன
வாசல் இருந்தவர் வாய்திற வாரே. 44

3092 முத்துப் பவளம் பச்சையென் றிவைமூன்றும்
ஒத்துப் புணரும் உணர்வை அறியார்
ஒத்துப் புணரும் உணர்வை அறிந்தபின்
கொத்துப் படுங்கொக்குப் போற்குரு வாமே. 45

3093 பண்ணுத பேரொளிக் கப்புறத் தப்புறம்
எண்ணு யகனுர் இசைந்தங் கிருந்திடம்
உன்னு வெளிய துரைசெயா மந்திரம்
சொன்னுன் கழல்முன் னறிந்தமர்ந் தோமே. 46

3094 ஆரை பழுத்துக் கிடக்குது வையகம்
ஆரையைச் சூழ நீர்கோத்து நிற்குது
ஆரை பறித்துக் கறியுண்ண மாட்டாமல்
கீரைக்கு நெல்லிட்டுக் கெடுகின்ற வாறே. 47

## 2. ஏட்டுப்பிரதியில் காணப்பட்ட பாடல்கள்*

3095 அத்தாளத் தாள மதிலசை விற்கால்
ஒத்தாட வோவாதி யாவேத மூடுற
வைத்தாடி கூடல் தினமான மாகவே
சித்தான நந்திதென் னம்பலத் தாடுமே. 48

3096 ஆகஞ் சிவானந்த வைவொளி பூரிக்கி
லேக வொளியா மிதய கமலத்தே
தாகமுஞ் சோகமுஞ் சார்கலை யுன்னி
லாக மனங்கசிந் தானந்த மாகுமே. 49

3097 ஆணவ மூலத் தகார முதித்திடப்
பேணி யுகாரங் கலாதி பிறிவிக்கத்
தாணு மகாரஞ் சதாசிவ மாகவே
ஆணவ பாச மடர்தல் செய்யாவே. 50

3098 உண்ண லுறங்க லுலாவ லுயிர்போதல்
நண்ணல் நரக சுவர்க்கத்து நாட்டிடப்
பண்ண லவன்பணி யாலிவன் பாலிடை
திண்ணிதிற் செய்கை சிவன் பணியாமே. 51

3099 ஓடும் இருக்குங் கிடக்கும் உடனெழுந்
தாடும் பறக்கு மகண்டமும் பேசிடும்
பாடும் புறத்தெழும் பல்லுயி ரானந்தம்
கூடும் பொழுதிற் குறிப்பிவை தானே. 52

3100 சித்தஞ் சிவமாம் சிவஞானி சேர்விடம்
சுத்தச் சிவாலயம் தொல்பாவ நாசமாம்

---

*3095 முதல் 3108 வரையுள்ள செய்யுட்கள், கையேட்டுப் பிரதிகளில் காணப்பட்டவை என்று சென்னை சைவசித்தாந்த மகா சமாஜம் திருமந்திரம் 3-ம் பதிப்பில் கண்டவையாகும்.

அத்த மழையக மானந்த மேலிடும்
முத்தம் பெருகும் முழுப்பொரு ளாகுமே. 53

3101 திருமந் திரமே சிதம்பரந் தானுந்
திருமந் திரமே சிறந்த உபாங்கந்
திருமந் திரமே திருக்கூத்தின் செய்கை
திருமந் திரமே திருமேனி தானே. 54

3102 திருமேனி தானே திருவரு ளாகுந்
திருமேனி தானே திருஞான மாகுந்
திருமேனி தானே சிவநேய மாகுந்
திருமேனி தானே தெளிந்தார்க்குச் சித்தியே. 55

3103 நெற்றி நடுவுள் நினைவெழு கண்டமு
முற்ற விதையமு மோதிய நாபிக்கீழ்ப்
பெற்ற துரியமும் பேசிய மூலத்தே
யுற்ற வதீத மொடுங்கு முடனே. 56

3104 பத்தி விதையிற் பயிரொன்று நாணத்தைச்
சித்தி தருவை ராக்கத்தாற் செய்தறுத்
துய்த்த சமாதி சிவானந்த முண்டிடச்
சித்தி திகழ்முத்தி யானந்தஞ் சித்தியே. 57

3105 பள்ள முதுநீர் பழகிய மீனினம்
வெள்ளம் புதியவை காண விருப்புறும்
கள்ளவர் கோதையர் காமத்தோ டாடினும்
உள்ளம் பிரியா ஒருவனைக் காணுமே. 58

3106 பாசம தாகும் பழமலம் பற்றற
நேசம தாய்நின்ற வாறுறு நீங்கிடக்
காசமி லாத குணங்கே வலசுத்த
மாசற நிற்ற லதுசுத்த சைவமே. 59

3107 மனவு நனவு கனவது புந்தி
நினைவி லகந்தை சுழுனையுள் நிற்றல்
அதனை யறிசித்தந் துரியமிம் மூன்றின்
நினைவறல் மற்றது நேயத் தளவே. 60

3108 மேலைத் திருவம் பலத்தா மிருகலை
கோலிப் பரானந்த நாதாந்தக் கூத்ததிற்
சீலித்த சித்தர் சிவயோக சித்தராய்
மாலற்ற வர்சுத்த சைவத்து வாழ்வரே. 61

திருமந்திரம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — 3108

**நம்பிரான் திருமூலன் திருவடிகளே வாழ்க.**

---

## திருமூல நாயனார் துதி

ஐய மாக்கடல் ஆழ்ந்த உயிர்க்கெலாம்
கையில் ஆமல கம்மெனக் காட்டுவான்
மையல் தீர்திரு மந்திரஞ் செப்பிய
செய்ய பொற்றிரு மூலனைச் சிந்திப்பாம்.

*—பதிபசுபாச விளக்கம்.*

திருமூல தேவனையே சிந்தைசெய் வார்க்குக்
கருமூலம் இல்லையே காண்.

*—தனிப்பாடல்*

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# பாட்டு முதற்குறிப்பு

| பாட்டு | பாட்டெண் | பாட்டு | பாட்டெண் | பாட்டு | பாட்டெண் |
|---|---|---|---|---|---|
| அகமுக | 2654 | அஞ்சனம்பேர | 727 | அணுகினு | 420 |
| அகம்படி | 1874 | அஞ்சிட்ட | 1034 | அணுமாதி | 668 |
| அகம்புகு | 1804 | அஞ்சில் | 2299 | அணுவில் | 2008 |
| அகரம் | 1860 | அஞ்சுகஅஞ் | 980 | அணுவின் | 2281 |
| அகராதி | 2700 | அஞ்சுகடி | 830 | ,, | 2468 |
| அகலிடத் | 4 | அஞ்சுங் | 2269 | அணுவும் | 2440 |
| அகலிடமா | 1723 | அஞ்சுடன் | 697 | அணுவுள் | 2010 |
| அகன்ஞர் | 1622 | அஞ்சுமடக் | 2033 | அணுதுணை | 216 |
| அகன்ஞன் | 448 | அஞ்சுமுக | 1736 | அண்டங்கட | 3006 |
| ,, | 3011 | அஞ்சுஈசிங் | 2026 | அண்டங்கள் | |
| அகாரமுத | 1753 | அஞ்சுளவானை | 977 | ஏழி | 2732 |
| ,, | 2699 | அஞ்செழுத்தா | 934 | அ...ள்ஏழு | 1871 |
| அகாரம்உயி | 975 | அஞ்செழுந்தாலை | 966 | ,, | 2388 |
| ,, | 2503 | அஞ்சொடு | 2272 | அள்...ஓ | 2749 |
| அகாரவுகார | 951 | அஞ்சொல் | 1109 | அ...ள்தத் | 2771 |
| அக்கரை | 2899 | அடங்காத | 2741 | அண்டஞ்சுரு | 735 |
| அங்கப்பு | 828 | அடங்கு | 137 | அண்டத்தில் | 2777 |
| அங்கமும் | 2720 | அடப்பண் | 148 | அண்டத்தி | 1362 |
| அங்கார் | 1890 | அடிசார | 1603 | அண்டமுத | 1210 |
| அங்கிஉதய | 338 | அடிசேர் | 347 | அண்டமொ | 521 |
| அங்கிசெய் | 421 | அடிதொழ | 2583 | அண்டம்எழு | 2773 |
| அங்கிதம | 2780 | அடிமுடி | 88 | அண்டவொளி | 2806 |
| அங்கிநிறு | 223 | அடியாரவரே | 1672 | அண்ணலைநாடி | 1535 |
| அங்கிமதி | 864 | அடியார்அடி | 2624 | அண்ணலைவா | 1505 |
| அங்கிமிகா | 87 | ,, அர | 2740 | அண்ணல்அரு | |
| அங்கியிற் | 858 | ,, பர | 48 | | 58, 60, 64 |
| அங்கியெழு | 862 | அடியும் | 2917 | அண்ணல்இரு | 766 |
| அங்குச | 2735 | அடிவைத் | 1698 | ,, | 931 |
| அங்குநின் | 2837 | அடுக்கு | 1144 | ,, | 2660 |
| அங்கேயட | 2356 | அடுவன | 2616 | அண்ணல்உட | 1951 |
| அசத்தொடு | 2065 | அடைந்திடு | 1327 | அண்ணிக்கு | 1523 |
| அச்சிவன் | 1885 | அடைவினில் | 924 | அதிபதி | 18 |
| அஞ்சனமேனி | 57 | அணங்கற்ற | 705 | அதிமூட | 2162 |

உ
SIVA SIVA

# Panniruthirumurai Publication Endowment
# In memory of
# Sri-la-Sri ADI KUMARAGURUPARA SWAMIGAL
# Immovable property worth Rs. 50,000



This Endowment is made by **Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal**, Sri Kasi Mutt, Tirupanandal, in memory of the great Scholar Sri Adi Kumaragurupara Swamigal who spread Tamil culture from Cape Comorin to the Himalayas in the 17th century, for propagating the twelve Thirumurais, 1 to 3: sung by Tirugnanasambandamurthy Nayanar; 4 to 6: by Tirunavukkarasu Nayanar; 7: by Sundara murthy Nayanar; 8: by Saint Manikkavachakar; 9: by Thirumaligai Thevar and Senthanar etc; 10: Thirumula Nayanar; 11: Seraman Perumal Nayanar and others and 12: by Sekkilar. The object is to inculcate devotion for the Thirumurais in the student population and train them into good citizenship of the Bharat.

2. The property so endowed is detailed in the schedule hereto attached and consists of Acres 43, Cents 98. wet and drylands etc. in Marathurai village, No. 3 Marathurai vattam and a house and 15 cents dry in Tirupanandal village in Kumbakonam Taluk, Tanjore District and belonging to the donor with patta and miras in his name. The value of the property is Rs 50,000 and the estimated annual income is about Rs. 2,500.

3. The said property is to be vested in the Kumara-gurupara Swamigal Mutt at Srivaikuntam, Tirunelveli

District and it shall be administered by the Managing Trustee of the said Mutt as provided hereunder. The annual net income from the property i. e. excluding Govern ment dues, establishment charges, maramat expenses etc.. shall be utilised for the purpose mentioned in para 4 infra The Managing Trustee of the said Kumaragurupara Swa migal Mutt shall be responsible for the safe and proper investment of the said funds and for making the same available for the regular and efficient conduct of the endowment.

4. The Managing Trustee of the said Mutt at Srivaikuntam should arrange to have the twelve Thirumurais to be printed and published in their serial order or according to necessity arising at any time for a particular Thirumurai. When publishing each Thirumurai the title sheet should contain a note that the publication is made out of the endowment founded on 8-4-1950 by Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avl., Sri Kasi Mutt, Tirupanandal, in grateful memory of SRI ADI KUMARAGURUPARA SWAMIGAL. 25 (twenty five) copies of each publication should be sent free to the Donor and his Successors-in-interest. The other copies should be arranged to be widely distributed in sale at not more than the actual cost. The sale proceeds of the books shall be added to the corpus of the fund with the Managing Trustee. It will be within the discretion of the Managing Trustee to supply copies free of cost to selected well known Libraries, (one copy to each library) serving the needs of lovers of Tamil Literature and culture.

5. A regular account of receipt and expenditure shall be maintained by the said Managing Trustee, which shall be audited by a certified auditor every year. The Managing Trustee shall send to the Donor and his Successors-in-

interest annually a copy of the audit report along with an account showing under different heads, the Thirumurais published, number of copies printed, freely distributed, sold and remaining on hand, the income received there from, the amount spent in publishing Thirumurais and the amount of sale proceeds added to the corpus of the fund, with the Managing Trustee.

6. The income from the property and the sale proceeds of the publication as shown above shall be utilised for the printing and publishing the above mentioned twelve Thirumurais only.

7. This endowment shall not be used or diverted for any purpose other than that for which it is provided as above, and shall be managed as above provided, by the present Managing Trustee of Sri Kumaragurupara Swamigal Mutt, and his successors (Managing Trustee) being in perpetuity.

**Dated 8-4-1950** (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at *Tiruvadamarudur* Sub-Registrar's office on General Stamp of Rs. 375 on 14-4-1950 as number 794 in Book 1, volume 1002, pages 181-186.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் கருணைபாலித்தருளிய "பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி"ச் சொத்தின் வருமானத்திலிருந்து கிரயம் வாங்கப்பெற்ற நஞ்சை நிலங்கள், கட்டப்பெற்ற கட்டிடங்களின் பெறுமானம், ரொக்கத் தொகை விபரங்கள்.

## நஞ்சை நிலங்கள்

| கிரயத் தேதி | கிராமத்தின் பெயர் | சர்வே நிர் | விஸ்தீரணம் | கிரயத் தொகை |
|---|---|---|---|---|
| 1) 5-4-52 | திருப்புளியங்குடி (ஸ்ரீவைகுண்டம் தாலுகா) | 732/2 | 0. 18 செ. | ரூபா 3600 |
| | | 958/2 | 0. 55 செ. | |
| 2) 18-4-52 | ஷை ஷை | 802/2 | 0. 10 செ. | 1575 |
| | | 809/1ம். 962A, | 0. 25½ ,, | |
| | மொத்த விஸ்தீரணம் ஏக்கர் 1. | | 8½ செ. | ரூ. 5175 |

## கட்டிடங்கள்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் மணிவிழாச் சின்னம்

"ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் அருளகம்"

29-3-59 முதல் 30-3-60 வரை கட்டப்பெற்றுள்ள;

மட்டப்பா காரைக்கட்டு வீடுகள் 7

ஓட்டடுக்கு வீடுகள் 6

கார் ஷெட் 1

காலிமனைக் கிரயம், நான்குபக்கம் காம்பவுண்டு மதில்கள், மின்சார விளக்குகள் அமைப்புச் செலவு உட்படப் பெறுமானம் ரூ. 16,721-68

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

**அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

**பொதுமக்களின் அனுகூலத்திற்காக மனமுவந்து**

**நிறுவிய தருமங்கள்**

---

| எண் | தரும விவரம் | முதற்பொருள் ரூ. |
|---|---|---|
| 1. | திருமுறை வளர்ச்சிக்கு 43 தருமங்கள் ... | 12,67,900 |
| 2. | கல்வி அபிவிருத்திக்கு 75 தருமங்கள் ... | 38,21,303 |
| 3. | சைவ சித்தாந்தம் பரப்ப 7 தருமங்கள் ... | 1,56,000 |
| 4. | அன்னதானம் செய்ய 164 தருமங்கள் ... | 26,35,000 |
| 5. | வைத்தியஞ் செய்ய 6 தருமங்கள் ... | 4,23,500 |
| 6. | பொது தருமங்கள் - ஸ்நானகட்டம், அகதிகள் நன்கொடை, தண்ணீர்ப் பந்தல், ஒளிவளர் விளக்குகள், பசுப் பரிசு, கோசம்வர்த்தனம, படிக்காசு நிதி, கல்லெழுத்து முதலிய 124 தருமங்கள் ... | 14,18,590 |
| | ஆகத் தருமங்கள் 420க்கு .... | 97,22,293 |

## முத்திக்கு வித்து

திருமந் திரமே சிவகதிக்கு வித்தாம்;
திருமந் திரமே சிவமாம்;—அருமந்த
புந்திக்கு ளேகினைந்து போற்றுமடி யார்தமக்குச்
சந்திக்குந் தற்பரமே தான்.

— தனிப்பாடல்

திருமூலர் மாலையெனும் தெப்பத்தைப் பற்றிக்
கருவேலை யைக்கடப்போங் காண்.

— சித்தாந்த தரிசனம்

## ஒரு வாசகம்

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் — கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்,

— ஔவையார்

குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் 12-68.

# MYSORE

## M. G. RIBBED K




Manufactured by:–

**The Mysore Paper Mills Limited,**

[In Case of any Complaint Please return